# HINDU LAW

**(IN TAMIL)**

BY

**C. P. APPANNA SASTRY,**

PLEADER,

*Udumalpet, Coimbatore District.*



---

# ஹிந்துல

இது

கோயமுத்தூர்ஜில்லா

உடுமலைப்பேட்டையிலிருக்கும்

வக்கீல்

**C. P. அப்பண்ணாசாஸ்திரியாரால்**

இயற்றப்பட்டது.

---

ERODE.

PRINTED AT THE N K S PRESS,

**1905.**

PRICE Rs. 1—2—0

பிறரிடமிருந்து விலைக்கு வாங்குவதிலும், குடும்ப விஷயமாயும் சொத்து விஷயமாயுமுள்ள மற்றும் பல நடவடிக்கைகளை நடத்துவதிலும், அதனைக் குறித்துள்ள சட்ட சம்பந்தமான விதி விலக்குகளைத் தெரிந்துகொண்டு அவைகளை யனுசரித்து நடப்பதே உசிதமானதாகும். அப்படிப்பட்ட சட்ட விஷயங்களைத் தெரிந்துகொள்ளாமற் செய்யும் நடவடிக்கைகள் பல சந்தர்ப்பங்களில் பல வீண் விவகாரங்களுக்கும் அனாவசியமான கஷ்ட நஷ்டங்களுக்கும் இடமாயிருக்கின்றனவென்பதும் யாவருமறிந்த விஷயம். ஆனதுபற்றி ஹிந்துக்களாகிய நமது குடும்ப பரிபாலனம் சொத்து சுதந்திரம் முதலியவற்றைப் பற்றியுள்ள சட்ட விதிகளை ஹிந்துமகா ஜனங்கள் எல்லோரும் சுளுவாயறிந்துகொள்ளுமாறு இச்சட்டத்தைத் தமிழில் சுருக்கமாய் எடுத்துரைக்க முயன்று இப்புத்தகத்தை எழுதலாயினேன்.

4. பாரிஸ்டர்-அட்-லா ஜான். டி. மெயின்துரை முதலிய சிறந்த லாயர்களாலும் வித்துவான்களாலும் ஆங்கிலேய பாஷையில் எழுதப்பட்டிருக்கும் பிரசித்தி பெற்ற இந்துலா கிரந்தங்களினுடையவும், பல இந்தியன் ஹைகோர்ட்டுகளாலும் சீமையிலுள்ள ப்ரிவி கௌன்ஸில் சபையோராலும் செய்யப்பட்டிருக்கிற ஏராளமான தீர்மானங்களடங்கிய லாரிபோர்ட்டு புஸ்தகங்களினுடையவும் பேருதவியைக்கொண்டு இப்புத்தகம் எழுதப்பட்டிருக்கிறது.

5. மேலும் கனம்பொருந்திய மேலான நியாயசபையார்களாகிய பல ஹைகோர்ட்டுகளாலும் ப்ரிவி கௌன்ஸில் அவர்களாலும் செய்யப்பட்டிருக்கும் எண்ணிறந்த தீர்மானங்களே இவ்விந்துலாவின் முக்கியமான பிரிவாக இருப்பதால், அத்தீர்மானங்களையனுசரித்தே இப்புத்தகம் எழுதப்பட்டிருப்பதுடன் அங்கங்கே சொல்லப்பட்டிருக்கும் சங்கதிகளுக்கு ஆதாரமாக அத்தீர்மானங்களும் கூடுமானவரையில் அந்தந்த இடங்களில் குறித்துக்காட்டப்பட்டுமிருக்கின்றன. ஆகையால் இத்தகைய புத்தகம் இங்கிலீஷ்பாஷை கற்றறியாத இந்துமகா ஜனங்கள் யாவருக்கும் மிக்க உபயோகமாக இருக்குமெனக் கருதி இதை வெளிப்படுத்துகின்றனன்.

உடுமலைப்பேட்டை
1905-ஆ மே-மீ } C. P. APPANNA SASTRY.

# அட்டவணை

| அத்தியாயம் | விஷயம் | | | பக்கம். |
|---|---|---|---|---|
| 1. | சட்டவரலாறு. | ... | ... | 1 |
| 2. | விவாகம். | ... | ... | 9 |
| 3. | சந்தானம் | ... | ... | 22 |
| 4. | ஸ்வீகாரம் அல்லது தத்து. | | ... | 25 |
| 5. | பால்ய சம்ரக்ஷணை. | | ... | 52 |
| 6. | பிதுரார்ஜித சுயார்ஜித வகை சொத்துக்கள். | | | 61 |
| 7. | அவிபக்த குடும்ப நிலைமை. | | ... | 72 |
| 8. | பாகம் | ... | ... | 85 |
| 9. | ஜீவனாம்சம். | ... | ... | 104 |
| 10 | வாரசுபாத்தியம் | ... | ... | 115 |
| 11 | வாரசுகளின் வரிசைக்கிரமம். | | ... | 129 |
| 12 | ஸ்திரீகளின் சொத்துக்கள். | | ... | 144 |
| 13 | பாகார்கமில்லாதஜமீன் முதலியசொத்துக்கள் | | | 1?5 |
| 14 | கடன்கள், | ... | ... | 174 |
| 15 | சொத்துக்களின் விநியோகங்கள் | | ... | 188 |
| 16 | தானதர்மங்கள் | ... | ... | 200 |
| 17 | உயில்கள் | ... | ... | 212 |

## தீர்மானக் குறிப்புகளின் விளக்கம்.

மேலான நியாயஸ்தலத்தார்களாகிய ஹைகோர்ட்டு பிரிவிகௌன்ஸிலிலுள்ள கனம்பொருந்திய ஜட்ஜிகள் அந்தந்த கேசின் நியாயங்களையன்றி நடவடிக்கைகளில் சம்பந்தப்பட்டிருக்கிற சட்ட தாத்பரியங்களையும் விதிகளையும் நன்றாய் துலக்கிக் காண்பித்துத் தீர்மானஞ்செய்து வருகிறார்கள். சட்டப்பிரமாணமானவுள்ள அத்தீர்மானங்கள் எல்லோருடைய உபயோகத்துக்காகவும் அப்போதைப்போது அச்சிடப்பட்டு லா ரிபோர்ட்டுகள் என்று சொல்லப்பட்ட புஸ்தகங்களாக வெளிப்படுத்தப்பட்டு வருகின்றன. 1876-ஞ் சதக்குமுன் ஒவ்வொரு ஹைகோர்ட்டின் ரிபோர்ட்டும் தனித்தனியாய் வெளியாகி வந்தது. அவ்வருஷத்தில் கவர்னமெண்டார் எல்லா ஹைகோர்ட்டுகளின் ரிபோர்ட்டுகளுக்கும் இந்தியன்லா ரிபோர்ட்டுகள் என்ற பொதுப்பெயர் கொடுத்து ஒவ்வொரு ஹைகோர்ட்டின் தீர்மானங்களையும் ஒவ்வொரு பாகமாக அது முதல் அச்சிட்டு வருகிறார்கள். பிரிவிகௌன்ஸிலால் முடிவுசெய்யப்படும் அப்பீல் தீர்மானங்களை மூர் என்ற துரை 1875-ஞ் வரையில் அச்சிட்டு வெளியாக்கி வந்தார். இவை மூர்ஸ் இந்தியன் அப்பீல்கள் என்று சொல்லப்படுகின்றன. 1876-ஞ் முதல் அவைகள் இந்தியன் அப்பீல்கள் என்ற பெயருடன் வெளிப்படுத்தப்பட்டு வருகின்றன. இப்புத்தகத்தின் பல இடங்களிலும் குறிக்கப்பட்டிருக்கும் லா ரிபோர்ட்டுகளிலுள்ள சங்கேதங்கள் அடியில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

3 மதா. ஹை. கோ. ரி. 77=மதராஸ் ஹைகோர்ட்டு ரிபோர்ட்டு 3-வது வால்யம் 77-வது பக்கம்.

7 பம். ஹை. கோ. ரி 249=பம்பாய் ஹைகோர்ட்டு ரிபோர்ட்டு 7-வது வால்யம் 249-வது பக்கம்.

1 கல். 186=இந்தியன் லா ரிபோர்ட்டுகள், கல்கத்தா சீரியில் 1-வது வால்யம் 186-வது பக்கம்.

4 பம். 330=ஷை ரிபோர்ட்டுகள் பம்பாய் சீரிஸில் 4-வது வால்யம் 330-வது பக்கம்.

7 மதா. 3=ஷை ரிபோர்ட்டுகள் மதராஸ் சீரிஸில், 7-வது வால்யம் 3-வது பக்கம்,

10 அல், 272=ஷை ரிபோர்ட்டுகள் அலஹாபாத்து சீரிஸில், 10-வது வால்யம் 272-வது பக்கம்,

12 மூ, இ, அ, 523=மூர்ஸ் இந்தியன் அப்பீல்கள் 12-வது வால்யம் 523-வது பக்கம்,

2இ, அ, 263=இந்தியன் அப்பீல்கள் 2-வது வால்யம் 263-வது பக்கம்,

# 1-வது அத்தியாயம்.

## சட்டவரலாறு.

1. ஜீவகாருண்யரான ஜகதீசனால் படைக்கப்பட்ட இப்பூவுலகிற்கோர் திலகம்போல் விளங்கும் பரதகண்டமெனப் பெயர்பெற்ற நமமுடைய இவ்விந்தியா தேசமானது ஓர் பூர்வீக நாடு, இது அநேகமாயிரம் வருஷங்களுக்கு முன்னமேயே கல்வியிலும் நாகரீகத்திலும் உயர்வடைந்திருந்தது மன்றி, சிறப்புற்றோங்கிய நம முன்னோர்களான ஆரியர்களால் வசிக்கப்பட்டும் மேன்மை பெற்ற இந்து ராஜாக்களால் ஆளப்பட்டும் வந்ததென்பது யாவரும் அறிந்த விஷயம். ஆரியர்களுடைய அனுஷ்டியாயுள்ள இந்து மதமும் அம்மதத்தின் மூலப்பொருளாகிய வேதங்களுமே அந்தகைய கலவித்திறமைக்கும் நாகரீகத்துக்கும் முதற்காரணம். சர்வேசுவர னிடமிருந்துண்டாய் அவரால் ஆரியர்களுக்கு அளிக்கப்பட்ட பெரும பொருளாகிய அவ்வேதங்கள் சுருதிகள் எனவும் சொல்லபபடும்,

### மூலகிரந்தங்கள்.

2. பிரபஞ்சலக்ஷணங்களையும் பரப்பிரும்ம ஸ்வரூபத்தையும் மோக்ஷ சாமபிராசசியத்துக்குள்ள வழிகளையுமன்றி உலக தர்மங்களையும் பற்பல நீதி நியாயங்களையும் முறையிடுகிற அவ்வேதங்களை ஆதாரமாகக் கொண்டே, தெய்வத்தன்மை பொருந்திய மகான்களான மனுச்சக்கிரவர்த்தியும், யாக்ஞவல்கியர், நாரதா, பராசரர், சங்கா, லிகிதா, காத்தியாயனர், கௌதமர், வசிஷ்டர், போதாயனர், ஆபஸ்தம்பர், முதலான பல மகரிஷிகளும் பற்பல நீதி நியாயங்களையும் தர்மங்களையும் குடும்பவாழ்க்கை [illegible] து .சுதந்திரம் முதலியவற்றையும் பற்றி, ஸ்மிருதிகள் [illegible] திரங்கள் தர்மசூத்திரங்கள் முதலான அநேக கிரந்தங்களை [illegible] ய்தருளினார்கள்.

3. இவைகளில் ஆதியானதும் [illegible] ப்பது மனுஸ்மிருதியே. யாக்ஞவல்கிய [illegible]

யை மனுஸ்மிருதிக்கு அடுத்ததாகச் சொல்லலாம். நாரதர், பராசரர், முதலான மற்ற மகான்களின் கிரந்தங்கள் இதற்கும் பின்னிட்டு உண்டானவைகள். இவற்றுள் மனுஸ்மிருதி முதல் யுகமாகிய கிருதயுகத்துக்கும், யாக்ஞவல்கிய ஸ்மிருதி இரண்டாவதான திரேதாயுகத்துக்கும், சங்கலிகிதர்களுடைய ஸ்மிருதிகள் மூன்றாவதான துவாபரயுகத்துக்கும், பராசரருடைய ஸ்மிருதி நான்காவதான கலியுகத்துக்கும் ஆதார கிரந்தங்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகிலும் மனு யாக்ஞவல்கியர் ஆகிய இவ்விருவருடைய ஸ்மிருதிகளே எல்லாவற்றிலும் மேலானவைகள்.

## வியாக்கியான கிரந்தங்கள்.

**4.** மனுவாதி மகான்களால் செய்யப்பட்ட மேற்சொன்ன பல மூல கிரந்தங்களுக்குப் பிற்காலத்தில் அநேக வியாக்கியான கிரந்தங்கள் பல வித்துவான்களால் எழுதப்பட்டன. அவ்வியாக்கியானங்களில் அடியிற் கண்டவை முக்கியமானவைகள் —

(1) **மிதாக்ஷரை-** இது விக்ஞானேச்வர யோகியால் செய்யப்பட்டது. அது பற்றி இதற்கு விக்ஞானேச்வரீயம் என்ற பெயருமுண்டு. இது பெரும்பான்மையில் யாக்ஞவல்கிய ஸ்மிருதியின் வியாக்கியானமாக இருக்கிறது.

(2) **தாயபாகம்-** இது ஜீமூதவாகனரால் செய்யப்பட்டது.

(3) **ஸ்மிருதிசந்திரிகை-** இது விஜயநகர ராஜவம்சம் தக்ஷிணத்தில் அரசுபுரிந்த காலத்தில் இருந்த தேவண்ணபட்டர் என்றவரால் செய்யப்பட்டது. இதை மிதாக்ஷரைக்கு அடுத்ததாகச் சொல்லலாம்.

(4) **தாயவிபாகம்-** இது மேற்படி விஜயநகர இராஜவம்சத்தில் மந்திரியாக இருந்த மாதவய்யர் என்னும் வித்வானால் செய்யப்பட்டது. அதனால் இது மாதவீயம் என்றும் சொல்லப்படும். இது முக்கியமாய் பராசரஸ்மிருதியின் வியாக்கியானமாக இருக்கிறது.

(5) **ஸரஸ்வதிவிலாஸம்-** இது பிரதாபருத்திரர் என்பவரால் செய்யப்பட்டது.

(6) வியவஹாரநிர்ணயம்- இது வரதராஜர் என்பவரால் எழுதப்பட்டது. அதனால் இதற்கு வரதராஜீயம் என்ற பெயரும் உண்டு.

(7) மயூகம்- இது நீலகண்டரால் இயற்றப்பட்டது.

(8) வீரமித்திரோதயம்- இது மித்திர மிஸ்ரா என்பவரால் எழுதப்பட்டது. இதுவும் மேலே சொன்ன மயூகமும் அநேகமாய் மிதாக்ஷரையை அனுசரித்திருக்கின்றன.

(9) தத்தகசந்திரிகை- இது தேவாநந்த பட்டரால் செய்யப்பட்டது.

(10) தத்தகமீமாம்சை- இது நந்த பண்டிதரால் செய்யப்பட்டது. இதுவும் மேற்கூறிய தத்தகசந்திரிகையும் ஸ்வீகார விஷயத்தைப்பற்றிய முக்கியமாய் சொல்லுகின்றன.

5. மேற்கூறிய பல வியாக்கியான கிரந்தங்களில் மிதாக்ஷரையும், தாயபாகமுமே பிரதானமானவைகள். இவை யிரண்டும் முக்கியமான சட்ட விதிகளில் பேதமாயும் வித்தியாசப்படுகிறபடியால் இவைகள் இந்துலாவின் இரண்டு பிரிவுகளாக இருக்கின்றன. தாயபாகமானது இந்தியாவின் வடகிழக்கு பாகமாகிய பங்காளதேசத்தில் முக்கிய ஆதாரகிரந்தமாக வழங்கி வருகிறது. மிதாக்ஷரையானது மற்ற இடங்களாகிய காசிப்பிரதேசத்திலும், மேல் இந்தியாவாகிய பம்பாய் இராஜதானியிலும், தென் இந்தியாவாகிய இச்சென்னை இராஜதானியிலும், ஆதார கிரந்தமாக இருக்கிறது. மேலும் ஸ்மிருதி சந்திரிகை, ஸரஸ்வதிவிலாஸம், வியவஹாரநிர்ணயம், தாயவிபாகம், ஆகிய இவை இத்தென்னிந்தியாவிலும், மயூகம், வீரமித்திரோதயம் ஆகிய இவை மேல் இந்தியாவிலும், மிதாக்ஷரையோடு ஆதாரமாக வழங்கி வருகின்றன.

ஸ்வீகாரம் அல்லது தத்து விஷயங்களைக் குறித்த விதிகளுக்கு தத்தகசந்திரிகை, தத்தகமீமாம்சை என்ற மேற்சொன்ன இரண்டு வியாக்கியானங்களும் ஆதாரமாக இருக்கின்றன.

6. தென் இந்தியாவாகிய நமது சென்னை இராஜதானியில் ஆதாரகிரந்தங்களாக விளங்கும் மிதாக்ஷரை முதலிய நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் சட்ட விதிகளைப்பற்றியே இப்புத்தகத்தில் விசேஷமாய் விவரிக்கப்படும்.

## வழக்கங்கள்.

**7.** ஸ்மிருதிகள் தர்மசாஸ்திரங்கள் முதலான மூலகிரந்தங்களிலும், மிதாக்ஷரை தாய பாகம் முதலான வியாக்கியான நூல்களிலும், சொல்லப்பட்டிருக்கும் விதிவிலக்குகளைத் தவிர, சாஸ்திரங்களில் சொல்லப்படாமலும், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பவைகளுக்கு விரோதமாகவும், அநேக வழக்கங்கள் தொன்று தொட்டு ஜனங்களால் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. அப்படிப்பட்ட **புராதன வழக்கங்களும்** சட்டப்பிரமாணமுள்ளதாக இருக்கிறபடியால் அவைகளையும் இந்துலாவின் ஓர் பாகமாகவே சொல்லவேண்டும்.

**8.** புராதனமாயிருக்கிற ஒரு வழக்கமானது எழுத்து மூலமான சட்ட விதியைக் காட்டிலும் மேலானதாகும் என்று மனுவாலும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆனால் ஒரு வழக்கமானது சட்டப்பிரமாணமுள்ளதாய் அங்கீகரிக்கப்படுவதற்கு அது பலகாலும் கிரமமாயும் நேராயும் சந்தேகமன்னியிலும் நெடுநாளாய் அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிற நல்வழக்கமாக இருக்கவேண்டும். (7 மது 3; 3 மதுரை கோரி 75; 7 மதுரை கோரி 250) புராதனமில்லாமலும் தொடர்ச்சியாய் அனுஷ்டிக்கப்படாமலும், சந்தேகத்துக்கிடமாயும், நியாய விரோதமாயும், துராசார சம்பந்தமாயும், இருக்கிற வழக்கங்கள் சட்டப்பிரமாண முள்ளதாகமாட்டாது (12 மது 214; 1 மது 168; 12 மது 277; 1 மது 168; 1 மது 235; 1 மதுரை கோரி 51; 14 பம 90; 2 அல 49; 1 கல 186; 4 பம 545;) சிலர்கள் கூடி ஒப்பந்தமாய் நடத்திவருவதும் சட்ட பிரமாணமுள்ள வழக்கமாகமாட்டாது. (8 மு. இ. அ. 420.)

**9.** ஒரு சரியான வழக்கமானது ஒரு பிரதேசத்தையாவது ஒரு கூட்டத்தை அல்லது ஜாதியையாவது ஒரு குலம் அல்லது குடும்பத்தையாவது பற்றியதாக இருக்கலாம் (12 மு. இ. அ. 523; 6 மு. இ. அ. 164; 2 இ. அ. 263; 17 இ. அ. 134; 4 மது 272; 6 மது 274; 16 மது 54;)

**10.** தொன்று தொட்டு கிரமமாய் அனுஷ்டிக்கப்பட்டு வந்திருப்பதைத்தவிர ஒரு வழக்கமானது திருப்தியாயும் சந்தே

கமன்னியிலும நியாயஸ தலஙகளில ரூபிககப்படவேண்டும். (3 ம தறைஹ கோரி 75; 14 மு. இ. அ. 570; 15 மதா 307;)

11. மேறசொலலியவாறுன ஒரு வழககம எழுதது மூல மாயிருககிற சாஸதிர விதிகளையுமகூட மீறினதாகும. நிசசயமா யும நியாயமாயும புராதனமாயும உளள ஒரு வழககமானது சாஸ திர விதிகளுககு நேர விரோதமாக இருநதாலும அவவழக்கமே பிரமாணமாகவும சட்டமாகவும நியாயஸதலததாரால ஒபபுககொ ளளப்படவேணடும. (5 மு. இ. அ. 169; 12 மு. இ. அ. 436; 14 மு. இ. அ. 585, 11 மதா 398; 13 மதா 406; 16 மதா 54; 15 இ. அ. 51;10 அல 272; 17 இ. அ. 134;)

12. சாஸதிர விரோதமாயிருககிற ஒரு வழககமானது திருப்தியாய ருசுபபடுததபபடாவிட்டால அது நியாயஸதலஙக ளில ஒபபுககொளளபபடமாட்டாது. 24 அல. 273;

## ஆக்ட்டுகள்.

13. ஸமிருதி தாமசாஸதிரம முதலிய பூர்வீக கிரந்தங்க ளில சொலலபபட்டிருககும விதிகளில பெருமபானமையை நமது இஙகிலீஷ இராஜாஙகததார அஙகிகாரம செயதிருப்பதோடு காலதேசவாததமானததை அனுசரிததுஆஙகாஙகு சில மாறு பாடலகளையும நூதன விதிகளையும பல ஆக்ட்டுகள் மூலமாக ஏற படுததியிருக்கிறாாகள. அவறறுள முககியமானவைகளாவன:

(1) மதப்பிரஷடனாயாவது ஜாதி பிரஷடனாயாவது போன ஒரு ஹிநது தன குடுமப சொததிலுடைததாயிருககும பாகபாததியம வாாசு பாததியம முதலிய சுதநதிரங்களை இழநது விடுகிறுன எனறு நமது தாமசாஸதிரங்களில் சொலலப்பட்டிரு ககிறது. ஆனால அபபடிபபட்ட பிரஷடன அவ்வித காரணததி னுலே குடுமப சொததுககளிலுள்ள சுதநதிரஙகளை இழககமாட் டான எனறு நமது இநதியா கவாணமெணடாா 1850-வருஷததிய 21-வது ஆகடடில பிரசுரித திருககிறாாகள.

(2) பிராமமணர் முதலிய மேல் ஜாதியாருக்குள் வித வைகள் இக்காலத்தில புனா விவாகம் செயது கொள்ளக்கூடா தென்று ஏறபட்டிருக்கிறது. ஆனால் எல்லா ஹிந்துவிதவைக ளும் இஷ்டமானுல் புனர்விவாகம செய்துகொள்ளலாமென்று

1856-௵த்திய 15-வது ஆக்டில் கவர்ன்மெண்டார் பிரசுரித்திருக்கிறார்கள்.

(3) 16 வயதுக்குட்பட்ட பாலியர்கள் மைனர்களென்று ஹிந்து சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இது விஷயமாய் இந்தியா கவர்ன்மெண்டார் 1875-௵த்திய 9-வது ஆக்டாகிய இந்தியன் மெஜாரிடி ஆக்டு என்ற சட்டங்களைச்செய்து அதில் பாலியாவஸ்தை என்னும் மைனாரிடியானது சாதாரணமாய் 18-வது வயது முடிந்தபிறகே நீங்குகிறதென்றும், நியாயஸ்தலத்தாரால் நியமிக்கப்பட்டிருக்கும் கார்டியனுடைய ரக்ஷணைக்குட்பட்டாவது கோர்ட்டு ஆப் வார்ட்சாருடைய விசாரணைக்குட்பட்டாவது இருக்கும் மைனர்கள் 21 வயது சென்றபிறகே மைனாரிடியிலிருந்து நீங்கி மெஜாரிடியாகிய தக்க வயதையடைகிறார்கள் என்றும் விதித்திருக்கிறார்கள்.

(4) தகப்பனிடமிருந்து யாதொரு சொத்தையுமடையாமலிருந்தபோதிலும் அவன் பட்ட கடன் முழுவதையும் மகனானவன் கொடுக்கக்கடமைப்பட்டிருக்கிறான் என்று ஹிந்து தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இப்போது தகப்பனிடமிருந்து ஏதாவது சொத்தையடைந்திருந்தால் மட்டும் அச்சொத்தினளவுக்கு தகப்பன் பட்ட கடனை மகன் தீர்க்கக் கடமைப்பட்டிருக்கிறான். (14-வது அத்தியாயத்தைப் பார்க்க.)

(5) சொத்துக்களை உயில் மூலமாய் விநியோகம் செய்யுமதிகாரம் ஹிந்து தர்மசாஸ்திரங்களில் தெளிவாய்ச் சொல்லப்படவில்லை. 1870-௵த்திய 21-வது ஆக்டாகிய ஹிந்து உயில் ஆக்டு என்னும் சட்டத்தின்படி ஒரு ஹிந்துவானவன் தன் சொத்துக்களை தான் இறந்த பிறகு இன்னன்னார் அடைந்துகொள்ளவேண்டுமென்பதாக உயில் என்ற மரண சாசனத்தை எழுதிவைக்கலாம்.

(6) ஹிந்து தர்மசாஸ்திரங்களின்படி எந்த விஷயத்துக்கும் எழுத்துமூலமான தஸ்தாவேஜு ஏற்படவேண்டுமென்ற அவசியமில்லை. ஆனாலும் நூறு ரூபாய் மொத்தத்துக்குக் குறையாத ஏதாவது சொத்துக்களினுடைய ஒத்தி, கிரயங்களும் எல்லா

ஸ்தாவர சொத்துக்களினுடைய தானமும், எழுத்து மூலமான தஸ்தாவேஜினாலேயே ஏற்படவேண்டுமென்று 1882-௵த்திய 4-வது ஆக்டில் விதிக்கப்பட்டிருக்கிறது.

## கோர்ட்டு தீர்மானங்கள்.

**14.** மிக விசாலமான இவ்விந்தியா தேசத்தின் பல இடங்களிலும் அப்போதைக்கப்போது ஏற்பட்டு வருகிற பற்பல விவகாரங்களிலுள்ள ஹிந்துலா சம்பந்தமான சட்டவிதிகளைப்பற்றி சென்னைப்பட்டணம், கல்கத்தா, பம்பாய், அலகாபாத்து, முதலான இராஜதானிகளில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் கனம் பொருந்திய ஹைகோர்ட்டார் அவர்களும், இவைகளுக்கும் மேலாய் இங்கிலாந்திலிருக்கும் மாட்சிமை தங்கிய இந்தியா சக்கரவர்த்தியார் அவர்களுடைய பிரிவிகௌன்ஸிலில் சபையாயிருக்கிற கனம் பொருந்திய ஜட்ஜிகளும் அநேகமான தீர்மானங்களைச் செய்திருக்கிறார்கள். மகா மேதாவிகளும் நியாயவான்களுமான கனம்பொருந்திய ஜட்ஜிகளால் செய்யப்பட்டு வருகிற எண்ணிறந்த அந்தத் தீர்மானங்கள் எல்லா கோர்ட்டுகளிலும் சட்டப்பிரமாணமாக ஒப்புக்கொள்ளப்பட்டு வருகிறபடியால் அவைகளின் தொகுதியே இப்போது வழங்கும் ஹிந்துலாவின் முக்கியபாகமாக விளங்குகின்றது.

அத்தீர்மானங்கள் இப்புத்தகத்தின் பல இடங்களிலும் சொல்லப்பட்டும் குறிக்கப்பட்டுமிருக்கிறது.

## இந்துலா யாருக்கு சம்பந்தப்பட்டது.

**15.** ஆரியர்களால் செய்யப்பட்ட தர்மசாஸ்திரங்களை யனுசரித்ததாயிருக்கிற இவ்விந்துலாவானது ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்களுக்குக் குறித்ததானதேயன்றி அம்மதத்தினின்றும் நீங்கி மகம்மதிய கிறிஸ்துவ முதலான அன்னிய மதங்களிற் சேர்ந்தவர்களுக்கு இவ்விந்துலா சம்பந்தப்படமாட்டாது.

**16** ஒரு ஹிந்துவானவன் கிறிஸ்துவனாய் போனாலும் அவனுக்கு கிறிஸ்துவர்களைப்பற்றி ஏற்பட்டிருக்கும் 1865-௵த்து 10-வது ஆக்டாகிய இந்தியன் ஸக்ஸெஷன் ஆக்டு என்னும் சட்டமே சம்பந்தப்பட்டதாகும் ( 2 மது 209; 6 கல் 794; 11 மது 209; 23 பம் 543; 19 பம் 183; 9 மது 166; )

**17.** ஒரு ஹிந்துவானவன் மகம்மதிய மதத்தில் சேர்ந்து போனால் அவனுக்கு மகம்மதியலாவே சாதாரணமாய் சம்பந்தப்படும். மேலும் மகம்மதிய மதத்தில் சேருவதற்குமுன் அவன் உடைத்தாயிருந்த சொத்துக்கள் ஹிந்துலா தாயபாத்திய விதியையும், பிற்பாடு சம்பாதித்த சொத்துக்கள் மகம்மதியலா தாயபாத்தியவிதியையும் அனுசரிக்கும். (10 மு. இ. அ. 537; 10பம1;) ஆனால் ஒருவன் மகம்மதிய மதத்தில் சேர்ந்த பிறகும் இந்துார சம்பிரதாயங்களையே நெடுகிலும் அனுஷ்டித்துவந்தால் தாயபாத்தியம் முதலான சொத்துக்களைப்பற்றிய சுதந்திர விஷயத்தில் அவனுக்கு ஹிந்துலாவே சம்பந்தப்பட்டதாகும் என்று பம்பாய் கலகத்தா ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள் 6 பம 452; 9 பம 115; 10 பம 1; 3 கல 694; 20 பம 57;

## மலையாளத்தில் வழங்கும் மருமக்கதாயச் சட்டம்.

**18.** தென் இந்தியாவின் மேற்கு சமுத்திரக்கரையையடுத்திருக்கும் மலையாள இராசசியத்தின்கண் வசிக்கும் நாயர் ஜாதியார்களுக்குள் **மருமக்கதாயம்** என்ற சம்பிரதாயமானது வெகு காலமாக வழங்கிவருகிறது. தகப்பன் சொத்துக்கு மகன் பாத்தியஸ்தன் என்று சாதாரணமாய் எல்லா விடங்களிலும் வழங்கிவரும் தகப்பனைப்பற்றிய மக்கள் தாயம் போலல்லாமல், குடும்ப நிலைமையானது அந்நாயர் ஜாதியார்களுக்குள் தாயைப்பற்றியதாக இருக்கிறது. ஒரு புருஷனுக்குப் பிறக்கும் மக்கள் அவனுடைய பெண்ஜாதி வீட்டிலேயே வளர்ந்துகொண்டு அப்பெண்ஜாதியின் பிறந்த குடும்பத்தையே சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். ஆனதுபற்றி தாயுடன் பிறந்தவனை அம்மானுடைய சொத்துக்கு மருமான் பாத்தியஸ்தன் என்ற மருமக்கதாயம் அங்கு வழங்கி வருகிறது, மேலும் குடும்பத்தில் பிறக்கும் மூத்த புருஷனே தார்வாடு என்று சொல்லப்படுகிற குடும்ப சொத்துக்களைப் பரிபாலனமும் செய்யும்படியான அதிகாரத்தையடைகிறான். சொத்துக்களை பாகஸ்தர்கள் பிரித்துக்கொள்ளும் வழக்கமும் அவர்களுக்குள் கிடையாது, குடும்ப சொத்து பூராவும் தலைவனை கர்ணவனுடைய ஆளுகைக்குட்பட்டதாயும் மற்றவர்கள் அதில் ஜீவனாம்ச பாத்தியஸ்தர்களாகவும் இருக்கிறார்கள். நெடுநாளாய்

வழங்கிவருகிற இவ்வித வழக்கமே அநநாயா ஜாதியார்களுடைய சட்டமாகும்.

## 2-வது அத்தியாயம்.

## விவாகம்.

**19.** ஜனங்களுடைய பொது நன்மையின் பொருட்டும் ஒற்றுமை அபிமானம் முயற்சி முதலிய நற்குண நற்செய்கைகளின் பொருட்டும், ஆண் பெண் இருவரும் சிநேகசம்பந்தமாக மாத்திரம் இராமல் விவாகம் என்று சொல்லப்பட்ட ஸம்ஸ்காரத்தைச் செய்துகொண்டு புருஷன் பெண்ஜாதி என்ற விசேஷ சம்பந்தத்துடன் வாழவேண்டுவது அவசியம். விவாகம் என்ற ஒரு வரம்பு கட்டுப்படடிராமல் ஸ்திரீ புருஷா இருவரும் அவரவாகளிஷ்டப்படி நடப்பாாகளேயானால் அது அநேக விபரீதங்களுக்கும் கெடுதிகளுக்கும் காரணமாகி, ஜனங்களுக்குள் அமரிக்கையும் க்ஷேமமும் அற்று, இராஜாங்கமில்லாத தேசம்போல உலகம் நாசத்தை யடையும். ஆனதுபற்றி விவாகம் செய்துகொண்டு ஒரு கட்டுக்குள்ளடங்கி வாழும் ஸ்திரீ புருஷாகளுடைய வாழ்வே எல்லா நன்மைகளுக்கும் சுகங்களுக்கும் காரணமாயிருப்பதுடன், அதுவே கௌருவமுள்ள வாழ்வாகவும் மதிக்கப்படும். அப்படிப்பட்ட வாழ்வே உலகத்தாரால் ஒப்புக்கொள்ளக்கூடிய குடும்ப நிலைமை என்றும் சொல்லப்படும். மேலும் பொதுவான பிரஜா விருத்தியின் பொருட்டன்றி அவரவாகளுடைய கிரமமான குல விருத்தியின் பொருட்டும், வைதிககருமங்களைச் செய்வதற்குரிய யோக்கியதையைப் பெறும்பொருட்டும், ஒவ்வொரு ஆணும் பெண்ணும் விவாகம் என்ற சம்பந்தத்தைச் செய்துகொள்ளவேண்டுமென்று ஹிந்து தாமசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**20.** ஸ்திரீ புருஷாகளுக்குள்ள விவாக சுதந்திரங்களும், விவாகத்துக்குரித்தான சடங்கு முதலியனவும் தேசங்கள் தோறும் மதங்கள் தோறும் வேறுபட்டிருக்கின்றன. ஆனாலும் ஸ்திரீயைக் காட்டிலும் புருஷனே சாதாரணமாய் தேகஅமைப்பு தேக

பலம் மனோ தைரியம் முதலியவைகளில் மேம்பட்டவனாக இருப்பதால் ஸ்திரீயானவள் சுபாவத்தில் புருஷனுக்குட்பட்டவளாகவே யிருக்கிறாள். அதுபற்றி விவாக விஷயத்திலும் புருஷனுக்கே அதிக சுதந்திரம் இந்துலாப்படிக்கும் ஏற்பட்டிருக்கிறது. மேலும் ஹிந்து ஸ்திரீகள் எல்லோரும் விவாகம் செய்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள். புருஷர்களுக்கு அவ்வித கட்டாயமில்லை.

**21.** ஒரு ஹிந்து புருஷனானவன் இவ்வளவு என்ற எண்ணிக்கையில்லாமல் தனக்கிஷ்டமானபடி பல பெண்சாதிகளையும் கூட விவாகம் செய்துகொள்ளலாம். 1 மதுறை கோரி 375. ஆனால் ஒரு ஹிந்து ஸ்திரீயானவள் ஒரு புருஷனுக்கு மேற்பட்டு விவாகம் செய்துகொள்ளக்கூடாது. ஒரு ஸ்திரீயானவள் ஒரே காலத்தில் பல புருஷர்களை விவாகம் செய்துகொள்ளும் வழக்கம் ஆரிய ஜாதியிற் சேராத நாகரீகமற்ற ஜாதியாருக்குள்ளும் மலை பிரதேசத்தவர்களுக்குள்ளுமே வழங்கி வருகிறது. இப்போது ஒரு ஹிந்து ஸ்திரீயானவள் தன் புருஷன் உயிரோடிருக்க வேறு புருஷனை விவாகம் செய்துகொண்டால் அவள் இந்தியன் பினல் கோடு 494-வது பிரிவின்படி தண்டிக்கப்படத்தக்க குற்றத்தைச் செய்தவளாகிறாள்.

**22.** ஆதிகாலத்து வழக்கத்தின்படி விவாகம் எட்டு வகைப்படும்; அவைகளாவன :—

(1) **பிராம்மம்**- வேதாத்தியயனம் செய்திருக்கும் ஒரு பிராம்மணனை வரவழைத்து உபசரித்து கன்னிகையை மனப்பூர்வமாய்க் கொடுப்பது.

(2) **தைவம்**- ஆசாரியனாக இருந்து வைதிகச் சடங்குகளைச்செய்து முடிக்கும் பிராமமணனுக்கு கன்னிகையை அலங்கரித்து கொடுப்பது.

(3) **ஆரிஷம்**-விவாகம் செய்துகொள்பவனிடமிருந்து ஒன்று அல்லது இரண்டு ஜோடி பசுக்களைப் பெற்றுக்கொண்டு கன்னிகையைக் கொடுப்பது

(4) **பிராஜாபத்தியம்**- கன்னிகையை விவாகஞ் செய்து கொள்ள விரும்புகிற ஒருவனுக்கு கன்னிகையைக் கொடுத்து

அகநதுடன் லௌகிக வைதிக அனுஷ்டானங்களைச் சரிவர நடத்திக்கொண்டு இருவரும் வாழ்ந்திருங்களென்று அவர்களை ஆசீர்வதிப்பது.

(5) ஆசுரம்- விவாகஞ்செய்துகொள்ளுகிறவன் பெண்ணின் தகப்பனுக்கும் அவளைச் சேர்ந்தவர்களுக்கும் அவளுக்கும் வேண்டிய திரவியத்தைக்கொடுத்து திருப்திசெய்து பெண்ணையடைவது.

(6) காந்தர்வம்- ஸ்திரீ புருஷர் இருவரும் ஒருவர்மேல் ஒருவர் நட்பும் ஆசையும் கொண்டு பெற்றோர் முதலியவர்களுடைய தகவலன்றியில் தாங்களே கூடிச் சுகித்திருப்பது.

(7) ராக்ஷஸம்- பெற்றோர் முதலியவர்கள் வசத்திலிருக்கும் பெண்ணை பலத்தால் ஜெயித்து இழுத்துக்கொண்டு போவது.

(8) பைசாசம்- கன்னிகை தூங்கும்போதும் மயக்கங்கொண்டிருக்கும்போதும் புத்தி சுவாதீனமில்லாமலிருக்கும் சமயம் பார்த்து அவளுடன் கூடுவது.

**23.** ஸ்திரீ புருஷர்களுக்குள் ஏற்படக்கூடும் சம்பந்தங்கள் இவ்விதம் எட்டு வகையென்பட்ட போதிலும், கன்னிகையின் சொந்தக்காரர்களாகிய தகப்பன் முதலியோர் சம்மதித்துக் கொடுத்த பின் அவளை யடைவதே விவாகம் என்ற பெயரை யுரித்தாகும். ஆதலால் முதலில் சொல்லிய ஐந்துமே சரியான விவாகங்கள் என்று சொல்லப்படும். கடைசி மூன்றும் உலகத்தால் ஒப்புக்கொள்ளாத தகாத குற்றமுள்ள செய்கைகளாகுமே யன்றி க்ரமமான விவாகங்களாக மாட்டாது. மேலும் கடைசியிரண்டாகிய இராக்ஷஸமும் பைசாசமும் இக்காலத்தில் இந்தியன் பினல்கோடு 366, 376-வது பிரிவுகளின்படி கடினமாய்த் தண்டிக்கப்படத்தக்க பெருங் குற்றங்களாகவும் இருக்கின்றன.

**24.** முதல் மூன்று விவாகங்களில் பெண்ணின் தகப்பனுடைய மனப்பூர்வமான சம்மதம் இருக்கிறபடியால் அவை உத்தம விவாகங்களென்றும், நான்காவது ஐந்தாவதில் அச்சம்மதம் பொருள் கொடுத்துப் பெறப்படுகிற படியால் அவை மத்திம வி

வாகங்கபொன்றும, உலகததாா ஒபபுகபொள்ளததகாத கடைசி மூன்றும அதமவிவாகஙகள எனறும சொலலபபடும.

**25.** இவ்வெட்டு வகைகளில முதலாவதாகிய பிராம்மமும் ஐந்தாவதாகிய ஆசுரமும் தவிர மறறவை இககாலத்தில அனுஷ்டானத்திலில்லே. இவவிரண்டில சுதத கனனிகாதான மாகிய பிராமமம சிரேஷ்டமானதாயும பொருள் கொடுததுக் கனனிகையை யடைவதான ஆசுரம கனிஷ்டமானதாயு மிருநதாலும கனிஷ்டமானதாயிருககிற ஆசுரவிவாகமே இபபோது எஙகும விசேஷமாய் வழஙகி வருகிறது. மேலும அது பிராமமணாகளுக்குள்ளுங் கூட சரியான விவாகமெனறே நியாயஸதலததாரால ஒபபுக்கொளளபபட்டு மிருககிறது. 13 மது 83.

### வயது.

**26.** விவாகம செய்து கொள்ளுகிற ஆண் பெண் இருவரில ஆணே மேமபட்டவனுகவும ஸதிரீயை தன்னுள்ளடககியாள வேண்டிய எஜமானனுகவு மிருக்கிறுன. அதுபறறியும பெண்ணுனவள் தேகவளாசசியையும பருவகாலததையும ஆணைககாட்டிலும சீக்கிரமாக அடைகிற படியாலும பெண்ஜாதியைவிட புருஷனே வயதில் பெரியவனுக இருககவேணடும. தாம சாஸ்திரங்களிலும புருஷனே பெரியவனுக இருககவேண்டுமென்று சொல்லபபட்டிருக்கிறது. இது பிராமமணர் முதலிய முதல் மூன்று ஜாதியாராலும சூததிராகளில் பெருமபானமையோராலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஆனால இதசெதன்னிநதியாவில் சில வேளாளாகளிலும தொட்டியா முதலிய ஜாதியாாகளிலும சிறு பையனுககு பெரிய கொமரியைக கட்டும துாவழக்கம வெகு காலமாக நடநது வருகிறது. அபபடிபபட்ட விவாகமும் வழககததை யனுசரிததுச செலலு படியுளளதாக இருப்பதுமன்றி அந்த ஸதிரீக்குப் பிறக்கும பிளளைகள யாவும புருஷனுடையதாகவே பாவிக்கபபட்டும வருகின்றன.

**27.** ஒரு பெண்ணுனவள் சாஸதிரங்களின்படி எட்டாவது வயதில் விவாகத்துக்குத தகுதியுள்ளவளாகிறுள். பருவகாலததை யடைந்தவுடன் மனமானது விஷயாதிகளில் பிரவேசித்துச சுகானுபவங்களைத்தேட விரும்பித் தன்னிஷ்டம்போல சஞ்சரிக

கத்தொடங்குமாதையால், அம்மனதை அவ்விதம் திரியவொட்டாமல் ஓர் வரம்புக்குள்ளடக்கி வைக்கும்படியான சாதனத்தை இளம்பிராயத்திலேயே ஏற்படுத்தி வைப்பது மிக்க நன்மையைப் பயக்கும் எனக்கருதி, நமது பெரியோர்கள் பெண்களுக்கு சிறு வயதிலேயே விவாகத்தைச் செய்து முடிக்கவேணுமென்று விதித்திருக்கிறார்கள். இவ்விதியானது பிராமணர்களுக்குள் கண்டிப்பாய் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. பிராமண கன்னிகையானவள் விவாகமாகாமலே புஷ்பவதியாய் விட்டால் சாஸ்திரங்களின்படி அவள் ஜாதி பிரஷ்டையாய் விடுகிறாள்.

28. பிராமணர்களன்றி க்ஷத்திரிய வைசிய ஜாதியார்களும் சூத்திரர்களில் மேலான வகுப்புகளைச் சேர்ந்தவர்களும் பெண்களுக்குப் பருவகாலத்துக்கு முந்தியே விவாகம் செய்கிறார்கள். ஆனால் சூத்திரர்களில் பெரும்பான்மையோரும் அதற்குக் கீழ்ப்பட்ட ஜாதியார்களும் பருவகாலத்துக்குப் பிறகே பெண்களுக்கு சாதாரணமாய் விவாகம் செய்கிறார்கள்.

29. விவாகத்துக்குரிய ஆண் பெண் இருவரும் ஒரே ஜாதியையும் வெவ்வேறு குடும்பத்தையும் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும்.

30. ஆனால் முந்தின யுகங்களாகிய ஆதிகாலத்தில் மேல் ஜாதிப்புருஷர்கள் கீழ்ஜாதிப் பெண்களையுங்கூட விவாகம் செய்து கொள்ளலாமென்றிருந்தது. அது இப்போது அனுஷ்டானத்தில் இல்லை. இக்காலத்தில் அவரவர்கள் அந்தந்த ஜாதியிலேயே விவாகம் செய்துகொள்ளவேண்டுமென்பது விதியாக இருக்கிறது.

31. விவாகிதர்கள் வெவ்வேறு குடும்பங்களைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டுமென்ற இரண்டாவது விதிப்படி, ஆண் பெண் இருவரும் ஒரே கோத்திரத்தையும் குலத்தையும் சேர்ந்தவர்களாக இருக்கக்கூடாது.

32. மேலும் பெண்ணானவள் புருஷனுக்கு தகப்பன் வழியிற் சேர்ந்த பந்துவாயிருந்தால் ஏழு தலைமுறையும், தாய் வழியிற்சேர்ந்த பந்துவாயிருந்தால் நான்கு தலைமுறையும் விட்டு விலகினவளாக இருக்கவேண்டும். இவ் விலக்கின்படி ஒருவன் தன் அத்தையின் மகளையும் மாமன் மகளையும் சுத்தமாய

விவாகம் செய்துகொள்ளக்கூடாது. ஆனால் இவ்விலக்குகள் வெகுகாலமாக எங்கும் அனுஷ்டானத்திலில்லை. மேலும் சாஸ்திரங்களில் தள்ளப்பட்டிருக்கிற இவ்விவாகங்களே தென் ஹிந்தியாவாகிய நமது ஜில்லாக்களிலும் மேல் இந்தியாவிலும் சாதாரணமாய் வழங்கிவருகிறது. சில ஜாதியாருக்குள் அத்தை மகள், மாமன் மகளன்றி சகோதரியின் மகளையுங்கூட விவாகம் செய்துகொள்ளுகிற வழக்கமும் ஏற்பட்டிருக்கிறது. சூத்திரர்களும் அதற்கு கீழ்ப்பட்ட கள்ளர், மறவர், அகம்படியர் முதலிய ஜாதியர்களும் மேற்கூறிய விலக்குகளுக்குள்ளடங்கிய பெண்களையே முறைமைப்பெண்களென்று பாத்தியம் பாராட்டி விசேஷமாய் விவாகம்செய்து வருகிறார்கள். ஆகையால் இப்படிப்பட்ட எல்லா விவாகங்களும் வழக்கத்தையனுசரித்து இக்காலத்தில் செல்லுபடியுள்ளதாகவே யிருக்கின்றன.

**33.** பெண்ணை விவாகஞ்செய்து கொடுக்கும் விஷயத்தில் அவளுடைய சுபாவ கார்டியனான தகப்பனே முதல் பாத்தியஸ்தனாக இருக்கிறான். தாயினுடைய சம்மதியில்லாமலே தகப்பன் பெண்ணை விவாகம் செய்துகொடுத்துவிடலாம். தகப்பனுக்குப் பிறகு, பாட்டன், சகோதரன், சிற்றப்பன் பெரியப்பன் ஆகிய இவர்களும், இவர்களுக்கும் பிறகு தகப்பன் வழியைச் சேர்ந்த மற்ற பந்துக்களும், அதற்குப் பிறகு தாய் வழியைச் சேர்ந்த மற்ற பந்துக்களும், கடைசியில் தாயாரும், பெண்ணை விவாகம் செய்துகொடுக்க பாத்தியஸ்தர்களாக இருக்கிறார்கள். தாயார் இல்லாவிடில் தூரபந்துக்களும் பெண்ணை விவாகம் செய்து கொடுக்கலாம். தூரபந்துக்களும் இல்லாவிட்டால் கன்னிகையானவள் அரசனுக்குத் தெரிவித்து அவருடைய அனுமதி பெற்றுக்கொண்டு தனக்கிஷ்டமான ஒரு புருஷனை விவாகம்செய்துகொள்ளலாமென்றும் தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**34.** குழந்தைகளைத் தன் வசத்தில் வைத்துக்கொண்டு சம்ரக்ஷணை செய்யும்படியான கார்டியன் அதிகாரத்தில் தாயானவள் தகப்பனுக்கு அடுத்த படியிலிருந்தாலும், பெண்ணை விவாகம் செய்துகொடுக்கும் சுதந்திரத்தில் தாயானவள் மிகவும் கீழ்ப்பட்டவளாகவே இருக்கிறாள்.

**35.** ஆனாலும் கன்னிகையின் தகப்பனுடைய சகோதரர்கள் விபக்த நிலைமையிலிருந்தால் அவர்களுக்கு கன்னிகையின் தாயைக்காட்டிலும் முந்தின பாத்தியமில்லையென்றும், புருஷனுடைய சொத்தைத் தனியாய் அனுபவித்துக்கொண்டு கன்னிகையையும் சம்ரக்ஷணைசெய்து வருகிற தாயாரானவள் பெண்ணைத் தனக்கு இஷ்டமான இடத்தில் விவாகஞ்செய்து கொடுக்கச் சுதந்தரவாளியாக இருக்கிறாள் என்றும், அவளுடைய இஷ்டத்துக்கு விரோதமாக அவளுடைய விபக்த கொழுந்தன் முதலியோர்களுக்கு அதிகாரமில்லை என்றும், தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 4 மஹைகோரி 339; 10 மதராஸ் லாஜானல் 112;

**36.** மேலும் தகப்பனானவன் தன் பெண்சாதி பிள்ளைகளைக் கவனியாமலும் ஆதரிக்காமலும் தனியே விட்டுப் பிரிந்து போய் விட்டால் தாயாரானவள் பெண்ணை விவாகம் செய்துகொடுத்து விடலாம். 11 பம 247;

**37.** மேலும் பெண்ணின் தகப்பன் உயிரோடிருக்க அவனுடைய சம்மதமும் தகவலுமில்லாமலே தாயாரானவள் பெண்ணினுடைய நன்மையின் பொருட்டும் நல்ல எண்ணத்தோடும் பெண்ணை ஒருவனுக்கு தானமாய் செய்துகொடுத்து விவாகத்துக்கு வேண்டிய சடங்குகளையும் முறைப்படி செய்து விவாகத்தையும் பூர்த்தியாக்கிவிட்டால், அதுவும் [illegible] செல்லுபடியுள்ளதாய் விடுகிறது ஆனால் மோசடியாகவும் பலாத்காரத்தின்பேரிலும் செய்யப்படுகிற விவாகம் செல்லுபடியுள்ளதாக மாட்டாது. 14 மதா 316, 12 கல 140; 19 அல 515; 11 பம 247; 22 பம 509; 22 பம 812.

**38.** பெண்ணினுடைய க்ஷேமத்துக்கும் அபிவிருத்திக்கும் விரோதமாயிருக்கிற ஒரு விவாகத்தை பெண்ணின் காரியஸ்தனானவன் அயோக்கியமான காரணங்களால் செய்ய எத்தனப்பட்டால் அவ்விவாகத்தை நடக்கவொட்டாமல் தடுக்க நியாயஸ்தலத்தாருக்கு அதிகாரமுண்டு.

ஆனால் அப்படிச்செய்ய எத்தனிக்கிறவன் பெண்ணினுடைய முதல் கார்டியனான தகப்பனாகவேயிருந்தால் கோர்ட்டார் பிரவேசிப்பதற்கு தக்க விசேஷமான காரணங்கள் இருக்க

வேண்டும். அப்போது அப்படிப்பட்ட விவாகம் தடுக்கப்படும். 8 கல் 266; 12 பம 480;

**39.** ஒரு பெண்ணை விவாகம்செய்து கொடுக்க அதிகாரமில்லாத ஒருவன் அப்பெண்ணினுடைய விவாகத்தை நடத்த எத்தனித்தால், அவ்விவாகத்தைத் தடுக்கும்பொருட்டு பெண்ணினுடைய சரியான பாதுகாப்பாளன் கோர்ட்டுக்கு மனுசெய்து கொள்ளலாம். அதன்பேரில் அவ்விவாகம் கோர்ட்டாரால் தடுக்கப்படும். 11 பம. 253;

**40.** தரும சாஸ்திரங்களின்படி இந்துக்களுடைய விவாகமானது வைதீக சம்பந்தமான ஓர் சமஸ்காரமேயன்றி கேவலம் உடன்படிக்கையல்ல, ஆனதால் விவாகம் செய்துகொள்ளுகிற ஆண் பெண் இருவரும் ஒருவருக்கொருவர் சம்மதமுள்ளவர்களாக இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை, அவர்களுக்கு விவாகம் செய்துவைக்கும் பெற்றோர் முதலியோருடைய சம்மதமே போதுமானது. ஆகையால் அவர்களுடைய சம்மதமின்றி செய்யப்படும் விவாகங்களும் சட்டப்படி செல்லத்தக்கதாகும். 5 அல் 513; 14 மது 316; 19 அல 515, காரியனுடைய சம்மதத்தினபேரில் முறைப்படி செய்யப்பட்ட ஒரு விவாகம் ரத்தாகமாட்டாது. 14 மது 316.

**41.** வைதிகமான நோக்கங்களுடன்கூட சந்தான உற்பத்தியின் பொருட்டும் விவாகம் ஏற்படுகிறபடியால் ஆண் பெண் இருவரும் தேகதிடமுள்ளவர்களாக இருக்கவேண்டும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் ஒரு பெண்ணை நபும்ஸகனுக்காவது பைத்தியக்காரன் வியாதியஸ்தன் முதலியவர்களுக்காவது விவாகம்செய்து கொடுத்துவிட்டால் அதுவும் சட்டப்படி செல்லுபடியுள்ளதாகவே இருக்கிறது.

**42.** ஒரு பெண்ணை ஒரு புருஷனுக்கு விவாகம் செய்து கொடுப்பதாக பெண்ணுக்குரியவன் வாக்குதத்தமாகிய நிச்சிதார்த்தத்தைச்செய்து முடித்துவிட்டால், பிறகு அப்பெண்ணை சரியானகாரணமின்றி வேறு யாருக்கும் கொடுக்கக்கூடாதென்றும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆனாலும் இக்காலத்தில் அவ்வித நிச்சயதார்த்தத்தி னாலேயே யாதொருவித பாத்தியமும் விவாக சுதந்திரமும் ஏற்பட்டு விடமாட்டாது. மேலும் நிச்சயதார்த்தப் பிரகாரம் விவாகத்தை நடத்திக்கொடுக்க வேணுமென்று கட்டாயப்படுத்தவாவது அதைக்குறித்து யாதொரு தாவா கொண்டுவரவாவது கூடாது. 1 கல. 74; 11 பம. 412;

அப்படிப்பட்ட தாவாவானது 1877 ௵-த்திய 1-வது சட்டமாகிய ஸ்பெஸிபிக் ரிலீப் ஆக்டின் 21-வது பிரிவால் இப்போது தடுக்கப்பட்டிருக்கிறது.

**43.** ஆனால் ஒப்பந்தத்துக்கு விரோதமாய் எவனாவது விவாகத்தை அக்கிரமமாய் நிறுத்திவிட்டால் அதனாலுண்டான நஷ்டத்தையடைய அவனைப்பற்றி மற்றவன் வியாஜ்ஜியம் செய்து தீர்ப்புப் பெற்றுக்கொள்ளலாம். கல. 74; 11 பம. 412; 21 பம. 23;

விவாகஞ் செய்துகொள்ள உத்தேசித்த புருஷன் விவாகத்தின்பொருட்டு பெண்ணினுடைய தகப்பன் முதலிய சொந்தக்காரரிடம் கொடுத்த பணத்தையும் வாபஸ் பெற்றுக்கொள்ளலாம். 10 கல 1054;

ஆனால் விவாகம் நிறுத்தப்பட்டதற்கு ஒருவன் தானே காரணமாயும் உடந்தையாயுமிருந்திருந்தால் அவன் பிறனிடமிருந்து யாதொரு நஷ்டத்தையும் பெறமுடியாது.

**44.** நிச்சயதார்த்தமான பிறகு அந்தந்த ஜாதியார்களுக்குள் ஏற்பட்டிருக்கிற முறைகளின்படி விவாகத்திற்குறிய பல சடங்குகளும் கிரமமாய் செய்துமுடிக்கப்படவேண்டும், அதன் பிறகே விவாகம் முடிவானதாகும்.

**கன்னிகைக் குறியவன் விவாகம் செய்துகொள்ளுகிற புருஷனிடம் கன்னிகையைக் கொடுப்பதாகிய கன்னிகாதானமும் அவ்வாறு கொடுத்தபின் அப்புருஷன் அக்கன்னிகையைத்தன் கையினாற்பிடித்துப் பெற்றுக்கொள்ளுதலாகிய பாணிக்கிரஹணமும் ஆகிய இவ்விரண்டும் எல்லா ஜாதியாருடைய விவாகத்துக்கும் உரிய முக்கியமான சடங்குகள். புருஷன் பெண்ணினுடைய கழுத்தில் மாங்கல்லியத்தை (தாலியை) கட்டுவது விவாக**

மானதற்கு அடையாளமாக ஏற்பட்டுள்ள ஓர் லௌகிக சம்பிரதாயமே தவிர சாஸ்திரத்தின்படி அவசியமானதல்ல. ஆனாலும் வழக்கத்தையனுசரித்து அதுவும் செய்யப்படவேண்டும். பிராமமணர் முதலிய உயர்ந்த ஜாதியாருடைய விவாகத்தில் கன்னிகாதானம் பாணிக்கிரஹணம் ஆகிய இவைகளுக்குப்பின் நடத்தப்படுவதாகிய சப்தபதி என்னும் கிரியை முடிந்தபிறகே விவாகம் பூர்த்தியை யடைகிறது. ஹோமாக்கினிக்கு முன்பாக விவாகிதர்கள் ஏழு அடி எடுத்துவைத்து நடப்பது ஸப்தபதி என்று சொல்லப்படும். இது செய்யப்பட்ட பிறகு விவாகம் ரத்தாகமாட்டாது. 14 மத. 316.

**45.** இவ்வாறு கிரமமாய் விவாகஞ்செய்துகொண்ட ஆண் பெண் இருவரும் புருஷன் பெண்சாதி என்ற பெயரையும் அந்தஸ்தையும் அடைந்து அது முதல் விவாகம் என்ற பந்தத்தால் ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டவர்களாக ஏற்படுகிறார்கள். விவாகபந்தத்தால் கட்டுப்பட்டிருக்கும் ஸ்திரீ புருஷர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளே சரியான சந்ததியாராகிறார்கள். விவாகத்துக்குப்பின் புருஷன் பெண்சாதியை தன்னுடன் கூட்டிக்கொண்டு போகும்படியான சுதந்திரத்தையும், அன்ன வஸ்திராதிகள் கொடுத்து அவளை சம்ரக்ஷிக்க வேண்டிய கடமையையும் உடைகிறான். விவாகமானபின் புருஷனே பெண்சாதிக்கு நாயகனுமாகிறான்.

**46.** ஆனால் ஸ்திரீயானவள் புஷ்பவதியாகும் வரையில் பிறந்த வீட்டிலேயே இருப்பது நெடுநாளத்திய கிரமமான வழக்கமாக இருக்கிறது. அதுபற்றி புஷ்பவதியாவதற்கு முன் பெண்சாதியைத் தன்னிடம் விடவேண்டுமென்று ஒரு புருஷன் கட்டாயப்படுத்தக்கூடாது. புஷ்பவதியாகும் வரையில் பெண்களைத் தங்கள் வீட்டிலேயே வைத்துக்கொள்ள பெற்றோர் முதலியவர்களுக்கு பாத்தியமுண்டு. 17 கல. 298; 24 மத. 255.

**47.** பருவகாலத்தையடைந்த பிறகு பெண்சாதியானவள் புருஷனுடன்கூட வசிக்கக்கடமைப்பட்டவளாகிறாள். (11 மு.இ. அ. 551; 28 கல. 751.) புருஷனும் அவளைச் சம்ரக்ஷணை செய்யக்கடமைப்பட்டவனாகிறான். 13 அ. 126.

**48.** புஷ்பவதியானபின் பெண்சாதி தக்க காரணமின்றி புருஷனைவிட்டு விலகி இருக்கக்கூடாது. அவ்விதம் விலகியிருந்தால் அவளுக்குத் தனியான ஜீவனாம்சம் கிடைக்கமாட்டாது. (2 மது. 634; 1 மது.ஹை.கோர். 375.)

**49.** புருஷன் வேறு பெண்சாதியை விவாகம் செய்துகொண்டிருத்தலும், வைப்பு வைத்துக்கொண்டிருத்தலும், புருஷன் அங்கஹீனனையாவது கொடிய வியாதியனையாவது பைத்தியக்காரனையாவது சம்போகம் செய்ய சக்தியற்றவனையாவது இருப்பது ஆகிய இவைகள் புருஷனைவிட்டு பெண்சாதியானவள் விலகியிருக்கச் சரியான காரணங்களாக மாட்டாது. 1 மது.ஹை. கோர். 375; 10 பம். 301; 13 அல. 126; 17 மது. 260; 20 மது. 470; 19 கல. 84; 21 பம். 610.

ஆனால் ஒரு மகமதிய ஸ்திரீயை வைப்பாக வைத்துக்கொண்டு ஜாதி வழக்கத்துக்கும் ஆசாரத்துக்கும் விரோதமாயும் கெடுதலாயும் அவளை வீட்டில் புழங்கும்படி செய்த ஒரு பிராமணப் புருஷனை விட்டு அவன் பெண்சாதி விலக, அவள் சரியான காரணம் பற்றியே விலகினவளாவாள் என்றும், அவளுக்குப் புருஷன் தனியான ஜீவனாம்சம் கொடுக்கக்கடமைப் பட்டிருக்கிறான் என்றும், பம்பாய் ஹைகோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

**50.** குடும்பங்களில் அப்போதைக்கப்போது சாதாரணமாய் ஏற்படும் சில்லறைக்கலகம் சண்டைச்சச்சரவுகளும், புத்தி புகட்டுவதற்காக பெண்சாதியைப் புருஷன் மிதமாய்க் கண்டிப்பதும் ஆகிய இவைகள் புருஷனைவிட்டு பெண்சாதி விலகியிருக்க சரியான காரணங்களாகமாட்டாது.

**51.** பெண்சாதியினிடத்தில் புருஷன் சதா குரூரமாயிருந்து எப்போதும் அவளை இம்சித்துத் தொந்திரவு செய்துவந்தாலும், அல்லது புருஷன் தன்னைக்கொன்று போடுவான் என்ற மரணபயமானது அவனுடைய மூர்க்கமாயும் குரூரமாயுமுள்ள செய்கைகளால் அவளுக்கு உண்டானாலும், அவள் புருஷனைவிட்டு விலகி இருக்கலாம். அப்போது அவள் தனியான ஜீவனாம

சமும் அவனிடமிருந்து பெறலாம். 19 கல். 84; 1 பம். 164; 11 மு.இ.அ. 551; 13 அல. 126; 5 கல். 500.

மேலும் புருஷனானவன் ஜாதி பிரஷ்டனாயாவது மத பிரஷ்டனாயாவது போய்விட்டாலும் அவனைவிட்டு பெண்சாதி விலகி இருக்கலாம். 6 அல. 617.

**52.** தக்குந்த காரணத்தின்பேரில் பெண்சாதியும் புருஷனும் ஒருவரிடமிருந்து ஒருவர் விலகி இருப்பதினாலேயாவது அல்லது யாராயினும் ஒருவர் ஜாதியிலிருந்து விலக்கப்பட்டுப் போவதினாலேயாவது அவர்களுடைய விவாகபந்தம் நீங்கிவிட்டதாகமாட்டாது. (18 கல. 264.) அதினாலேயே ஸ்திரீயானவள் புனர்விவாகம் செய்துகொள்ளவும் கூடாது. (13 அல 126.) கோர்ட்டில் நாலிசெய்து விவாகபந்தத்தை ரத்து செய்வித்துக் கொண்டபிறகே ஸ்திரீயானவள் புனர்விவாகம் செய்துகொள்ளக்கூடும். 4 பம். 330.

**53.** புருஷன் ஜீவந்தராயிருக்கும்போதும், விவாகபந்தம் ரத்து செய்யப்படாமலிருக்கும்போதும், ஒரு ஸ்திரீயானவள் வேறு புருஷனை விவாகம் செய்துகொண்டால் அவள் இந்தியன் பீனல்கோடு 494-வது பிரிவின்படி தண்டிக்கப்படத்தக்க குற்றத்தைச் செய்தவளாவாள்.

**54.** பெண்சாதியானவள் புருஷனாலே சமரக்ஷிக்கப்படுவதற்கு விபசாரதோஷமில்லாதவளாகவும் இருக்கவேண்டும். ஸ்திரீயினுடைய விபசாரமானது மகாபாதகமான செய்கையென்றும் ஸ்திரீக்கு அதைவிட பெரும்பாவம் இல்லையென்றும் புருஷனிடம் பக்தியாயிருப்பதே ஸ்திரீயினுடைய தர்மமென்றும் ஹிந்து தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதுபற்றி வியபசாரியாய் இருக்கும் பெண்சாதியைச் சமரக்ஷிக்க புருஷன் கட்டுப்பட்டவனல்ல. தவிர வியபசாரியாயிருக்கும் ஸ்திரீயானவள் ஜாதிபிரஷ்டையாகிறாள் என்றும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் வியபசாரித்தனம் செய்யும் பெண்சாதி புருஷன்பேரில் ஜீவனாம்சத்துக்குத் தொடரமுடியாது. 1 மது.ஹை.கோர். 372; 2 மது.ஹை.கோர். 377.

**55.** தகுந்த காரணமின்றி விலகி இருக்கும் பெண்சாதியை தன்னுடன்கூட இருந்து வாழவேண்டுமென்று கட்டாயப்படுத்த புருஷனானவன் கோர்ட்டில் தாவாசெய்து தீர்ப்புப்பெற்றுக் கொள்ளலாம். (13 அல. 126). அத்தீர்ப்பின்படி நடக்கத்தவறும் பெண்சாதியை சிறைச்சாலையில் வைக்கவாவது அவளுடைய சொந்த ஜாயிதி ஜப்தியாவது அல்லது இரண்டும் செய்யவாவது கோர்ட்டாருக்கதிகாரமுண்டு. (1882 வருஷத்திய 14 வது ஆக்டாகிய ஸிவில் ப்ரொஸிஜர் கோடு 260 வது பிரிவைப்பார்க்க). அப்படியல்லாமல் சரியான காரணமின்றி புருஷனானவன் பெண்சாதியை விலக்கியிருந்தாலும் அவளும் அவ்விதமே அப்படிப்பட்ட தாவாவைச்செய்து தீர்ப்புப்பெற்றுக்கொள்ளலாம். 13 அல. 126.

**56.** புருஷன் பெண்சாதிகள் ஒன்றாயிருக்கும்போது குடும்பத்துக்கான செலவுகளுக்காக பெண்சாதியால் வாங்கப்படும் சகல கடன்களுக்கும் புருஷன் கட்டுப்பட்டவனாகிறான். மேலும் சம [illegible] அக்கிரமமாய் விலக்கப்பட்டும் ஆதரவு செய்யப்படாமலிருக்கிற பெண்சாதியானவள் தன் காலக்ஷேபத்துக்காக புருஷனுடைய நாணயத்தின்பேரில் ஏதாவது கடன் வாங்கினால் அந்தக்கடனையும் புருஷன் தீர்க்கக்கடமைப்பட்டவனாவான். 1 மது. ஹை. கோர். 375.

**57.** ஸ்திரீகள் புனர் விவாகம்- புருஷனானவன் இறந்து போய்விட்டாலும், தேசாந்திரம் போய் வெகுகாலம் திரும்பி வராமலிருந்து விட்டாலும், புமஸ்தத்துவமில்லாதவனாக இருந்தாலும், ஜாதிப்பிரஷ்டனாய் போய்விட்டாலும், பெண்சாதியானவள் புனர்விவாகம் செய்துகொள்ளலாமென்று நாரதருடைய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. புஷ்பவதியாவதற்கு முன் புருஷனையிழந்த பாலிய விதவைகள் புனர் விவாகம் செய்துகொள்ளலாமென்று மனுஸ்மிருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறதாகத் தெரியவருகிறது. ஸ்திரீகள் புனர்விவாகம் செய்துகொள்ளக்கூடாதென்பதற்கு ஆதிகாலத்து கிரந்தங்களில் சரியான ஆதாரமில்லாமலிருந்தபோதிலும் இக்கலியுகத்தில் பிராமணர் முதலிய உயர்ந்த ஜாதிகளில் ஸ்திரீகளுக்கு புனர்விவாகம் செய்யக்

கூடாது என்ற விலக்கம ஏறபட்டு நெடுநாளாய் வழங்கி வருகி
றது. சூத்திரஜாதியிலும உயாநத வகுப்பைச சோநதவாகள
ஸ்திரீகளுக்குப புனாவிவாகம செய்கிறதில்லை. சூத்திராகளைத
தாழ்நத வகுப்பைச சோநதவாகளாகிய தொட்டியா, டொமபா,
கள்ளா, மறவா, முதலிய ஜாதியாாகளும லங்கை த்வீபத்திலுள்ள தமி
ழாகளும விதவைகளுக்கு சாதாரணமாய் புனா விவாகம செய்கி
றாாகள். 6 மது.ஹை.கோா். 329; 1 மது. 226; 17 மது. 479.

**58.** எல்லா ஜாதி விதவைகளும இஷ்டமானால புனாவிவா
கம் செய்துகொள்ளலாமென்றும, விதவை விவாகம சட்டப்படி
செல்லுமபடி யுண்டாகுமென்றும, இந்தியா கவாணமெண்டாா
1856 ஹூ-த்திய 15-வது ஆக்டடில பிரசுரித்திருக்கிறாாகள்.

**59** ஆனால புனாவிவாகம செய்துகொண்ட விதவை மு
தல் புருஷனுடைய குடும்பத்தினின்றும குலத்தினின்றும நீங
கினவளாயிருக்கிறபடியால அவனுடைய சொத்தில அவளுக்கிரு
நத ஜீவனாம்ச பாத்தியம, தாய பாத்தியம முதலிய சுதநதிரங்களை
அவள் புனாவிவாகத்துக்குப பிறகு இழநது விடுகிறாள்.

மேலும சரியான காரணத்தினமேரில விவாக பநதத
த்தை கோாட்டு மூலமாய் ரத்துசெய்துகொணட ஸ்திரீயும புனா
விவாகம செய்துகொள்ளலாம். 1 பம. 347; 4 பம. 330.

## 3-வது அத்தியாயம்.

## சந்தானம்.

**60.** உலகம விருத்தி யடைவதறகு சாதனமாயிருக்கிற
பொதுவான பிரஜாவிருத்திக்கும அவாவாகளுடைய வமச விரு
த்திக்குமன்றி, இமமனுஷ சரீரத்துக்குற்றதான பிணி துனபம
மூப்பு முதலியன நேரிட்ட காலங்களில இசசரீரததைக காப்பா
றறவும, இறநதபின உத்தரக்கிரியை முதலியவறறைச செய்யவும,
தான் தேடிவைத்த பொருளைத தனக்குப்பின அடைந்து தன

பெரும் கீர்த்தியும் உலகத்தில் விளங்கச் செய்பவும், ஒவ்வொரு வரும் சந்தான சம்பத்தை யடைய வேண்டியிருக்கிறது. இவ்வித சந்தானத்தை எவன் அடைகிறதில்லையோ அவன் இவ்வுலகில் ஆதரிப்பாரின்றி வருந்துவதுடன் இறந்த பின்னும் புத் என்று சொல்லப்படும் நரகத்தையடைகிறான் என்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதுபற்றியே பிறக்கும் மகனுக்கு புத்திரன் என்ற காரணப்பெயரும் இடப்பட்டிருக்கிறது. புத் என்ற நரகத்திலிருந்து விடுவிக்கிறவன் என்பது பொருள்.

**61.** தன்னுடைய ஆத்துமாவே மறுபடியும் பிரதிபலித்தது போல் தன் மனைவியிடமாகத் தனக்குப் பிறக்கும் பிள்ளை **ஔரச புத்திரன்** எனப்படுவான். அதாவது தன் உதரத்திலிருந்து உண்டான பிள்ளை என்பது பொருள். இகபரமிரண்டுக்கும் இன்றியமையாததான இப்புத்திர பாக்கியமானது தெய்வகதியால் ஒருவனுக்கு இல்லாமற்போவதும் சம்பாவிதமாகையால் அப்படிப்பட்ட சமயங்களில் புத்திரனைப்போல் ஒத்த ஒருவனை வேறு விதமாயாவது அடைந்து கொள்ளலாமென்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**62.** வேறு வகைகளில் அடையும் போலிப்புத்திரர்கள் பிரமாணப்படி பதினொன்று வகைப்படுவார்கள்.

(1) புத்திரிகா புத்திரன்- தன் புத்திரியினிடம் (பெண்ணினிடம்) பிறக்கும் முதல் பிள்ளை தனக்குப் பிள்ளையாக பாவிக்கப்படுவான் என்ற ஒப்பந்தத்துடன் அப்பெண்ணை ஒரு புருஷனுக்கு விவாகஞ்செய்து கொடுப்பது ஆதிகாலத்தில் வழக்கமாயிருந்தது. இப்படிப்பட்ட புத்திரியின் பிள்ளைக்கு புத்திரிகா புத்திரன் என்று பெயர்.

(2) தன் சயனத்தின்பேரில் தன் மனைவியிடமாக வேறு புருஷனுக்குப் பிறக்கும் பிள்ளை அல்லது க்ஷேத்திரஜன்.

(3) பெண்சாதி திருட்டுத்தனமாய் வியபசரித்துப் பெற்ற பிள்ளை

(4) கன்னிகையின் புத்திரன்.

(5) ஒருஸ்திரீயை விவாகம் செய்துகொள்ளும்போது அவளுடன் அடைகிற (விவாகத்துக்கு முன் அவளுக்குப் பிறந்த) பிள்ளை.

(6) புனர் விவாகம் செய்துகொள்ளுகிறவளுடைய (முதல் விவாகத்துக்குப் பிறந்த) பிள்ளை.

(7) ஸ்வீகாரன் அல்லது தத்துப்பிள்ளை.

(8) கிருத்திரமன்.

(9) விலைக்கு வாங்கின பிள்ளை.

(10) அனாதியாய் இருந்து எடுத்து வளர்க்கப்பட்ட பிள்ளை.

(11) தானே வந்துசேர்ந்த பிள்ளை.

(12) சூத்திரஸ்திரீக்குப் பிறந்த பிள்ளை.

(13) வைப்பாட்டி பிள்ளை.

**63.** சரியான வழியினாலாவது சரியென்று ஒப்புக்கொள்ளத் தகாத வேறு அநேக வழிகளினாலாவது புத்திரனையடையவேண்டுமென்று சொல்லப்பட்டதினால் சந்தான பாக்கியத்தின் ஆவசியகமும் மகிமையும் வெளிப்பட்டது.

**64.** ஆனால் மேற்சொல்லிய பலவழிகளாலும் புத்திரனையடையும் வழக்கம் பல காரணங்கள் பற்றி நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாக நின்றுகொண்டே வர, கடைசியில் இப்போது ஆண் சந்ததியில்லாமற்போனால் ஸ்வீகாரத்தால் புத்திரனையடைகிற வழக்கமொன்றே நம்பிரதேசத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இச்சுவீகார புத்திரனைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் விவரமாய் கூறப்படும்.

**65** ஸ்வீகாரத்தால் புத்திரனையடையும் வழக்கம் இல்லாத சில இடங்களில் பெற்ற தாய் தகப்பனால் கொடுக்கப்படாமல் தானே சம்மதித்து வந்தடைகிற பிள்ளையை இஷ்டத்தின்பேரில் ஒப்புக்கொண்டு புத்திரன்போல பாவித்துக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டு வருகிறது. இப்படியடையப்படும் பிள்ளை கிருத்திரமன் எனப்படுவான்.

புத்திரனாக எடுத்துக்கொள்ளப் படுவதற்கு அப்பிள்ளையினுடைய சம்மதம் வேண்டியிருக்கிறபடியால் அவன் மைனரி

டியிலிருந்து நீங்கினவனாயிருக்கவேண்டும். இப்புத்திரன் புதுத் தகப்பனுக்கு உத்தரக்கிரியை முதலியவற்றைச் செய்யவும் அவனுடையசொத்து சுதந்திரங்களை யடையவும் உரியவனாக இருப்பதும் தவிர பிறந்த குடும்பத்தினின்றும் அதனுடைய சொத்து சுதந்திரங்களினின்றும் விலகாதவனாகவுமிருக்கிறான். இவ்வித வழக்கம் மிதிலைநாட்டிலும், பஞ்சாப காசமீரப் பிரதேசங்களிலும், லங்கைத் தீவிலும், மலையாளத்திலுள்ள நம்பூரி பிராமணர்களுக்குள்ளும் தவிர மற்றெங்கும் அனுஷ்டானத்தில் இல்லை. 11 மத. 164.

**66.** தென் இந்தியாவிலுள்ள சில ரெட்டி ஜாதிகளுக்குள் பிள்ளையில்லாமற்போனால் பெண்ணின் புருஷனை மருமகனை பிள்ளையாக பாவித்துக்கொள்ளும் வழக்கம் நடந்துவருகிறது. இதற்கு இல்லத்த ஸ்வீகாரம் என்று பெயர், இவன் தன் பெண் சாதியின் தகப்பனுடைய சொத்துக்கன்றி தன் சொந்தத் தகப்பனுடைய சொத்துக்கும் பாத்தியஸ்தனாக இருக்கிறான். 4 மத. 272; 21 மத. 226; 6 மத. 267,

**67.** அபிமானப்பிள்ளை அல்லது வளர்ப்புப்பிள்ளை- பிரியத்தின்பேரில் பிள்ளையொப்பாந்தம் குடும்பத்தில் வளர்த்தப்படுகிறவன் அபிமான பிள்ளை யென்று சொல்லப்படுவான். ஆனால் சாஸ்திரவிதிகளின்படி இவனுக்கு குடும்பத்தில் யாதொரு அந்தஸ்தும் பாத்தியமும் கிடையாது, அபிமானத் தகப்பனுக்கு இவன் வாரசாகவுமாட்டான், அத்தகப்பனாலே இஷ்டத்தின் பேரில் ஏதாவது சொத்து கொடுக்கப்பட்டிருந்தால் அதைமட்டும் அவன் அடையலாமேயன்றி வேறுவித சுதந்திரம் ஒன்றும் அவனுக்கு ஏற்படமாட்டாது, 20 அல் 209.

## 4-வது அத்தியாயம்,

# ஸ்வீகாரம் அல்லது தத்து.

**68.** சகலவித பாக்கியங்களிலும் புத்திரபாக்கியமே இகபரமிரண்டுக்கும் முக்கியமானதென்றும், சுபாவத்தில் புத்திரனைப்

பெறுதவன் வேறுவித உபாயங்களினலாவது ஓர் பிள்ளையை அடையலாமென்றும், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பதாக முன் அத்தியாயத்தில் கூறப்பட்டது. ஆனாலும் சுபாவத்தில பிள்ளையில்லாமற்போனல், ஸ்வீகாரத்தால் பிள்ளையை யடைந்து கொள்ளுகிற வழக்கம ஒன்றே கடைசியாய் அனுஷ்டானத்தில் ஏற்பட, இப்போது அதுவே இப்பிரதேசததில் விசேஷமாய் வழங்கி வருகிறது.

**69.** ஒவ்வொரு ஸ்வீகாரத்திலும், ஸ்வீகாரம் செய்துகோள்ளுகிறவன், ஸ்வீகரிக்கப்படுகிற பிள்ளை, அப்பிள்ளையைச்கோடுக்கும் உடையாளி, ஆகிய மூன்றுபேர்கள் சம்பநதப்பட்டிருக்கிறாகள. இவர்களைப்பறறியும் ஸ்வீகாரத்தில் அனுஷடிக்கப்படவேண்டிய சடங்கு முதலியவைகளைப்பறறியும தனிததனியாய் இவவததியாயத்தில் சொல்லப்படும.

## I. எவர்கள் ஸ்வீகாரம் செய்துகொள்ளலாம் என்பதைப்பற்றி.

**70.** ஸ்வீகாரம் செய்துகொள்ளுகிறவன் ஆண் சந்ததியில்லாதவனாக இருக்கவேண்டும். புததிரன, பௌததிரன, பிரபௌத்திரன், (பிள்ளை, பேரன் கொளபேரன்) ஆகிய மூவரும ஒருவனுக்கு ஆண் சந்ததியெனப்படுவார்கள. பிள்ளையொப்பநதம பேரன், கொள்பேரன் ஆகிய இவாகளும் உத்தரகிரியை சிராாத்தம முதலிய வைதீக கருமங்களைச செய்யத தகுநதவர்களாகவும, தாய பாத்தியத்தில் பிள்ளைக்கு சமதையானவாகளாகவும் இருக்கிறார்கள். ஆனதுபற்றி பிள்ளை, பேரன், கொள்பேரன் ஆகிய இம்மூவரில் யாரேனும் ஒருவனிருந்தாலும் ஸ்வீகாரம் செய்து கொள்ளக்கூடாது. ஆனல் நாலாவது சந்ததியானகிய கொள்பேரனுடைய பிள்ளைமட்டும் இருந்தால் அது ஸ்வீகாரம் செய்து கொள்வதற்குத் தடையாகமாட்டாது.

**71.** ஆண் சந்ததி பிறந்திருந்து பிறகு இறந்துபோயிருநதாலும் ஸ்வீகாரம் செய்துகொள்ளலாம். ஸ்வீகாரம செய்து கொள்ளும் காலத்தில் யாதொரு ஆண் சந்ததியும் உயிரோடிருக்கக்கூடாதென்பது சட்டத்தின் கருத்து. ஆண் சந்ததியிருக்க

ஸ்வீகாரம் வாங்கிக்கொண்டால் அது செல்லமாட்டாது. 21 மு
ஜி. அ. 181; 22 பம். 482; 23 பம். 236.

**72.** ஆண் சந்ததியென்று குறிப்பிட்டதினால் புத்திரியா யாவது (பெண்) புத்திரியினுடைய மகனான தௌகித்திரனாவது இருப்பது ஸ்வீகாரம் செய்துகொள்ளத் தடையாகமாட்டாது. ஆனாலும புத்திரனைப்போலவே புத்திரியும் தன் சொந்த உதிரத் தில் பிறந்தவளாக இருக்கிறாள். அவளிடத்திலும் அவளுடைய மகனான தௌகித்திரனிடத்திலும் சுபாவமாய் ஏற்பட்டுள்ள அபி மானத்தால் அவர்களிருக்கும்போது அன்னியகுடும்பத்தைச் சேர்ந்த ஒருவனை தத்தாக எடுத்துக்கொண்டு தன் சொத்து சுதந் திரங்களுக்கு அவனை பாத்தியஸதனாக்குவதற்கு சாதாரணமாய் எவனும் பிரியப்படமாட்டான். தவிர, தௌகித்திரன் மாதா மகருக்கு பின்ன கோத்திர சபிண்டனாகவும் உத்திரகிரியை முத லான வைதிகச்சடங்குகளைச் செய்ய உரிமையுள்ளவனாகவும் இரு க்கிறான். இக்காரணங்களால் புத்திரியாவது தௌகித்திரனாவது இருக்க அன்னியனொருவனை ஸ்வீகாரம் செய்துகொள்வது மிக்க அபூர்வமாகும். ஆகிலும புத்திரியும் தௌகித்திரனும் அன்னிய குலங் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறபடியால், அவ ர்கள் இருக்கச் சேயும வேறு பிள்ளையை ஸ்வீகாரம செய்துகொ ள்வது சட்டப்படி செல்லத்தகுந்ததேயாகும்.

**73.** விவாகம் செய்துகொண்டு கிரகஸ்தனாய் இருப்பவன் தான் ஸ்வீகாரம செய்துகொள்ளலாம் என்ற விதியில்லை. வம்ச விருத்திக்காகவும், கடைசிகாலத்தில் உத்திரகிரியை முதலிய கரு மங்கள் செய்யப்படுவதற்காகவும், தனக்குப்பின் தன் சொத்து சுதந்திரங்களை யடைந்து தன் பெயரை விளங்கச்செய்வதற்காக வும், யாவரும புத்திரனையடைய விரும்புவார்களாகையால் விவா கமில்லாதவனும் (பிரம்மச்சாரியும்) தாரமிழந்தவனும்கூட ஒரு பிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொள்ளலாம். 2 மது. ஹை. கோ ர்ட். 367; 4 மது. ஹை. கோர்ட். 270; 12 பம். 329; 12 அல். 352.

**74.** பிள்ளைமுதலான சந்ததியான் ஜாதிப்பிரஷ்டனாவது மதப்பிரஷ்டனாவதுபோய் குடும்பத்தினின்றும் நீங்கிவிட்டால் அவனை இறந்தவன்போலவே பாவித்துவிட்டு தகப்பன் ஸ்வீகா

ரம் செய்துகொள்ளலாம். ஆனால் அவ்வாறு பிரஷ்டத்துவத்தை யடைந்து குடும்பத்திலிருந்து நீக்கப்பட்ட சொந்தபிள்ளை குடும்ப சொத்திலுள்ள பாத்தியங்களை இழக்கமாட்டான் என்று 1850 ஹு-த்திய 21-வது சட்டத்தில் விதிக்கப்பட்டிருக்கிறபடியால் ஸ்வீகாரனுக்கு தகப்பனுடைய தனியான சொத்தில் பாத்தியப்படும்.

**75.** தாயபாத்தியம் முதலியவைகளுக்கு யோக்கியதையற்றவர்களென்று சாஸ்திரங்களினால் விலக்கப்பட்டிருக்கிற பிறவிக்குருடர், செவிடர், கைகால் இல்லாத மொண்டி, மொட்டை, சப்பாணிகள், தீராத கொடிய குஷ்டரோகி, நபும்ஸகன், ஜடன், பைத்தியக்காரன், முதலானவர்களை ஆண் சந்ததியாக உடைய ஒருவனும் அவர்கள் இல்லையென்றே பாவித்துவிட்டு பிள்ளையில்லாதவனைப்போல ஸ்வீகாரம் செய்துகொள்ளலாம். ஆனால் மேற்சொன்ன அங்கஹீனர், வியாதிஸ்தர் முதலியோருக்கு சரியான பிள்ளையாவது பேரனாவது இருந்து, அந்தச் சந்ததியான் தனக்கு மூன்று தலைமுறைக்குட்பட்ட வனாகவுமிருந்தால், அப்போது ஸ்வீகாரம் செய்துகொள்ளக்கூடாது.

**76.** தாயபாத்தியத்துக்குத் தகுதியற்றவர்களாயிருக்கிற மேற்கூறிய அங்கஹீனர் வியாதிஸ்தர் முதலியோர்களுக்கு ஸ்வீகாரம் செய்துகொள்ளும் அதிகாரம் கிடையாது. ஆகிலும் அவர்கள் ஒரு சமயம் ஸ்வீகாரம் செய்துகொண்டால் அதுவும் சட்டப்படி செல்லுபடியுள்ளதாகும். (28 கல். 168;) ஆனால் அந்த ஸ்வீகாரப்பிள்ளைக்கு குடும்பசொத்தில் ஜீவனாம்ச பாத்தியத்தைத்தவிர வேறு எவ்வித சுதந்திரமும் ஏற்படமாட்டாது. ஸ்வீகாரம் எடுத்துக்கொண்ட அந்தத்தகப்பனுக்கு ஏதேனும் தனியான சொத்து இருந்தால் அதுமட்டுமே அச்சுவீகாரனுக்கு பாத்தியப்படும்.

**77.** ஆனாலும் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளுவதானது மனப்பூர்த்தியான செய்கையாக இருப்பதால் புத்திஸ்வாதீனமில்லாத பைத்தியக்காரர் முதலியோர் எடுத்துக்கொள்ளும் ஸ்வீகாரம் செல்லமாட்டாது. 10 மு. இ. அ. 429; 8 கல். 149.

**78.** ஒருவன் இன்னகாலத்தில் அல்லது இவ்வளவு காலத்துக்குப பிறகு தான் ஸ்வீகாரம் செய்துகொள்ள வேண்டுமென்ற கால நிர்ணயமாவது வயது நிர்ணயமாவது கிடையாது. ஆனாலும பெண்சாதியானவள மலடியாயாவது கிழவியாயாவது போனபிறகே ஸ்வீகாரம் செய்துகொள்ளலாமென்று யாவரும சாதாரணமாய் உத்தேசிப்பார்கள். பெண்சாதியிடமாகப் பிள்ளை பிறக்கலாம என்ற நம்பிக்கையிருக்கும் வரையில் ஸ்வீகாரமசெய்து கொள்ளுவதுமிக்க அபூர்வம். ஆகிலும் மனுஷனுடைய சரீரம் நிலையற்றதாகவும, மரணசம்பவிக்கும காலம் நிச்சயமற்றதாகவுமிருக்கிறபடியால ஸ்வீகாரம செய்துகொள்ளுவதற்கு யாதொரு காலவரம்பும ஏற்படவில்லை.

அனதுபற்றி பெண்சாதியிடமாகப் பிள்ளை பிறக்கலாம் என்ற நமபிக்கையிருக்கும்போதனறியில் பெண்சாதி காப்பிணியாயிருக்கும்போதுகூட ஒருவன் ஸ்வீகாரம செய்துகொண்டால் அதுவும சட்டப்படி செல்லுபடியுள்ளதாகும். 3 மது. 180; 12 பம். 105.

**79.** ஸ்வீகாரத்துக்குப் பிறகு ஔரஸப்புத்திரன் பிறந்தால அடியில் 157-வது பிரிவில கண்டபடி குடுமபசொத்தில சொந்தப் பிள்ளை நான்கு பஙகையும ஸ்வீகாரப்பிள்ளை ஒரு பங்கையும அடைகிறார்கள்.

**80.** பகுத்தறிவையடைந்திருக்கிற மைனர்களும்கூட ஸ்வீகாரம செய்துகொள்ளலாம். மேலும் பகுத்தறிவையுடைய ஒரு மைனர் ஸ்வீகாரம் செய்துகொளளும்படி தன் பெண்சாதிக்கு அனுமதியும கொடுக்கலாம. (3 இ. அ. 83-1 கல். 289; 15 பம். 565;) புருஷனுடைய அனுமதியைப் பெற்றிருக்கிற ஒரு மைனர் விதவையும ஸ்வீகாரத்தைச செய்துகொள்ளலாம. 18 கல். 69.

**81.** ஆனால் கோர்ட்டு ஆப்வார்ட்ஸாருடைய விசாரணைக்குட்பட்டிருக்கும மைனர்கள் கோர்ட்டு ஆப்வார்ட்ஸ் அலலது கலெக்டருடைய அனுமதியன்னியில் ஸ்வீகாரம செய்துகொள்ளக்கூடாது.

**82.** ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளும் சுதந்திரம் புருஷனுக்கே உரித்தானது. புருஷன் பொருட்டாகவே ஸ்வீகாரம் செய்துகொள்ளப்படுகிறது.

ஆகையால் ஸ்வீகாரத்துக்கு பெண்சாதியினுடைய சம்மதம் இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. மேலும் ஒரு பையனை ஸ்வீகாரம் செய்துகொள்வதற்கு பெண்சாதி இஷ்டப்படாதவளாக இருந்தாலும், அவளுடைய ஆக்ஷேபணையைத் தள்ளிவிட்டுங்கூட புருஷனானவன் தன் இஷ்டப்படி ஸ்வீகாரம் வாங்கிக்கொள்ளலாம். அப்படிப்பட்ட ஸ்வீகாரமும் சட்டப்படி செல்லத்தக்கதாகும். 4 மு. இ. அ. 2.

**83.** ஸ்திரீகளுக்கு தங்கள் பொருட்டு ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ள அதிகாரமில்லை. அவர்கள் செய்துகொள்ளும் ஸ்வீகாரம் அவர்களுடைய புருஷன் பொருட்டாகவேயிருக்கவேண்டும். தவிர புருஷனுக்காக அல்லாமல் வேறு யாருக்காகவேனும் ஸ்திரீயானவள் ஸ்வீகாரம் செய்துகொள்ளக்கூடாது. 7 பம். ஹை.கோர்ட் 553.

**84.** தங்கள் பொருட்டாகவே ஸ்வீகாரம் செய்துகொள்ள ஸ்திரீகளுக்கு அதிகாரம் இல்லாமலிருந்தாலும், தாசிகளுக்குள் பெண்களை ஸ்வீகாரமாக எடுத்துக்கொள்ளும் வழக்கம் இதென்னிந்தியாவில் வெகு காலமாக வழங்கி வருகிறது. இவ்வழக்கத்தை யனுசரித்து அவ்வித ஸ்வீகாரமும் செல்லத்தகுந்ததாயிருக்கின்றது. 11 மத. 398; 12 மத. 273.

**85** ஆனால் தாசிகள் பொதுவாய் வியபசாரத்தொழிலைச் செய்கிறவர்களாக இருக்கிறபடியால் வியபசாரத் தொழிலுக்கு அனுசரணையாயிருக்கக் கூடிய நிலைமையில் தாசியானவள் ஒரு மைனர் பெண்பிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொண்டால் அது செல்லமாட்டாது. 4 பம். 545; 21 மத 229.

**86.** ஆனால் விபசாரத்தொழிலுக்கு சம்பந்தப்பட்டதாயிராமல், சொத்து சுதந்திரங்களை யடைவதற்கென்ற நியாயமான எண்ணத்தின்பேரில் ஒருதாசி ஸ்வீகாரம் செய்துகொண்டால், அப்போது அவளால் ஸ்வீகரிக்கப்படுகிற பெண் மைனராயுமிரு

க்கலாம். நல்ல எண்ணத்தின்பேரில் செய்யப்படுகிற அம்மனர் பெண்பிள்ளையின் ஸ்வீகாரமுய செல்லத்தகுநததாகும். 26 பம். 491.

**87.** புருஷனுடைய அனுமதியைப் பெற்றிருக்கும் தரு விதவைப புருஷன்பொருட்டு ஸ்வீகாரத்தைச் செய்துகொள்ள லாம். அவ்விதமான அனுமதி யாதொன்றும் கொடாமல் புரு ஷன இறந்துபோயிருந்தால் அத்றகு பர்தியாக மாமனுருடைய அனுமதியையாவது மாமனுரில்லாவிட்டால் மைத்துனா முதலிய சமீப தாயாதிகளுடைய அனுமதியையாவது பெற்றுக்கொண்டு விதவை ஸ்வீகாரம செய்து கொள்ளலாம. 12 மு. இ. அ. 397 1 மது. 69;

**88.** அநேக தாயாதிகளிருந்தால் எல்லாருடைய அனு மதியையும பெறவேண்டுமென்ற அவசியம் இல்லை. அவர்களில பெருமபான்மையோா அனுமதிகொடுத்து மற்றவா அசிகையினு லாவது பொறுமையினுலாவது அவ்வித அனுமதியைக்கொடுகக மறுதளித்தாலும விதவையானவள் ஸ்வீகாரம செய்து கொள்ள லாம. (23 மது. 486). ஆனுல் சமீப தாயாதிகளிருக்க அவர்களை விட்டுவிட்டு தூர தாயாதிகளுடைய சமமதம மட்டும் வாங்கிக் கொள்வது பிரயோஜனப்படமாட்டாது. 12 மு. இ. அ. 397; 2 ம. ஹை. கோர். 206; 3 மை. ஹை கோர். 283; 4 இ. அ. 113;

**89.** தாயாதிகளுடைய அனுமதியை விதவையானவள் அயோககியமாயும மோசடியாயும் லஞ்சம் முதலியன கொடுத்து அக்கிரமமாயும் பெருமல் கிரமமாய் பெற்றிருக்கவேண்டும். ஆனுல் வைதிகமான நோக்கங்களுடனேயே விதவையானவள் ஸ்வீகாரத்தைச்செய்துகொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. கிரமமானபடி பெற்ற அனுமதியின்பேரில் ஸ்வீகாரம் வாங்கப் பட்டிருநதால் அது எவ்விதமான எண்ணத்தின்பேரில் விதவை யால் செய்யப்பட்டிருந்த போதிலும சரியானபடி செல்லத்தகு நததேயாகும் என்று பிரிவி கௌன்ஸில் கோர்ட்டார் அவர்க ளால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது 4 இ. அ. 113; 22 பம். 199 22 பம். 558. 22 பம். 206.

**90.** மோசடியாகவாவது அயோக்கியமாகவாவது அக்கிரமமாகவாவது பெற்ற அனுமதிப்படி விதவையால் எடுத்துக்கொள்ளப்பட்ட ஸ்வீகாரம் செல்லுபடியுள்ளதாக மாட்டாது. 7 இ. அ. 173; 2 மது. 270; 8 மது. 545; 26 மது. 627;

**91.** விதவையானவள் தாயாதிகளில் பெரும்பான்மையோருடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு ஸ்வீகாரத்தைச்செய்துகொள்ளலாமென்றிருந்த போதிலும் புருஷனுடைய குடும்பமானது அவிபக்த நிலைமையிலேயே இருந்தால் அவள் எல்லா பாகஸ்தர்களுடைய சம்மதியையும் பெற்றுக்கொண்டே ஸ்வீகாரம் செய்துகொள்ளவேண்டும், 1 மது. 69; 26 மது. 627; மேலும் அவிபக்தர்கள் சம்மதிகொடுக்காமல் விபக்தர்களுடைய சம்மதி இருந்தாலும் பிரயோசனப்படமாட்டாது. 1 மது. 69; 3 இ. அ. 164; விபக்தகுடும்பமாயிருந்தால் எல்லாருடைய சம்மதமும் பெறவேண்டுமென்ற அவசியமில்லை, சிலருடைய சம்மதம் இருந்தாலே போதுமானது. கெட்ட எண்ணத்தினாலும் பொறாமையினாலும் மற்றவர்கள் சம்மதம்கொடுக்க மறுதளித்தாலும் பாதகமில்லை. 2 மது. 202;

**92.** ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளும்படி பெண்சாதிக்கு அனுமதிகொடுக்க அவகாசமில்லாமலாவது தவறியாவதுபோய புருஷன் இறந்திருந்தால் அவனுடைய அனுமதிக்கு பதியாக மாமனார் மைத்துனர் முதலான சபிண்டர்களுடைய அனுமதியைப்பெற்றுக்கொண்டு ஸ்வீகாரத்தைச் செய்துகொள்ளலாம் என்பது சட்டத்தின் கருத்து. ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ள வேண்டாமென்று புருஷன் தடை செய்திருந்தாலும், அல்லது இறந்து போவதற்கு முன் அவனால்செய்யப்பட்ட சொத்துக்களின் விநியோகம் முதலிய நடபடிக்கைகளால் ஸ்வீகாரம் செய்துகொள்ளவேணுமென்கிற அபிப்பிராயம் அவனுக்கு இல்லை என்று அனுமானிக்கக் கூடியதாக விருந்தாலும், விதவை ஸ்வீகாரம் செய்துகொள்ளக்கூடாது. இப்படிப்பட்ட விஷயத்தில் மாமனார் முதலிய தாயாதிகளுடைய அனுமதியும் பிரயோஜனப்படமாட்டாது (12 மு. இ. அ. 443.)

**93.** ஒருவனுக்கு இரண்டுமுதலிய பல பெண்சாதிகளிருந்தால் அவர்களில் ஸ்வீகாரத்தைச் செய்துகொள்ளும்படியான

அநுமதியைப் புருஷன் எவளுக்குக் கொடுத்திருக்கிறானோ அவளே ஸ்வீகாரம் செய்துகொள்ளவேண்டும். இன்னாருக்கென்று குறிப்பிட்டு அதிகாரத்தைக் கொடுக்காமல் புருஷன் இறந்து போயிருந்தால் மூத்தபெண்சாதிக்கே மற்றவர்களைவிட அதிக சுதந்திரமுண்டு 22 பம். 416.

94 வியபசாரியாயிருக்கும் விதவை ஸ்வீகாரத்துக்குரிய வைதீகச சடங்குகளைச்செய்ய யோக்கியதை யற்றவளாயிருப்பதோடு புருஷதுரோகமான அக்கெட்ட நடத்தையால் புருஷன் பொருட்டாயிருக்கிற ஸ்வீகாரத்தைச்செய்துகொள்ள உரிமை யற்றவளாகவும் இருக்கிறாள், ஆகையால் வியபசாரதோஷத்தை யடைந்திருக்கும் விதவையால் செய்துகொள்ளப்படும் ஸ்வீகாரம் செல்லமாட்டாது 13 பங்காள லா ரிபோர்ட்டு 14.

95. புருஷன் இறந்த பிறகு தாயாதிகளுடைய சம்மதியைப் பெற்றுக்கொண்டு விதவை ஸ்வீகாரம் செய்துகொள்ளலாமென்பது மீதாக்ஷிரை கிரந்தத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கிற இதக்ஷிணிந்தியாவில் மட்டும் வழங்கிவருகிறது. தாயபாகம் என்ற கிரந்தத்தை யனுசரிக்கிற பங்காளதேசத்தில் புருஷனுடைய அநுமதியைப் பெற்றிருந்தா லொழிய விதவைகள் ஸ்வீகாரம் செய்துகொள்ளக்கூடாது. பம்பாய் ராஜதானியில் விதவைகள் யாருடைய அநுமதியுமில்லாமலே ஸ்வீகாரம் செய்துகொள்ளலாமென்றிருக்கிறது.

96. ஸ்வீகாரம் வாங்கிக்கொள்ளும்படி புருஷன் மனைவியோர் கொடுக்கும் அநுமதியானது எழுத்து மூலமாக இருக்க வேணுமென்று அவசியம் இல்லை, வாய்மொழியாகவும் இருக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட அதிகாரத்தை பெண்சாதிக்குக் கொடுக்க விரும்புகிறவன் எழுத்து மூலமாய்க் கொடுப்பதே உசிதமானதாகும், அதனால் பின்னிட்டு யாதொரு ஆக்ஷேபனைக்கும் வழக்குக்கும் இடமிராது.

97. ஸ்வீகாரம் வாங்கிக்கொள்ளும்படியான அநுமதியாவது கட்டளையாவது புருஷனிடமிருந்து பெற்றிருந்த விதவை ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டாலும் [illegible] லவுது இஷ்டமில்லாமல் சும்மா இருந்தாலும் இருக்கலாம். [illegible]

காரம் வாங்கிக்கொள்ளாமல் சுமமா இருப்பவளை ஸ்வீகாரம் வாங்கிக் கொள்ளென்று யாரும கட்டாயப்படுத்த இடமில்லை. 7 கல். 288; 7 மு. இ. அ. 196.

**98.** மேலும் கட்டாயததின் பேரில் செய்து கொள்ளப்படும ஸ்வீகாரமும செல்லமாட்டாது. 13 மது. 214.

**99.** புருஷனுடைய அனுமதியைப் பெற்றிருக்கிற விதவையானவள் தனக்கிஷ்டம் வநதபோது வெகுகாலத்துக்குப் பிறகுகூட ஸ்வீகாரம செய்து கொள்ளலாம். புருஷன இறந்து போய் இவ்வளவு காலத்துக்குள்ளாக அவ்வதிகாரத்தை அவள் நிறைவேற்றிக கொள்ளவேணடுமென்ற கால நிர்ணயமும கிடையாது. புருஷன இறந்துபோய் 20, 25, 70 முதலான அநேக வருஷங்களுக்குப் பிறகும விதவையால எடுத்துக் கொள்ளப்பட்ட ஸ்வீகாரங்கள் செல்லுபடியுள்ளன வென்று தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. 4 பம. ஹை. கோர். 191; 9 பம. 58.

**100.** ஸ்வீகாரம் செயதுகொள்ள புருஷனுடைய அனுமதியைப் பெற்றிருக்கிற விதவையானவள் ஸ்வீகாரத்தைச் செய்து கொள்ளும வரையில், தான வார்சுபாத்தியப்படி பெற்றிருக்கிற புருஷனிட சொத்துக்களில் எல்லா சுதந்திரங்களோடும உடையவளாகவே யிருக்கிறாள். யாதொரு அனுமதியையும பெறாத ஒரு விதவைக்கு உள்ள சுதந்திரங்கள யாவும அவளுக்கு மிருக்கின்றன. தத்தாக ஏற்படப்போகிற பிள்ளையின் ஜனனத்தால் புருஷன் சொத்துக்களை அவள அனுபவிக்கிறதில்லை. ஸ்வீகாரம் எடுத்துக்கொண்ட பிறகே சொத்தானது அவளைவிட்டு விலகி ஸ்வீகார புத்திரனை யடையும. 7 மு. இ. அ. 169; 5 கல. 251.

**101.** புருஷனால் கொடுக்கப்பட்ட அனுமதிப்படி விதவையானவள் ஸ்வீகாரம் செய்து கொள்ளுவதற்கு யாதொரு கால நிர்ணயமும் இல்லாம லிருந்தபோதிலும, அவ்வனுமதியானது நிறைவேற்றப்பட முடியாமலாயாவது பிரயோஜன மற்றதாயாவது ஏற்பட்டு விட்டால் அதன் பிறகு விதவைக்கு ஸ்வீகாரம எடுத்துக்கொள்ள அதிகாரமில்லை.

உதாரணம்.— உயிரோடிருக்கும் குமாரன் இறந்துபோனால் ஸ்வீகாரம் செய்துகொள்ளென்று ஏ ஆகிய புருஷன் பி ஆகிய தன் பெண்சாதிக்கு அனுமதி கொடுத்துவிட்டு இறந்து போகிறான். அக்குமாரன் விவாகம் செய்துகொள்ளாமலே இறந்து போய்விட்டால் பி யாகிய அவன்தாயாரே அவனுக்கு வார்சாக இருந்து சொத்தையடைந்து விடுவாள். அப்போது அவளால் எடுத்துக்கொள்ளப்படும் ஸ்வீகாரப்பிள்ளைக்கு அச்சொத்து கிடைக்கும். ஆனால் குமாரன் விவாகம் செய்துகொண்டு பிற்பாடு இறந்துபோனால் அவனுக்குப்பின் அவனுடைய விதவையே வார்சாக ஏற்பட்டு சொத்தை யடைவாளாதலால் அவன் தாயாராகிய பி க்கு சொத்து சேருகிறதில்லை. சொத்தை யடையாத பி யால் எடுத்துக்கொள்ளப்படும் ஸ்வீகாரப் பையனுக்கு அப்போது யாதொரு சொத்தும் கிடைக்க இடமில்லை. இவ்வாறு பி யால் எடுத்துக்கொள்ளப்படும் ஸ்வீகாரம் பிரயோஜனமற்றதாய்ப்போகும் நிலைமையி லிருக்கிறபடியால் அவளுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரமும் பிரயோஜனமற்றதாய் விடுகிறது. ஆகையால் இப்படிப்பட்ட சந்தாப்பத்தில் விதவை எடுத்துக் கொள்ளும் ஸ்வீகாரம் செல்லமாட்டாது. 10 மு. இ. அ. 279; 8 கல. 302; 7 மது. 401; 9 பம். 94; 8 இ. அ. 229; 14 இ. அ. 67; 17 பம. 164; 26 பம. 526; 18 கல். 385; 18 கல். 69.

**102.** சொத்தானது வேறு வார்சுக்குச் சேர்ந்துவிடாமல் தன்னையே சேர்ந்துவிட்டால் அப்போது விதவையானவள் ஸ்வீகாரம் செய்துகொள்ளலாம். அதாவது குமாரனானவன் முன் சொன்னபடி விவாகமில்லாமலே இறந்துபோனால் அவனுக்குப் பின் அவ்விதவையே தாயார் என்ற வார்சு பாத்தியப்படி சொத்தை யடைகிறாள். அப்போது அவளால் எடுத்துக் கொள்ளப்படும் ஸ்வீகாரனும் அச்சொத்தை யடைவான். அதுபற்றி அச்சுவீகாரம் செல்லும்படி யுள்ளதாக இருக்கிறது. 8 மது. ஹை. கோர்ட். 108; 1 மது. 174; 7 பம். 225; 20 பம். 250; 25 பம். 306.

## II. எவர்கள் பிள்ளையை ஸ்வீகாரம் கொடுக்கலாம்.

**103.** ஒரு பிள்ளையைப் பிறனுக்கு தத்தாக கொடுத்து

விட்டால் அப்பிள்ளையானவன் பிறந்த குடும்பத்தை விட்டு முற்றிலும் விலகி அக்குடும்பத்தில் உடைத்தாயிருந்த சகல சுதந்திரங்களையும் இழந்து அன்னிய குடும்பத்தையே சேர்ந்தவனாக ஆய் விடுகிறான். ஆனபடியால் பிள்ளையைப் பெற்று வளர்த்து அவனுடைய க்ஷேமத்தையும் நன்மையையுமே சுபாவத்தில் கருதுகின்றவர்களான தகப்பன் தாய் மாத்திரமேயல்லாமல் வேறு யாருக்கும் பிள்ளையை தத்துக் கொடுக்கும் சுதந்திரம் கிடையாது.

**104.** பெற்றோராகவிருவரில் தகப்பனே முக்கிய பாத்தியஸ்தனாகவும் அதிக சுதந்தரவாளியாகவும் இருப்பதால் பிள்ளையை தத்துக்கொடுப்பதிலும் அவனுக்கே விசேஷ பாத்தியம் இருக்கிறது. தாயாருடைய சம்மதமில்லாமலே தகப்பனானவன் பிள்ளையை தத்துக் கொடுத்து விடலாம். 11 பம். ஹை. கோர்ட். 199.

**105.** ஆனால் தகப்பனிருக்கும்போது அவனுடைய சம்மத மில்லாமல் தாயாரானவள் பிள்ளையை தத்துக் கொடுக்கக் கூடாது. தகப்பன் இறந்து போய்விட்டாலும், தேசாந்திரம் போய் வெகுகாலம் திரும்பி வராமலே யிருந்தாலும், சன்னியாசியாய்ப் போயிருந்தாலும், அல்லது பைத்தியகாரனாக இருந்தாலும், தாயாரானவள் பிள்ளையை தத்துக் கொடுக்கலாம் .1 மது. 151; 2 பம். 377; 30 கல. 365.

**106.** ஆனால் பிள்ளையை தத்துக்கொடுக்க வேண்டாமென்று தகப்பன் தடுத்திருந்தாலும் அல்லது அப்படிப்பட்ட தடையானது அவனுடைய நடபடிக்கைகளிலிருந்தும் சந்தர்ப்பங்களிலிருந்தும் அனுமானிக்கக் கூடியதாக விருந்தாலும் தாயாரானவள் பிள்ளையை தத்துக் கொடுக்கக்கூடாது. 11 மது. 113 18 மது. 53; 26 இ. அ. 113.

**107.** பெற்றோரைத்தவிர மற்றவர்கள் ஒரு பிள்ளையை தத்தாக கொடுக்கக்கூடா தென்றிருப்பதால், பாட்டன், தமயன், தாயின் சக்களத்தி, சிற்றப்பன், பெரியப்பன், முதலான எவருக்கும் அவ்வித சுதந்திரம் கிடையாது. அதிகாரமில்லாதவர்கள் கொடுக்கும் தத்து செல்லவு மாட்டாது. 10 பம். ஹை. கோர்ட். 235; 16 மது. 384.

**108.** பிள்ளையை தத்துக்கொடுக்கும்சுதந்திரம் பெற்ற தகப்பன தாய்களுக்கே உரித்தானதாக இருந்தாலும தத்துக் கொடுப்பதற்குள்ள சடங்கு முதலியவைகள் அவர்களாலேயே நடத்தப்பட வேண்டுமென்ற கட்டாயமில்லை. ஸ்வீகாரத்துக் குறிய சடங்குகள் நடக்கும்போது அவர்களே மனையி லுட்கார்ந்துகொண்டு சடங்குகளை நேரில் செய்யாது பிறரைக் கொண்டும செய்விக்கலாம. பிள்ளையை தத்துக் கொடுக்கலாமா கூடாதா என்ற விஷயம மட்டும பெற்றோர்களாலேயே யோசித்துத் தீர்மானிக்கப படவேண்டும். அவ்வதிகாரத்தை அவர்கள யாருக்கும கொடுக்கக்கூடாது. அவ்விதம் பெற்றோரால் தீர்மானிக்கப்பட்ட பிறகு அவர்களுடைய அனுமதியைப் பெற்ற தமயன பாட்டன முதலிய பிறர்கள் ஸ்வீகாரத்துக்குறிய கிரியை சடங்கு முதலியவைகளைச செய்து முடிக்கலாம. இவ்விதம நடத்தப்படும ஸ்வீகாரங்களும செலலுபடியுள்ளதாகும. 8 பம. ஹை. கோர்ட். 244 ; 7 பம். 225 ; 7 மது. 549 ; 21 மது. 497 ; 22 பம. 590

## III. எவனை ஸ்வீகாரம் செய்து கொள்ளலாம்.

**109.** ஸ்வீகரித்துக கொள்ளப்படும் பிள்ளை சொந்தப் பிள்ளை போலவே பாவிக்கப்பட வேண்டி யிருப்பதால் அவன அவ்விதம பாவிக்கப்படத்தக்க அந்தஸ்தையும யோக்கியதையையும உடையவனாக இருக்கவேண்டும். அதுபற்றி சகோதரர் முதலிய சமீப தாயாதிகளுடைய பிள்ளையை தத்தாக எடுத்துக்கொள்ளுவது சிலாக்கியமான தென்றும, சமீப தாயாதிகளுக்குள் பிள்ளையில்லாமற் போனால் தூர தாயாதிகளிட பிள்ளையை தத்து எடுத்துக கொள்ளும படிக்கும் தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட் டிருக்கிறது. ஆனாலும இவ்விதமே செய்யவேண்டுமென்ற கட்டாயம இக்காலத்தில் இல்லை. பக்க தாயாதி வர்க்கத்திலும தூர தாயாதி வர்க்கத்திலும் அநேக பிள்ளைகள் இருக்க அவர்களி லொருவனையும் தத்து எடுத்துக்கொள்ளாமல் அன்னிய கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பையனை தத்து எடுத்துக்கொண்டால் அதுவும சட்டப்படி செல்லுபடியுள்ளதாகும். 6 பம. ஹை. கோர்ட். 70; 10 பம். 80; 5 கல். 587; 5 இ. அ. 40

**110.** தத்துப்பிள்ளையானவன சொந்தப்பிள்ளை போலவே பாவிக்கப்படத் தகுந்தவனு யிருக்கவேண்டு மென்ற மேற்சொன்ன விதியை யனுசரித்து தத்துப்பிள்ளையின் பெற்ற தாயார் கன்னிகையா யிருந்த நிலைமையில் தத்து எடுத்துக் கொள்கிறவனால் விவாகம பண்ணிக் கொள்ளத் தகுந்த முறைமையில் இருந்திருக்க வேண்டு மென்றும், விவாகம் செய்து கொள்ளத் தகாத முறைமையிலிருக்கிற ஸ்திரீகளினுடைய பிள்ளைகளை தத்து வாங்கிக் கொள்ளக்கூடாதென்றும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால இவ்விதியை யனுசரித்து புத்திரி, சகோதரி, தகப்பனுடைய சகோதரி, தாயுடைய சகோதரி, முதலான வாகளின பிள்ளையையும், தம்பி, சிறறப்பன பெரியப்பன, மாமன், முதலான வாகளையும தத்து வாங்கிக்கொள்ளக் கூடாது. 3 மதா. 15; 11 மதா. 49; 26 இ அ 153; 21 அல. 412; 17. அல. 294.

**111.** ஆகிலும மேற சொன்ன விதியானது பிராமணா முதலிய உயாந்த ஜாதியாருக்கே மட்டுமே ஒழிய சூத்திரா முதலிய கீழ் ஜாதியாாகளால அனுஷ்டிக்கப்பட வேண்டிய அவசியமில்லை. (2 மதா. ஹை. கோரி. 462; 3 மதா. 15; 11 மதா 49). சூத்திரா முதலிய ஜாதியாாகள சகோதரி பிள்ளை, பெண்ணின் பிள்ளையான தௌகித்திரன, முதலானவாகளையும தத்து வாங்கிக் கொள்ளலாம. 10 கல. 688.

**112.** சூத்திராகளுக்குள தாயாருடைய சகோதரியின பிள்ளையை தத்து வாங்கிக் கொள்ளுவதும செல்லுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 1 மதா. 62.

**113.** பிராமணா முதலிய உயர்ந்த ஜாதியாருக்குள் தௌகித்திர ஸ்வீகாரமும் சகோதரி புத்திர ஸ்வீகாரமும ஹிந்து தர்மசாஸ்திரங்களினபடி ஒப்புக்கொள்ளப்படத்தக்கதல்ல வாகையால் அவைகள் சாதாரணமாய் செல்லுபடி யுள்ளதாகமாட்டாது. 1 மதா. ஹை. கோரி. 420; 7 மதா. ஹை. கோரி. 250; 24 அல். 195; 21 அல். 412.

**114.** ஆனால் அப்படிப்பட்ட ஸ்வீகாரங்கள் சாஸதிர விரோதமாக இருந்தாலும பிராமணா முதலியோர்களுக் குள்ளாக

வும் வழக்கமாய் நடந்துவருகிறதென்று பின்னிட்ட
வியாஜ்ஜியங்களில் ரூபிக்கப்பட்டபடியால் வழக்கத்தை யனுச
ரித்து அவ்வித ஸ்வீகாரங்களும் அவ்வழக்கம் இருக்கும் இடங்
களில் செல்லத் தகுந்ததாகும் என்று இப்பால் தீர்மானிக்கப்
பட்டிருக்கிறது. (7 மதா. 3; 9 மதா. 44; 14 அல. 53;) ஆ
னால் அவ்வித வழக்கம் இருக்கிறதாக திருப்தியாய் ரூபிக்கப்படா
விட்டால் சாஸ்திரவிரோதமான அந்த தத்துக்கள் ஒப்புக்
கொள்ளப்பட மாட்டாது. 24 அல். 195; 17 அல். 294.

**115.** ஸ்வீகாரப்பிள்ளை ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளுகிற
வனுடைய ஜாதியையும் வகுப்பையும் சேர்ந்தவனாக இருக்கவே
ண்டுமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்
விதி கண்டிப்பாய் அனுஷ்டிக்கப்படவேண்டும். அன்னியஜாதி
யையும் வகுப்பையும் சேர்ந்த ஒரு பையனை தத்து எடுத்துக்
கொண்டால் அது செல்லமாட்டாது.

**116.** குடுமி வைத்தலாகிய சௌளம் என்ற ஸம்ஸ்காரம்
செய்யப்படாமலிருக்கிற ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தையை
ஸ்வீகாரம் செய்து கொள்ளுவது சாஸ்திரோக்தமானதாகும்.
ஆகிலும் அப்போது அவ்விதமே செய்யப்பட வேண்டுமென்ற
கட்டாயம் இல்லை.

**117.** பிராமணர் முதலிய முதல் மூன்று வருணத்தார் உப
நயனம் (பூணூல்கல்லியாணம்) ஆகுமவரையில் ஒரு பிள்ளையை
தத்து எடுத்துக்கொள்ளலாமென்றும், உபநயன ஸம்ஸ்காரமில்
லாத சூத்திரர் முதலிய ஜாதியார்கள் விவாகமாகுமவரையில் பிள்
ளையை தத்து எடுத்துக்கொள்ளலாமென்றும் தீர்மானிக்கப்
பட்டிருக்கிறது. (6 மது. 43; 13 மது. 128).

**118.** உபநயனத்துக்குப்பிறகு அன்னிய குலம் கோத்தி
ரத்தைச் சேரமுடியாதாகையால் முதல் மூன்று வருணத்தாருக்
குள் உபநயனமே ஸ்வீகாரத்துக்கு வரம்பாக ஏற்படுத்தப்பட்டி
ருக்கிறது.

ஆனால் ஸ்வீகாரப் பிள்ளையானவன் ஸ்வீகாரம் எடுத்
துக்கொள்ளுகிறவனுடைய கோத்திரத்தை சேர்ந்தவனா

இருந்தால் அவனை உபநயனமான பிறகும் ஸ்வீகாரம் செய்து கொள்ளலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 9 மத. 148.

**119.** அன்னிய கோத்திரத்தைச் சேர்ந்தவனாக இருப்பவனை உபநயனத்துக்குப் பிறகு ஸ்வீகாரம் செய்துகொள்ளக்கூடாது. 9 அல். 253.

**120.** மேலும் ஸகோத்திரத்தைச் சேர்ந்தவனாக இருந்தாலும் விவாகமாய்விட்ட பிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொள்ளக் கூடாது. 13 மத. 128; 6 மத. 43.

**121.** பெற்ற தகப்பன் தாயைத் தவிர வேறு யாருக்கும் பிள்ளையைத் தத்துக்கொடுக்கும் சுதந்திரமில்லையாகையால் தாய் தகப்பன் இல்லாத பிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொள்ளக்கூடாது. 2 மத. ஹை. கோர். 129; 6 பம. ஹைகோர்ட் 83.

**122.** ஜேஷ்டபுத்திரனையாவது ஏகபுத்திரனையாவது தத்துக்கொடுப்பதும் வாங்குவதும் சரியல்லவென்று தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதையனுசரித்து அப்படிப்பட்ட பையனை ஸ்வீகாரம் செய்துகொள்ளுவது செல்லமாட்டாதென்று கல்கத்தா பம்பாய் ஹைகோர்ட்டார்கள் முதலில் தீர்மானித்தார்கள். ஆனால் மதராஸ் அல்லஹாபாத்து ஹைகோர்ட்டார்கள் அவை செல்லுமென்று தீர்மானித்தார்கள். அப்படிப்பட்ட பிள்ளைகளைத் தத்தாகக் கொடுப்பதும் வாங்குவதும் அவ்வளவு கிரமமானதல்லவென்பது சாஸ்திரத்தின் கருத்தேயன்றி அவ்வித ஸ்வீகாரங்கள் செய்யப்பட்டு விட்டால் தள்ளுபடியுள்ளதாக மாட்டாது என்று மேலான பிரிவி கௌன்சில் கோர்ட்டாரும் மதராஸ் அல்லஹாபாத்து ஹைகோர்ட்டார்களைப் போலவே தீர்மானித்து முடிவு செய்திருக்கிறார்கள். ஆகையால் இக்காலத்தில் ஏகபுத்திர ஸ்வீகாரமும் ஜேஷ்டபுத்திர ஸ்வீகாரமும் செய்யப்பட்டுவிட்டால் செல்லுபடியுள்ளதாகவே இருக்கின்றன. 11 மத. 43; 2 அல். 164; 7 பம. 221; 7 பம. 225; 18 மத. 53; 21 அல். 460; 24 பம். 367; 26 இ. அ. 113; 22 மத. 398. இது முடிவான பிரிவிகௌன்சில் தீர்ப்பு.

**123.** அடியிலகண்ட பிள்ளைகளின ஸ்வீகாரமும செல்லுபடியுள்ளதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.—

(1) பெண்சாதிகூடப பிறநதவனுன மைததுனன. 4 மது. 15.

(2) ஷை மைததுனன மகன. 22 பம. 973.

(3) பெண்சாதியின சகோதரியினுடைய மகன. 20 ,, து. 283.

(4) சகோதரனுடைய பௌததிரன், 6 கல 41.

(5) சகோதரியினுடைய பௌததிரன

(6) தாயாருடைய சகோதரியின் மகளுடைய மகன் 7 மது. 548.

(7) தகப்பனுடைய சகோதரன பேரன். 14 பது, 459.

## IV ஸ்வீகாரத்துக்குறிய விதிகளும் சடங்கு முதலியனவும.

**124.** ஒரு காலததில ஒரே ஸ்வீகாரம தான எடுததுக கொள்ளப்படவேணடும. ஏககாலததில ஒன்றுக்கு மேறபட்ட பிள்ளைகளை ஸ்வீகாரம செயதுகொணடால அவைகளில ஒன்றும செல்லுபடியாகாது. 12 கல. 686; 19 இ. அ. 108; 19 கல. 513; 12 இ. அ- 12 கல. 406.

**125** முதலில எடுத்துக்கொண்ட ஸ்வீகாரப்பிள்ளை இறநதுபோய்விட்டால பிறகு வேறு பிள்ளையை மறுபடியும ஸ்வீகாரம செய்துகொள்ளலாம. இரண்டாந்தரம ஸ்வீகாரம செயது கொண்ட பிள்ளையும இறநதுபோனுல் மூன்றும தடவை ஸ்வீகாரம செய்துகொள்ளலாம. இப்படியாக முன ஸ்வீகரிததுக்கொண்ட பிள்ளை இறக்க இறக்க அடுததடுத்து வேறு ஸ்வீகாரங்களைச செய்துகொள்ளலாம. 9 கல். 50; 4 மு. இ. அ. 1. 20 இ. அ. 40; 20கல். 487.

**126.** முதலில் ஸ்வீகாரம் செய்யப்பட்ட பிள்ளை உயிரோடிருக்கும்போதே வேறு பையனை ஸ்வீகாரம் செய்துகொண்டால் அது (2-வது ஸ்வீகாரம்) செல்லமாட்டாது. இரண்டாவது ஸ்வீகாரத்துக்குப் பிறகு முதல் ஸ்வீகாரன் இறந்துபோய்விட்டாலும் செய்யப்பட்ட காலத்திலேயே செல்லுபடியற்றதாக விருந்த இரண்டாவது ஸ்வீகாரமானது பிறகும் செல்லுபடியை யடையமாட்டாது. 4 மு. இ. அ. 1; 22 பம். 551; 20 கல. 487.

**127.** பிள்ளை, பேரன், கொள் பேரன், ஸ்வீகாரப்பிள்ளை ஆகிய இவர்கள் துன்மார்க்கர்களாகவும் அயோக்கியர்களாகவும் தனக்கு சொன்னபடி கேளாதவர்களாயு மிருக்கிறார்களென்பது வேறுபிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொள்ளுவதற்கு நியாயமாகமாட்டாது. தவிர, பிள்ளை முதலானவர்களுடைய சம்மதி பெற்றுக்கொண்டு ஸ்வீகாரம் செய்துகொள்ளுதலும் பிரயோஜனப்படமாட்டாது. (1856ஞு-ததிய பதூரால் ஹைகோர்ட்டு தீர்ப்பு.)

பிள்ளை முதலிய சந்ததியான பிரஷ்டனுகி ஜாதியிலிருந்து நீக்கப்பட்டுப்போனால் மட்டும் வேறு பையனை ஸ்வீகாரம் செய்துகொள்ளலாம்.

**128.** புருஷன்கொடுத்த அனுமதிப்படி விதவைசெய்துகொள்ளும் ஸ்வீகாரவிஷயத்தில், ஒருதரம் அவள் ஸ்வீகாரம் செய்துகொண்டுவிட்டதினாலேயே புருஷன் கொடுத்த அனுமதி முடிந்துபோகிறதில்லை யென்றும், ஸ்வீகாரப்பிள்ளை இறந்துபோனால் விதவையானவள் இரண்டாந்தரம் ஸ்வீகாரம் செய்துகொள்ளலாமென்றும் சமீபத்தில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 26 மது. 681.

**129.** புருஷனுடைய அனுமதியின்பேரில் ஸ்வீகாரம் செய்துகொள்ளுகிற விதவை அவ்வனுமதியையும் அதன் நிபந்தனைகளையும் சரியாய் அனுசரித்து நடக்கவேண்டும். இன்னபிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொள் என்று புருஷன் குறிப்பிட்டிருந்தால் விதவையானவள் அந்தப்பிள்ளையையே ஸ்வீகாரம்செய்து

[illegible]. [illegible] அப்பிள்ளையை ஸ்வீகரித்துக் கொள்ளக் கூடாது. [illegible] ஸ்வீகாரத்தைச் செய்[illegible] அனுமதிகொடுத்திருந்தால் [illegible] பிள்ளையை தத்துவாங்கிக் கொள்ள[illegible].

**130.** ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளுகிறதாக புருஷன் ஏற்படுத்தின நிபந்தனையானது நியாயமானதாக இருக்கவேண்டும். நியாயவிரோதமான நிபந்தனைகளை ஏற்படுத்தி ஸ்வீகாரம் வாங்கிக்கொள்ளும்படி அனுமதி கொடுத்திருந்தால் அவ்வனுமதியானது கோர்ட்டிலும் பிரயோஜனப்படமாட்டாது. அப்படிப்பட்ட அனுமதிப்படி வாங்கிக்கொள்ளும் ஸ்வீகாரமும் செல்லமாட்டாது. அது யாதொரு அனுமதியும் இல்லாததுபோல [illegible].

**131.** ஸ்வீகாரம் செய்துகொள்ளும்படி புருஷன் கொடுத்திருந்த அனுமதிப்படி விதவையானவள் ஒருதரம் ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டு விட்டால் அவ்வனுமதி அத்தோடு முடிந்துபோய் விடுகிறதென்றும் அந்த ஸ்வீகாரப்பிள்ளை இறந்துபோய்விட்டால் இரண்டாந்தரம் ஸ்வீகாரம் செய்துகொள்ள அவளுக்கு அதிகாரமில்லையென்றும் மதுரை ஹைகோர்ட்டார் முதலில் தீர்மானித்திருந்தார்கள். (14 மது. 65;) அத்தீர்ப்பு இப்போது மாற்றப்பட்டுவிட்டது. (125-வது பிரிவைப்பார்க்க).

**132.** புருஷனுடைய சொத்துக்கள் தன்பெண்சாதி வசத்திலேயே அவளுடைய ஆயுசுகாலம்வரையில் இருக்கத்தக்கதென்றும், அவள் இறந்தபிறகே ஸ்வீகாரப்பிள்ளை சொத்தையடையவேண்டுமென்றும் நிபந்தனையை ஏற்படுத்தி ஸ்வீகாரம் செய்துகொள்ளும்படி பெண்சாதிக்கு புருஷன் அனுமதிகொடுத்திருந்த ஒருகேசில், இவ்வித அனுமதியும் நிபந்தனையும் சரியானதென்றும் அதன்படி எடுத்துக்கொள்ளப்பட்ட ஸ்வீகாரப்பிள்ளையானவன் ஸ்வீகாரத் தாயார் இறந்தபிறகே சொத்தையடைவானென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது 8 கல்.357

**133.** பிள்ளைக்கொடுப்பவன பிள்ளையை தனகையால் கொடுதது ஸ்விகாரத்தகப்பனிடத்தில ஒப்புவித்ததும ஸ்விகாரத்தகப்பன அப்பிள்ளையை அங்கிகரிததுப பெறறுக்கொளளுதலும ஆகிய இந்த இரண்டுகிரியைகளும ஸ்விகாரத்துக்கு அவசியமானவைகள. இந்த இரண்டும கிரமமாய் நடத்தப்பட்டாலதான ஸ்விகாரம பூர்த்தியானதாகும. 7 இ. அ. 24;

**134.** பிள்ளையைக கொடுக்கிறதாகவும பெறறுக்கொளளுகிறதாகவும வாயால சொலலுவதினாலும தஸதாவேஜ எழுதிக கொளளுவதினாலுமே ஸ்விகாரம ஏற்பட்டதாக படடாது 7 இ. பு. 250-6 கல. 381; 13 மது. 214.

**135.** ஸ்விகாரத்துக்கு தத்தஹோமம் என்ற ஒருமுக்கியமான சடங்கு இருக்கிறது. பிராமமணா முதலிய முதல மூன்று வருணத்தாாகளில இச்சடங்கு அவசியம செய்யப்படவேண்டுமென்றும சூத்திரா முதலானோாகளுக்கு இது அவசியமில்லையென்றும சாஸதிரஙகளில சொலலப்பட்டிருக்கிறது. அதுபறறி சூத்திர முதலிய ஜாதியாருககுள் தத்தஹோமம இலலாமலே செய்யப்படும ஸ்விகாரம செலலுபடியுளளதாகுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 7 இ. அ. 24; 5 கல. 770; 5 மது. 358.

**136** மேலும சூத்திரா முதலியவாகளுக்கு வைதிகசசடங்கு எதுவானாலும அவசியமிலலாததினாலே தீண்டலாயிருக்கும்போது கூட அவாகளில செய்யப்படுகிற ஸ்விகாரமும செல்லுபடியுளளதாகுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 5 மது 358 9 மு. இ. அ. 506.

**137.** ஆனால் பிராம்மணா முதலிய உயாநத ஜாதியாாகள தீண்டலாயிருக்கும்போது ஸ்விகாரமசெய்து கொளளககூடாது. 13 மது. 214; 18. மது. 397.

**138.** பிராம்மணர் க்ஷத்திரியா வைசியர் ஆகிய முதல்மூன்று வருணத்தாாகள் தத்தஹோமமிலலாமலே ஸ்விகாரமசெய்து

காளலாம் என்பதற்கு போதுமான ஆதாரம் இல்லை. பிராம்ம ணர்களுக்குள் தத்தஹோமம் அவசியம் செய்யப்படவேண்டுமெ ன்றே மேலான எல்லா கோர்ட்டுகளிலும் தீர்மானிக்கப்பட்டிரு க்கிறது 7 இ. அ. 230. 7 மது. 548; 13 மது. 214, 219; 11 பா. 381.

139. அநுல தத்துப்பிள்ளையானவன் தத்து எடுத்துக்கொ ள்ளுகிறவனுடைய கோத்திரத்தைச்சேர்ந்தவனாகவாவது அல்ல து புத்திரியின் புத்திரனை தௌஹித்திரனாகவாவது இருந்தால் பிராம்மணர்களுக்குள்ளும் தத்தஹோமம் தேவையில்லை என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 11 மது. 5; 6 அல. 276; 24 பம். 218

140. அவசியமில்லாமலிருக்கிற கேஸிலும் ஒரு தத்த ஹோமாதிசடங்கை பின்னிட்டு செய்யலாமென்று எண்ணியிருக் கின்றிருந்தால் அப்போது அதில்லாமல் ஸ்வீகாரம் முடிவு பெற்றதாகமாட்டாது. 19 கல். 452.

141. ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளுகிறவன் சுற்றத்தார், சிநேகிதர் முதலானோர் பலரையும் வரவழைத்து தத்தஹோமம் முதலிய பலவைதிக சடங்குகளைச்செய்து பிறகு தத்து எடு த்துக்கொள்ள வேண்டுமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட் டிருக்கிறது. அவ்விதமா யெல்லாம் செய்யப்படவேண்டுமென அவசியம் இக்காலத்தில் இல்லை. ஆகிலும் அவ்வாறு செய்வதே உசிதமானதாகும். ஸ்வீகாரத்தைப்பற்றி வழக்கு நேரிட்டவிடத் து அப்படிப்பட்ட நடவடிக்கைகள் ஸ்வீகாரத்தை ருசுப்படுத்து வதற்கு தக்கசாக்ஷியமாக ஏற்படும்.

142. மேலும் ஸ்வீகாரத்தைக்குறித்து எழுத்துமூலமான சாசனம் இருக்கவேண்டுமென்கிற அவசியமும் இல்லை. ஆயினும் அப்படிப்பட்ட சாசனம் ஒன்று பிறப்பித்துக்கொண்டால் அது வழக்குநேரிட்டபோது தக்க சாக்ஷியமாக உபயோகப்படும்.

## V. ஸ்வீகாரத்தின் பலாபலன்கள்.

143. கிரமமானபடி ஸ்வீகாரம் செய்யப்பட்ட பிறகு ஸ்வீ

காரன் பிறந்த குலங் கோத்திரத்தினின்றும் பிறந்த குடும்பத்து சொத்து சுதந்திரங்களினின்றும் முற்றிலும் நீங்கினவனாகி ஸ்வீகாரத்தகப்பனுடைய குலங்கோத்திரத்தைச் சேர்ந்து சொந்த பிள்ளையைப்போல அத்தகப்பனுடைய சொத்து சுதந்திரங்களுக்கு பாத்தியனாகிறான்.

**144** ஸ்வீகாரத்துக்குப்பிறகு ஸ்வீகாரத் தகப்பன் தாயமாதிகளே ஸ்வீகாரப்பையனுக்கு தாயாதியனுமாக ஏற்படுகிறார்கள்.

**145.** ஸ்வீகாரனுக்கும் அவன் பிறந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கும் பரஸ்பரம் உள்ளவாகு முதலிய பாத்தியங்களையும் ஸ்வீகாரத்துக்குப் பிறகு நீங்கிவிடுகிறது. 1 மது. ஹை. கோர்ட். 363 ; 25 மது. 394 ;

**146.** ஆனாலும் ஸ்வீகாரனானவன் ஸ்வீகாரம் போகாமலே யிருந்தால் யாரை விவாகஞ்செய்து கொள்ளக்கூடாதோ அப்படிப்பட்ட சொந்தக்காரப் பெண்களை ஏற்கனவே ஏற்பட்டுள்ள ரத்த சம்பந்தத்தினால் ஸ்வீகாரத்துக்குப் பின்னும் விவாகஞ்செய்து கொள்ளக் கூடாது.

**147.** ஸ்வீகாரன் சகலவிதத்திலும் சொந்தப்பிள்ளையைப் போலவே பாவிக்கப்படுகிறபடியால் அவன் ஸ்வீகாரத்தகப்பனுக்கன்றி ஸ்வீகார குடும்பத்திலுள்ள பாட்டன் முதலிய முன்னோர்களுக்கும் சிறிய தகப்பன் பெரியப்பன் முதலான பக்க தாயாதிகளுக்கும் பந்துக்களுக்கும் வாரசாக ஏற்பட்டு அப்பிரதிபந்தமாயும் சப்பிரதிபந்தமாயுமுள்ள எல்லாசொத்துக்களுக்கும் பாத்தியனாகிறான். 7 மது. 255; 5. கல். 615. 6 கல். 289, 8. கல். 302; 8 இ. அ. 229.

**148.** மேலும் அவன் ஸ்வீகாரத்தகப்பனுக்கன்றி ஸ்வீகாரத்தாயார் அல்லது தாயார்களுக்கும் புத்திரனாக இருக்கிறபடியால் அத்தாயார் அல்லது தாயார்களுடைய ஸ்திரீ தன சொத்துக்களுக்கும் வார்சுக்கிரமத்தில் பாத்தியஸ்தனாகிறதும் தவிர, அத்தாயார்களின் தகப்பனமார்களுக்கும் தௌகித்திரனாக ஏற்பட்டு அவர்களுடைய சொத்துக்களையும் வாரசு கிரமத்தில் தௌகித்

தோபாத்தியப்படி யடையக்கூடியவனாக இருக்கிறான். மேலும் தாயவழியைச் சேர்ந்த மற்றபந்துக்களுக்கும் அவன் வாரசானா. 10. இ. அ. 138; 6. கல. 256; 1. அல். 256, 9. கல. 70; 10 கல 232.

**149.** முறைப்படி செய்யப்பட்ட சரியான ஸ்வீகாரம் பிறகு எக்காரணத்தாலும் ரத்தாகமாட்டாது. (2. அல். 366) ஆனால் அப்படி கிரமமாய் ஸ்வீகாரமானபிறகு ஸ்வீகாரன் பிறந்த குடும்பத்தைப்போய் மறுபடியும் சேரமுடியாது.

**150** ஆனால் ஒருவனுடைய ஸ்வீகாரமானது சரியாய் செய்யப்படவில்லையென்றாவது செல்லத்தக்கதென்றாவது உள்ள காரணத்தால் தள்ளுபடிசெய்யப்படும்போனால் அவனுக்கு ஸ்வீகாரக் குடும்பத்தில் யாதொருபாத்தியமும் ஏற்படமாட்டாது. பிறந்த குடும்பத்திலுள்ள பாத்தியங்களும் விலகிப்போகமாட்டா. 1 மது. ஹை. கோர். 363, 12 பம. ஹை. கோர். 3 7.

**151.** விதவைசெய்துகொள்ளும் ஸ்வீகாரத்தில் ஸ்வீகாரமானவுடனே புருஷன் சொத்துக்களில் அவளுக்கிருந்த அனுபோக பாத்தியமானது அவளைவிட்டு விலகிவிடுகிறது. ஸ்வீகாரபிள்ளையே சகலபாத்தியங்களையு மடைந்துவிடுகிறான்.

**152.** ஸ்வீகாரத்துக்கு முன்தாயாரால் செய்யப்பட்ட சொத்துக்களின் அனுவசியமான விநியோகங்களை ஆக்ஷேபிக்கவும் அச்சொத்துக்களை உடனேகைவசப்படுத்திக் கொள்ளவும் ஸ்வீகாரனுக்கு பாத்தியமுண்டென்று முன் தீர்மானிக்கப்பட்டிருந்தது. (6. பம. 463) அது இப்போது மாறிவிட்டது. அவளுடைய காலத்துக்குப்பிறகே அச்சொத்தை ஸ்வீகாரன் அடையக்கூடும் என்று இப்பால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 26 மது. 113.

**153.** ஸ்வீகாரத்துக்குப் பிறகு விதவையானவள் ஜீவனம் சத்துக்குமட்டும் பாத்தியஸ்தியாக இருக்கிறாள் ஆனால் ஸ்வீகாரப்பிள்ளை மைனராயிருந்தால் மைனரிடி நீங்குமவரையில் அவளே அவனுக்கு காடியனாக இருக்கவும் சொத்துக்களைப்பரி

பாலித்துக்கொண்டு குடும்பயோகக்ஷேமங்களை நடத்திவாவும் சுதந்திரவாளியாக இருக்கிருள்.

**154.** ஸ்வீகாரப்பிள்ளை என்ற காரணம்பற்றி ஒருபையனுக்கு யாதொரு சொத்தானது தானமாயாவது உயில்மூலமாயாவது மற்றொருவரால் கொடுக்கப்பட்டால், ஸ்வீகாரம் ஸ்திரமானுல்தான் அவனுக்கு அச்சொத்து சித்திக்கும். ஸ்வீகாரம் செல்லத்தக்கதல்லவென்று ஏற்பட்டுப்போனுல் அச்சொத்து அவனுக்கு பாத்தியப்படமாட்டாது. 12. இ. அ. 72. 11 கல. 463, 12 கல. 686; 16 மதா. 355; 15 பம 573; 23 பம. 718. 24 இ. அ. 86.

**155** ஆனால் தானம் முதலியவற்றால் அவனுக்கு சொத்து கொடுக்கப்படுவதானது ஸ்வீகாரன் என்கிற காரணத்தைப் பற்றியதாயிராமல் இன்னானுக்கு என்று குறிப்பிட்டுக்காண்பிக்கும்பொருட்டு ஸ்வீகாரன் என்ற பதமானது உயிலிலாவது தானபத்திரத்திலாவது உபயோகப்படுத்தப்பட்டிருந்தால் அப்போது அச்சொத்து அவனுக்கே கொடுக்கப்பட்டதாக ஏற்படும். ஸ்வீகாரம் ஸ்திரப்படாவிட்டாலும் அது தானம் அல்லது உயிலை பாதிக்கமாட்டாது. 24 மதா. 214. 19 இ. அ. 101.

**156.** ஆண் சந்ததியின்றி இறக்கிறவனுடைய அவிபக்த குடும்ப சொத்திலுள்ள பங்கானது அவனுக்குப்பின் உயிரோடிருக்கும் மற்ற பாகஸ்தர்களை ஸர்வைவர்ஷிப் என்னும் பாத்தியப்படி அடைந்துவிடுகிறது. ஆனாலும் இறந்துபோன ஒரு பங்காளியினுடைய விதவையானவள் சரியான அதிகாரத்துடன் ஸ்வீகாரம் செய்துகொண்டால் அந்த ஸ்வீகாரபுத்திரனே இறந்துபோன ஸ்வீகாரத்தகப்பனுக்கு பிரதிநிதியாக நின்று அவன் பங்கு சொத்துக்கு பாத்தியஸ்தனாக ஏற்படுவான். 3 இ. அ. 154; 1 மதா. 69.

**157.** ஸ்வீகாரத்துக்குப் பிறகு ஒரு சமயம் சொந்தப்பிள்ளை பிறந்துவிட்டாலும் ஸ்வீகாரம் ரத்தாகமாட்டாது. ஆனால் சொந்த உதரத்தில் பிறந்தவனான ஔரச புத்திரனே 'மேலான அந்தஸ்தையும் பாத்தியத்தையும் உடையவனாக இருக்கிறபடி'

யால் அவனிருக்கும்போது ஸ்வீகாரனுடைய அந்தஸ்து மிக வும் கணிந்ததாகவே ஏற்பட்டுவிடுகிறது. அதுபற்றி பிராம்ம ணா முதலிய முதல் மூன்று ஜாதிகளில் தகப்பனுடைய சொத் தில் ஔரசன் நான்கு பங்கையும் தத்தன் ஒரு பங்கையும் அடை யவேண்டுமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது, அ தாவது ஒரு ஔரசன் பிறந்தால் சொத்தானது ஐந்து பங்காகப் பிரிக்கப்பட்டு நான்கு பங்கு ஔரசனுக்கும் ஒரு பங்கு தத்தனு க்கும் சேருகிறது. இரண்டு ஔரசன் பிறந்துவிட்டால் சொத்தா னது ஒன்பது பங்காகப்பிரிக்கப்பட்டு ஒவ்வொருஔரசனும் நா ன்கு பங்கையும் தத்தன் ஒரு பங்கையுமடையவேண்டும், அ தாவது ஒரு ஔரசனுக்குள்ளதில் நாலில் ஒருபங்கைத்தான ஸ்வீகாரன் அடைகிறான், பல ஔரசர்கள் பிறந்துவிட்டால ஸ்வீ காரனுடைய பங்கு மிகவும் குறைந்துபோய் விடுகிறது. 17 மத. 100.

**158.** ஸ்வீகாரப்பிள்ளைக்கும் பின்பிறந்த சொந்தப்பிள்ளை க்கும் பாகபாத்தியத்தில் உள்ள ஏகவித்தியாசமானது பிராம்ம ணா முதலான உயர்ந்த ஜாதியார்களுக்குள்ளேயன்றி சூத்திரா முதலியோர்களுக்குள் அவ்வித வித்தியாசம் இல்லை. அவர்களில் தத்தனும் சொந்தப்பிள்ளையும் சமபாத்தியஸ்தர்களாக இருக்கி றார்கள், 4 மது. 272.

**159.** பாகிக்கத்தகாத ஜமீன் முதலான சொத்துக்கள் மேலான அந்தஸ்தையுடையவனாக இருக்கிறபின்பிறந்த ஔரச புத்திரனுக்கே சேரும். தத்தன் ஜீவனாம்சத்தை மட்டும் பெறு வான். 17 மது. 435.

**160.** தத்தனும் பின் பிறந்த சொந்தப்பிள்ளையும் ஏகோ பித்து அவிபக்த குடும்பமாயிருக்கும்போது அவர்களில் எவ னாவது ஒருவன் ஆண்சந்ததியின்றி இறந்துபோனால் மற்றவன் அவிபக்த குடும்பஸ்தர்களுக்குள் ஏற்பட்டிருக்கிற ஸர்வைவர் ஷிப் என்னும் பாத்தியப்படி இறந்துபோனவனுடைய பங்கு சொத்தையும் சேர்த்து அடைய உரிமையுள்ளவனாக இருக்கிறான் 1 மது. ஹை, கோ. ரி. 49.

## VI. ஸ்வீகாரத்தைப்பற்றிய வியவகார சம்பந்தமான விஷயங்கள்.

**161.** ஸ்வீகாரத்தைப்பற்றி கோர்ட்டுகளில் தாவா நேரிட்டால் ஸ்வீகாரம் நடந்ததாக எவன் சொல்லுகிறானோ அந்தக் கக்ஷிக்காரனே அச்சங்கதியை முதலில் ருசுப்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறான்.

**162.** குடும்பஸ்தர்களாலும் அக்கம் பக்கத்திலுள்ளவர்களாலும் ஒருவன் ஸ்வீகாரன் என்று வழங்கப்பட்டு வந்து அதையனுசரித்தே பல நடபடிக்கைகள் நடத்தப்பட்டிருந்தால் அவைகள் ஸ்வீகாரத்தை ஸ்திரப்படுத்தக்கூடிய சாக்ஷியாக ஏற்றுக்கொள்ளப்படும்.

**163.** ஸ்வீகாரத்தைப்பற்றி ஒரு வியாச்சியத்தில் செய்யப்பட்ட தீர்ப்பானது அந்த ஸ்வீகாரத்தைப்பற்றிய மற்றொரு வியாச்சியத்தில் சாக்ஷியமாக உபயோகப்படும். 9 மூ. இ. அ. 287.

**164.** ஸ்வீகாரம் செல்லுபடியுள்ளதென்று ஸ்தாபித்துக் கொள்ள விரும்புகிறவன் அப்பாத்தியம் எதிராளியால் ஆக்ஷேபிக்கப்பட்டது முதல் 6-வருஷங்களுக்குள்ளாக வியாஜ்யம் கொண்டு வரவேண்டும். மேலும் நடந்ததாக சொல்லப்பட்டு வருகிற ஒரு ஸ்வீகாரம் வாஸ்தவத்தில் நடக்கவில்லை என்றாவது அல்லது செல்லத்தக்கதல்லவென்றாவது ஆக்ஷேபித்து, அந்த ஸ்வீகாரத்தை ரத்து செய்ய விரும்புகிறவன் ஸ்வீகார சங்கதி தனக்குத் தெரிந்தது முதல் 6 வருஷங்களுக்குள்ளாக அப்படிப்பட்ட வியாஜ்யத்தைக் கொண்டுவர வேண்டும்.

**165** ஒரு ஸ்வீகாரத்தை செல்லுபடியுள்ளதென்று ஸ்தாபித்துக் கொள்ளுவதற்கு மட்டும் மேற்கூறிய ஆறுவருஷ கால நிர்ணயம் ஏற்பட்டிருக்கிறதேயன்றி, ஸ்தாவர சொத்துக்களை சம்பந்தமாய்க் கொண்டு வரப்படும் வியாஜ்யங்கள் சாதாரணமாய் பனிரெண்டு வருஷகாலாவதிக்குட்பட்டிருக்கின்றன. 8 அல். 644; 14 கல். 401.

**166.** அதிகாரமில்லாத ஒரு விதவை எடுத்துக் கொண்ட ஸ்வீகாரம் செல்லத்தக்கதாயிருந்தாலும் அச்சுவீகாரனானவன் விதவை வசத்திலிருக்கும் சொத்தை யடைந்து பனிரண்டு வருஷங்களுக்கு மேற்பட்ட காலம் அச்சொத்துக்களைத் தன் சொந்தமாயும் விதவைக்கு விரோதமாயும் அனுபவித்து விட்டால், விதவைக்குப் பிறகுள்ள அனந்தர வாரசுகள் அச்சொத்துக்களை யடையத்தடைபட்டவர்களாக இருக்கிறார்கள். விதவை யிறந்தது முதல் பனிரெண்டு வருஷங்களுக்குள்ளாக அனந்தர வாரசானவன் சொத்தை யடைய தாவா கொண்டுவரலாம் என்ற சாதாரண விதியானது இங்கே அனுசரிக்கப்படமாட்டாது. ஏனெனில் விதவையினுடைய பாத்தியமும் அனுபோகமும் முன்னமேயே விலகிப்போயிருப்பதுடன் அவளுக்கு விரோதமாயும் தன் சொந்தமாயும் பனிரெண்டு வருஷங்களுக்கு மேல்பட்ட காலம் அச்சொத்தானது ஸ்வீகாரனால் அனுபவிக்கப்பட்டிருக்கிறது. அவ்விதம் 12 வருஷங்களுக்கு மேற்பட்டு தன் சொந்தமாய் ஒருவன் ஒரு சொத்தை அனுபவித்திருந்தால் பிறகு அச்சொத்தினின்றும் அவனை நீக்க முடியாது. ஆகையால் இப்படிப்பட்ட கேசுகளில் அனந்தரவாரசானவன் ஸ்வீகாரனுடைய பாத்தியம் ஏற்பட்ட சங்கதி தனக்குத்தெரியவந்த வுடம்பத்திலேயே வழக்கிட்டு ஸ்வீகாரத்தை ரத்து செய்து கொள்ளவேண்டும். 13 இ. அ. 84, 94.

**167.** செல்லுபடியாகாத ஒரு ஸ்வீகாரமானது எதிராளியால் ஆக்ஷேபிக்கப்படாமல் சும்மா விடப்பட்டுவந்தால் அது நாளடைவில் செல்லுபடியுள்ளதுபோல ஊர்ஜிதத்தை யடைந்து விடுகிறது. ஸ்வீகாரமானதாகச் சொல்லப்பட்டு வருகிற சங்கதியை எதிராளியானவன் தெரிந்திருந்தும் ஆக்ஷேபிக்காமல் விட்டுவிட்டு, தத்தமுறை செய்யப்பட்டு வருகிற நடபடிகைகளுக்கும் இடங்கொடுத்துக் கொண்டே வந்துவிட்டால், அதன்பிறகு ஸ்வீகாரத்தை ஆக்ஷேபிக்க அவ்வெதிராளி தடைபட்டவனாய் விடுகிறான். இதுபற்றியும் ஸ்வீகாரம் ஊர்ஜிதத்தை யடைந்து விடுகிறது. 18 மதா 394.

# 5-வது அத்தியாயம்.

---

## பால்யர் சம்ரக்ஷணை.

**168.** தகப்பனானவன் பால்யர்களாயிருக்கும் மக்களைத் தன் வசத்தில் வைத்துக்கொள்ளு மதிகாரத்தையும் அவர்களைச் சம்ரக்ஷணை செய்யும்படியான கடமையையும் உடையவனாக இருக்கிறான்.

**169.** பால்யாவஸ்தையாகிய மைனாரிடியானது 16 வயது வரையில் ஏற்பட்டிருக்கிறதென்று ஹிந்து தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் நமது இந்தியா கவர்ன்மெண்டார் 1875-ஷுத்திய 9 சட்டமாகிய இந்தியன் மெஜாரிடி ஆக்டில், பால்யாவஸ்தையான மைனாரிடியானது சாதாரணமாய் 18 வயது முடிந்த பிறகே நீங்குகிறதென்றும், நியாயஸ்தலத்தாரால் நியமிக்கப்பட்டிருக்கும் கார்டியனுடைய சம்ரக்ஷணையிலாவது கோர்ட் ஆப்வார்டஸாருடைய விசாரணையிலாவது இருக்கும் மைனர் 21 வயது சென்ற பின்பே மைனாரிடியிலிருந்து நீங்கி மெஜாரிடியாகிய தக்க வயதை யடைகிறான் என்றும் விதித்திருக்கிறார்கள்.

**170.** மைனர்களை வைத்துப் பரிபாலனஞ் செய்யும்படியான கார்டியன அதிகாரம் முதலில் தகப்பனுடையதாகவும், தகப்பனிறந்தபிறகு தாயினுடையதாகவும் இருக்கிறது. தாயாருக்குப்பிறகு தமையன், பாட்டன், பெரியப்பன் சிற்றப்பன், முதலான சமீபதாயாதிகள் கார்டியன்களாகிறார்கள், இவர்களுமில்லாவிட்டால் தாய்வழியைச் சேர்ந்த பாட்டன், மாமன் முதலானவர்களும் அவர்களுமில்லாவிட்டால் தூரபந்துக்களும் கார்டியன்களாக இருக்கிறார்கள்.

**171.** குழந்தைகளை வைத்துப் பரிபாலனம் செய்யும்படியான கார்டியன் அதிகாரத்தில் தாயானவள் தகப்பனுக்கு அடுத்தபடியில் இருந்த போதிலும், குடும்பமானது அவிபக்த நிலை

மையிலிருக்கும் பொழுது மைனருடைய பாகம் உள்பட பூரு குடும்பசொத்தின் விசாரணையானது குடும்பத் தலைவனான மானேஜரைச் சேர்ந்ததேயன்றி மைனரின் தாயாரைச் சேரமாட்டாது. ஆனால் குடும்பம் விபக்தமாகி மைனருடைய பங்கு பிரிக்கப்பட்டுப் போனால் அப்போது மைனருடைய பாகத்துக்கு வந்த சொத்தைத் தன் வசத்தில் வைத்துப் பரிபாலனம் பண்ணும் சுதந்திரமும் தாயாரைச் சேர்ந்ததாகிறது.

**172.** காரடியன் அதிகாரத்தில் முதன்மையானவனும் விசேஷ சுதந்திரங்களை சுபாவத்திலுடையவனுமான தகப்பனானவன் தன் மக்களுக்கு தனக்குப்பின் இன்னார் காரடியனாக இருக்கத்தக்கதென்று உயில் மூலமாய் நியமித்தும் வைக்கலாம். அப்போது உயிலில் நியமிக்கப்பட்டிருப்பவனே காரடியனாவானேயன்றி மைனரின் தாய், தமையன் முதலியவர்கள் காரடியன்களாகமாட்டார்கள். (17 பம். 560.) உயில் மூலமாய் காரடியனை நியமிக்குமதிகாரம் தகப்பனைத்தவிர தாயார் முதலிய வேறு யாருக்கும் கிடையாது. 21 மத. 401.

**173.** ஸ்வீகாரப் புத்திரன் விஷயத்தில் ஸ்வீகாரத்துக்குப் பிறகு பெற்ற தகப்பன் தாயுடைய சுதந்திரம் போய்விடுகிறது. ஸ்வீகாரம் செய்துகொண்ட தகப்பன் தாய்மார்களும் அவர்களுக்குப்பின் அவர்களுடைய சுற்றத்தாருமே காரடியன்களாகிறார்கள். 3 பம். 1.

**174.** வைப்பாட்டிக்குப் பிறந்த குழந்தைகளையும் தக்கவயதை யடையும் வரையில் தகப்பன் சமரக்ஷிக்கக்கடமைப் பட்டவனாக இருக்கிறான். ஆனாலும் அக்குழந்தைகளுக்கு தாயாரே சுபாவத்தில் முதல் கார்டியனாக இருக்கிறாள். (4 கல். 377.) ஆனால் வைப்பாட்டியானவள் மைனர் மக்களை தகப்பனுடைய விசாரணைக்கும் கட்டுக்கும் உட்படுத்தியிருந்தால் அப்போது அவனே காரடியனாவான்.

**175.** மேலும் தகப்பனுடைய சம்ரக்ஷணையில் இருப்பதே மைனருடைய அபிவிர்த்திக்குக் காரணமாயிருக்கும் போதும்

அல்லது தாயாரானவள் தன்னுடைய கெட்ட நடத்தையால் மைனரைத் தனவசத்தில் வைத்துக் கொள்ளத தகுதியற்றவளாக இருக்கும்போதும் தகப்பனேசரியானகார்டியனுவான. 12மது.67.

176. ஸ்திரீயானவள் புனர் விவாகம் செய்து கொண்டுவிட்டால் முதல விவாகததுககுப் பிறந்த குழநதைகளின் காரடியன் அதிகாரததை இழநது விடுகிறுள். மேலும அவள் அன்னிய மதத்தில சோநது ஜாதிப்பிரஷ்டையாய்ப் போய் விட்டாலும அவளுக்கு அவ்வதிகாரம போய்விடுகிறது.

177. தகப்பனே முதல் காரடியனுகவும மைனர் மககளின்பேரில் சுபாவமாய எலலா சுதநதிரஙகளை யுடையவனுகவு மிருக்கிறபடியால், தகபபனுடைய அநதஸது மதம எதுவோ அதுவே மககளுடையது மாகும. ஆனதுபற்றி தகபபன் அனுஷ்டிக்கிற மததததையும ஆசாரத்தையுமே அவனுடைய மைனா மக்கள் அனுஷ்டிக்க வேண்டியவர்களாக இருககிறாகள். ஆகையால் தகப்பனுனவன் கிறிஸது முதலிய அன்னிய மததகில சேர்நது கொண்டு தன் மைனா மக்களும் அவ்வன்னிய மததைதயே ஆசரிகக வேண்டு மென்று விரும்பினல அவாகள தகப்பனுடைய இஷ்டப்படியே ஈடககவேண்டியவாகளாக இருககிறாகள். தகப்பனுனவன் அனனியமததகிற் சோநது விடடானெனபது மைனர் மககளின பேரில அவனுக்குள்ள காரடியன் அதிகாரததை இழககசசெய்யமாடடாது. தான் சேர்நதுகொண்ட அனனியமததகில் தன மைனா மக்களையும சோததிக்கொள்ள அவனுக்கு சுதந்திரமுண்டு. 14 மு. இ. அ. 309.

178. ஆனல் மேற்கூறிய சுதந்திரம தகப்பனேத்தவிர தாய் முதலான வேறெநத கார்டியன் களுக்கும கிடையாது. 14 மு. இ. அ. 309; 9 மது. 391.

179. ஆனல தகப்பன் வேறு மதத்தில் சேருமபோது தன் மக்களை பழைய மதத்திலேயே வளாத்து வருமபடி விட்டு வைத்திருந்தால் பிறகு அவன் அவர்களைத்தன் வசம் விடும்படி கேட்கமுடியாது. 25 கல். 881.

**180.** மேலும் மைனரை அன்னிய மதஸ்தன் ஒருவன் கைவசப் படுத்திக்கொள்ள, அது சங்கதி தெரிந்த பிறகும் வெகுகாலம் வரையில் தகப்பன் முதலான கார்டியன்கள் அம்மைனரை மீட்டுக் கொள்ளுவதற்கு யாதொரு முயற்சி செய்யாமலும் கவனியாமலுமிருந்து அன்னியமதத்திலேயே மனதார விட்டு வைத்திருந்தால் பிறகு அவர்கள் அம்மைனரைத் தங்கள் வசம் பெறும்படியான சுதந்திரத்தை இழந்தவராய் விடுகிறார்கள். 16 பம். 307; 23 கல். 290.

**181.** எல்லா ஜனங்களையும் அவர்களுடைய சொத்து சுதந்திரங்களையும் பாதுகாத்துக்கொண்டு தேசபரிபாலனம் செய்கிற இராஜாங்கத்தாரே எல்லா மைனர்களுக்கும் மேலான கார்டியன்களாக இருக்கிறார்கள். ஆனதுபற்றி கார்டியன்களில்லாத மைனர்களுக்கு சரியான கார்டியன்களை நியமிக்கும் அதிகாரம் சர்க்காரைச் சேர்ந்ததாக இருக்கிறது. மேலும் சுபாவமாய் ஏற்பட்டிருக்கிற ஒரு கார்டியன் மைனருடைய அக்கரைக்கு விரோதமாய் நடந்துகொண்டால் அவனை அவ்வதிகாரத்தினின்றும் நீக்கிவிட்டு சரியான வேறு கார்டியனை நியமிக்கவும் சர்க்காருக்கு அதிகாரமுண்டு.

**182.** தக்க வயதை யடைந்தும் சித்த சுவாதீன மில்லாமலிருக்கிற பைத்தியக்காரர் முதலியோர்களும் மைனர்களொப்பத்தம் பாவிக்கப்படத்தக்கவர்களா யிருக்கிறபடியால் அவர்களுடைய தேகசம்ரக்ஷணையின் பொருட்டும் சொத்தின் பாதுகாப்பின் பொருட்டும் தக்ககார்டியன் ஒருவனை நியமிக்கும் அதிகாரமும் சர்க்காரையே சேர்ந்ததாக இருக்கிறது.

**183.** மைனர்களுக்கும், சித்தசுவாதீன மின்மையால் மைனர்களொப்பத்தம் பாவிக்கப்படுகிற பைத்தியக்காரர் முதலியோர்களுக்கும் சரியான கார்டியன்களை நியமிக்கும் [illegible] நமது கவர்ன்மெண்டார் ஒவ்வொரு ஜில்லா கோர்[illegible] கொடுத்திருக்கிறார்கள். (இதைப்பற்றி 1890-[illegible] ஆக்ட்டாகிய கார்டியன் அண்டு வார்ட்ஸ் [illegible]

**184.** எப்படிப்பட்ட கார்டியனையும் தகுந்த காரணத்தின் பேரில் சமரக்ஷணை பாத்தியத்தினின்று நீக்கவும், சரியான கார்டியன் ஒருவனை நியமிக்கவும் சர்க்கார் அல்லது நியாயஸ்தலத்தாருக்கு அதிகாரமுண்டு. 3 மது. கோ. ரி. 69; 14 மு. இ. அ. 309; 12 பம. 480.

**185.** தகப்பன் தாய் முதலான கார்டியன்களுடைய நடத்தையானது ரொம்ப விபரீதமாயும் மைனருடைய க்ஷேமத்துக்கும் அபிவிர்த்திக்கும் கெடுதியை உண்டுபண்ணக்கூடிய அவ்வளவு துனமாக்க முள்ளதாயு மிருந்தால், அக்கார்டியன்கள் தங்கள் அதிகாரத்தினின்றும் நீக்கப்படுவார்கள். ஆனால் தகப்பனை கார்டியன் அதிகாரத்தினின்று நீக்குவதற்கு தக்க விசேஷமான காரணம் இருக்கவேண்டும். 25 கல. 885; 1 அல. 549.

**186.** மேலும் மைனருடைய சொத்து சுதந்திரங்கள் ஒரு வியாச்சியத்தில் சம்பந்தப்பட்டதா யிருக்கும்போது மைனரின் பாத்தியதைக்கு கெடுதிவராம லிருக்கும்படி பாதுகாக்கவும் கோர்ட்டார் கடமைப்பட் டிருக்கிறார்கள். 5 மது. 337.

**187.** மைனர்கள் யாவரும் தக்க வயதாகிய மெஜாரிடியை அடையும் வரையில் சமரக்ஷணைக் கர்த்தர்களுடைய கட்டுக் குள் அடங்கி யிருக்க வேண்டும். கார்டியனுடைய அதிகாரத்தை மீறித் தங்கள் இஷ்டம்போல சுயேச்சையாய் இருக்க மைனர்களுக்கு சுதந்திரமில்லை. ஆகையால் மைனர்கள் கிறிஸ்து முதலிய அன்னிய மதத்தில் சேர்வாவது அவர்களைப் பிறர் சேர்த்துக்கொள்ளுவாவது கூடாது. ஒருக்கால் மைனர்கள் அன்னியமதத்தில் சேர்ந்துவிட்டாலும் அல்லது சேர்க்கப்பட்டுவிட்டாலும் அவர்களைத் திரும்பியும் சுவாதீனப்படுத்திக் கொள்ள தகப்பன் தாய் முதலான கார்டியன்களுக்கு அதிகாரமுண்டு. அன்னிய மதத்தில் சேர்ந்ததற்கு மைனருடைய சம்மதம் ஏற்பட்டிருந்தாலும் பிரயோஜனப்படமாட்டாது. 9 மது. 391; 14 மு. இ. அ. 309.

188. 14 வயதுக் குட்பட்ட ஆண்மக்களையும் 16 வயதுக் குட்பட்ட பெண்மக்களையும் சம்ரக்ஷணைக்காரர்களுடைய சுவாதீனத்திலிருந்து திருட்டுத்தனமாயோ வஞ்சகமாயோ அல்லது பலாத்காரமாயோ கூட்டிக்கொண்டு போகிறவனும், அப்படிப்பட்ட சங்கதி தெரிந்தும் அம்மைனரை ஒளித்து வைக்கிறவனும், இந்தியன் பினல் கோடு 363, 368 வது பிரிவுகளின்படி கடினமாய் தண்டிக்கப்படத்தக்க பெருங் குற்றங்களைச் செய்தவர்களாவார்கள். இப்படிப்பட்ட விஷயத்தில் மைனருடைய சம்மதம் இருந்தாலும் பிரயோஜனப்படமாட்டாது. தகப்பனுடைய எண்ணத்துக்கு விரோதமாயும் அவனுடைய அனுமதியில்லாமலும் அவனுடைய கட்டிலிருந்து தாயாரானவள் மைனர் மக்களை விலக்கிக் கூட்டிப்போதலுங்கூட ஷை இ. பி. கோ. 363 வது பிரிவின்படிக் குள்ள குற்றமாகிறது. 8 கல. 969.

189. ஒரு உடன்படிக்கையானது அதற்குச் சம்பந்தப்பட்ட இருதிறத்தாருடைய மனப்பூர்வமான சம்மதத்தின் பேரில் ஏற்பட வேண்டியதாயிருக்கிறது. மைனராயிருப்பவன் அவ்வித சம்மதத்தைக் கொடுக்கத் தகுதியற்றவனாக இருக்கிறான். ஆகையால் மைனருடன் செய்யும் உடன்படிக்கைகள் அவனைக்கட்டுப்படுத்த மாட்டாது. ஆனாலும் மைனரோடு உடன்படிக்கை செய்து கொண்ட பிறமனுஷன் அவ்வுடன்படிக்கைக்குக் கட்டுப்பட்டவனாகவே யிருக்கிறான். 18 கல். 259; 18 மது. 415; 23 பம். 146.

190. ஆனால் மைனரா யிருந்த போது தன்னால் செய்யப்பட்ட ஒரு வுடன்படிக்கையை ஒருவன் தக்க வயதையடைந்த பிறகு ஒப்புக்கொண்டு விட்டாலும், அல்லது அதன் லாபத்தை யடைந்தாலும், அவ்வுடன்படிக்கையானது ஊர்ஜிதத்தை யடைந்து அவனைக்கட்டுப்படுத்தி விடும், 8 மூ. இ. அ, 119.

191. தவிர தன்னுடைய அவசியமான செலவுகளின் பொருட்டு ஏற்பட்ட ஒரு உடன்படிக்கைக்கும் மைனரானவன் வயது வந்த பிறகு கட்டுப்பட்டவனாகிறான்,

**192.** மைனருடைய சொத்துக்களைப் பரிபாலனம் செய்கிற கார்டியனானவன் மைனரின் அக்கரைக்கு விரோதமாய் நடக்கக்கூடாது. அவசியமான காரணமின்றி கார்டியனானவன் மைனருடைய சொத்துக்களை அக்கிரமமாய் செலவழித்தாலும் துர்விநியோகப் படுத்தினாலும் அவைகள் மைனரைக் கட்டுப்படுத்த மாட்டாது. மேலும் அவைகளால் நேரிடும் நஷ்டங்களுக்கும் கார்டியன் ஜவாப்புதாரியாக இருக்கிறான். 29 பம். 4.

**193.** மைனர்களுடைய சொத்துக்களைப் பரிபாலனம் செய்கிற கார்டியன்களும் அக்கார்டியன்களோடு நடவடிக்கை நடத்துகிற பிறரும் ஜாக்கிரதையாயும் நியாயமாயும் நல்ல எண்ணத்தோடும் நடந்துகொள்ளவேண்டும் அவசியமான காரணமின்றி மைனருடைய சொத்தின் பேரில் கடன் முதலியன வற்றைச் சுமத்த கார்டியனுக்கு அதிகாரமில்லை யாகையால் கார்டியனால் வாங்கப்படுகிற கடன்களுக்கு வாங்குங்காலத்தில் ஏதேனும் அவசியம் இருக்கிறதாவென்றும், அப்படிப்பட்ட கடன்கள் மைனரின் நன்மையின் பொருட்டு ஏற்படுகிறதா வென்றும் கடன்கொடுக்கிறவர்கள் நன்றாய் விசாரித்துத் தெரிந்துகொண்ட பிறகே கார்டியனுக்குக் கடன் கொடுக்கவேண்டும் 6 மூ. இ. அ. 393; 10 மூ. இ. அ. 451; 26 பம். 433; 20 அல. 135.

**194.** ஆனாலும் அவசியமான செலவுகளின் பொருட்டும் மைனருடைய அக்கரையின் பொருட்டும் கடன் முதலியன வாங்கவும் சொத்துக்களை பந்தக பருதினங்களுக்குட்படுத்தவும் கார்டியனுக்கு அதிகாரமுண்டு. நியாயமானதாயும் மைனரின் நன்மையின் பொருட்டு மிருக்கிற கார்டியன்களுடைய செய்கைகளை மைனர்கள் ஆக்ஷேபிக்கமுடியாது. மேலும் குடும்பசம்ரக்ஷணை முதலிய அவசியமான செலவுகளுக்கும், அச்செலவுகளை நிர்த்தம கார்டியன் அல்லது குடும்ப மானேஜரால் வாங்கப்படுகிற கடன்கள் செய்யப்படுகிற குடும்ப சொத்தின் பந்தகபருதினங்கள் ஆகிய இவைகளுக்கும் மைனரானவன் கட்டுப்பட்டவனாக இருக்கிறான். 2 ம. ஹை. கோ. ரி. 47; 12 பம். 686; 14 பம்.

562; 5 கல். [illegible]; 17 மதா 306; 3 அல. 535; 29 பம். 61; 26 கல. 820; 26 மதா 330.

**195.** மைனரானவன் யுக்தவயதை யடையாம லிருக்கிற காரணத்தினாலே கோர்ட்டில் வியாச்சியம் செய்யவாவது அல்லது அவன் பேரில் பிறனொருவன் வியாச்சியம் தொடரவாவது கூடாது. மைனர்களுக்காக அவர்களின் கார்டியன்களே வியாச்சியங்களில் கக்ஷிக்காரர்களாக இருந்து மைனர்களின் பொருட்டு நடவடிக்கைகளை நடத்தவேண்டும்.

**196.** மைனரின் பொருட்டு வியாச்சியம் செய்ய வேண்டியதா யிருந்து மைனரும் சொத்தில்லாதவனாக இருந்தால், அடுத்த சிநேகிதன் தன் சொந்தத்தில் சொத்து உடையவனாக இருந்தாலும் மைனருக்காக பாபர் வியாச்சியம் கொண்டு வரலாம். 3 மதா. 3.

**197.** அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்தவனா யிருக்கும் மைனருடைய பங்கு சொத்தானது பிரிக்கப்பட வேண்டுமென்று தாவா கொண்டுவரக்கூடாது. ஆனால் குடும்பத்தலைவன் முதலானவர்களுடைய நடவடிக்கைகளால் மைனரின் பாக சொத்துக்குக் கெடுதியும் நஷ்டமும் நேரிடக் கூடியதா யிருந்தாலும், அல்லது மைனரின் பாத்தியதை மறுதளிக்கப்பட்டாலும் மைனரின் பொருட்டு அடுத்த சிநேகிதன் பாகத்துக்காக வியாச்சியம் செய்யலாம். 8 கல. 537.

**198.** யாதொரு தாவாவின் வியாச்சிய மூலமானது வாதியின் மைனாரிடி காலத்திலேயே தொடங்கி முடிவும் பெற்றிருந்தால், அப்பொழுது மைனாரிடி நீங்கின தினம் முதல் மூன்று வருஷங்களுக்குள்ளாக அந்த வியாச்சியம் அவ்வாதியால் கொண்டு வரப்படலாம்; அந்த வியாச்சியத்துக்குள்ள காலாவதியானது வாதி மைனாரிடியிலிருந்து நீங்கினது முதல் மூன்றுவருஷங்களுக்கு மேற்பட்ட காலத்தில் முடிவுபெறுகிறதா யிருந்தால், அப்படிப்பட்ட அதிக காலத்திற்குள்ளாகவும் அந்த வியாச்சியம் கொண்

வேரப்படலாம். 9 கல் 663. (லிமிடேஷன் ஆக்ட் 7-வது பிரிவையும் பார்க்க)

**199.** கார்டியனுடைய தானவிக்கிரயங்களை ரத்து செய்வதற்காகவும், மோசடியாயும் அக்கிரமமாயும் உள்ள கார்டியனுடைய நடவடிக்கைகளால் நேரிட்ட நஷ்டத்தைப் பெறுவதற்காகவும் செய்யப்படுகிற வியாச்சியமானது மைனாரிடி நீங்கினது முதல் மூன்றுவருஷங்களுக்குள்ளாக கொண்டுவரப்படவேண்டும்.

**200.** மைனர் பாத்தியப்படவேண்டிய கடன்களில் ஏதாவது காலாவதியாய்ப் போயிருந்தால் அப்படிப்பட்டதைத் தீர்க்கவாவது, அல்லது வட்டி முதலியன செலுத்தியோ ஒப்புக்கொண்டோ அக்கடனுக்கு மறுபடியும் உயிருண்டாக்கவாவது கார்டியனுக்கு அதிகாரமில்லை. ஆகையால் கார்டியனுடைய அப்படிப்பட்ட செய்கைகள் மைனரை எவ்வளவும் கட்டுப்படுத்த மாட்டாது. 20 பம். 155.

**201.** ஆனால் காலாவதி தோஷத்துக்குட்படாமலிருக்கிற கடனுக்காக வட்டி முதலியன செலுத்தி அதைக் காலாவதியாய்ப் போகாமல் நிறுத்தி வைக்கவும் அதன் காலாவதியை அதிகப்படுத்தவும் கார்டியனுக்கு அதிகாரமுண்டு. 5 மது. 169; 17 மது. 221; 18 மது. 456; 26 பம். 221; 29 கல். 647.

## 6-வது அத்தியாயம்.

# பிதுரார்ஜித-சுயார்ஜித-சொத்துக்கள்.

**202.** ஆதிகாலத்தில் ஹிந்து குடும்பங்களில் பிரிவினையும் வேறுபாடும் இல்லாமலிருந்த துடன் தகப்பனானவன் குடும்ப மென்னும் இராச்சியத்துக்கு ஓர் சிற்றரசன் எனச் சொல்லும் படி குடும்பத்தில் சகல அதிகாரங்களையு முடையவனாக இருந் தான். குடும்பத்திலுள்ள எல்லா ஸ்தாவர ஜங்கம சொத்துக்க ளும் தகப்பனுக்கே சொந்தமானதா யிருந்தன. அவனுக்குக் கீழிருக்கும் பிள்ளை முதலியோர் சம்பாதிப்பதும் அவனுடைய ஆதீனத்துக் குட்பட்ட தாகவே யிருந்தன. அக்காலத்தில் தக ப்பனுள்ள வரையில் பிள்ளைகளுக்கு சொத்துக்களில் யாதொரு சுதந்திரமும் இல்லாமலிருந்தது.

**203.** தகப்பன் இறந்தபிறபாடும் பிள்ளைகள் சொத்துக்க ளைத் துண்டு துண்டாகப் பிரித்துக்கொண்டு தனித்தனியா யிரு க்கும் வழக்கமும் ஆதிகாலத்தில் இல்லை. அநேக குடும்பங்கள் வெகுகாலம் வரையில் பாகம் செய்து கொள்ளாமல் சேர்க்கையா கவே இருந்து வந்ததாகவும், அதனால் அப்படிப்பட்ட குடும்பங் களின் சொத்துக்கள் நாளடைவில் பாகிக்கத்தகாத தன்மையை யடைந்த தாகவும் தெரியவருகிறது.

இக்காலத்திலும் இவ்விதம் பாகாகமில்லாத சொத் துக்களை யுடைய குடும்பங்கள் மலையாளத்திலும் தென்கன்னட த்திலும் இருக்கின்றன.

**204.** ஆனால் காலஞ் செல்லச்செல்ல குடும்ப எஜமான னா ன தகப்பனுடைய அதிகாரம் குறையத்தொடங்கிற்று. தகப்ப னிடமிருக்கும் முன்னோர்கள்தேடிய சொத்தில் பிள்ளைகளும் பாத்தியம் பாராட்டத் தொடங்கினார்கள். குடும்பஸ்தர்களுக் குள்ளிருந்த ஒற்றுமையும் தளர ஆரம்பித்தது. குடும்பத்திலு ள்ளஒருவன் தன் சொந்தப்பிரயாசையாலும் சாமர்த்தியத்தா லும் சொத்து சம்பாதித்தால் அதை அவன் பொதுக்குடும்ப

சொத்தாகப் பாவிக்காமல் தன் சொந்தமாகவே பாராட்டத் தொடங்கினன். அதிகமாய்ச் சம்பாதிக்கிறவன் தன்னுடைய அவ்வித சம்பாத்தியங்கள் சகோதராமுதலிய மற்றவர்களுக்குஞ் சேராமல் தனேயும் தன் பெண்டு பிள்ளைகளேயுமே சேரவேண்டுமென்று விரும்பினன். மேலும் ஒவ்வொருவரும் தனித்தனியாயிருந்தால் குடும்பத்தில் அப்போதப்போது நடத்தப்படும் சிராத்தம் முதலிய பலவைதிகச்சடங்குகளே அவரவர்கள் தனித்தனியாய்ச் செய்யலாமென்றும், அவ்வாறு தனித்தனியான பல சடங்குகள் ஏற்படுவதினல் அவைகளுக்கு அதிகமான பலன் உண்டென்றும் பிராமணர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். இவ்விதமான அநேக காரணங்களினல் குடும்பங்களில் வேறுபாடும் பிரிவினேயும் உண்டாக, சகோதரர்கள் தங்கள் தகப்பன் முதலிய முன்னேரிடமிருந்து அடைந்த சொத்துக்களேத் தங்களுக்குள் பாகித்துக் கொண்டு அவரவர்களுடைய பெண்டு பிள்ளைகளுடன் தனித்தனியாயிருக்கத் தொடங்கினர்கள்.

**205.** அக்காலத்திலும் தகப்பன் உயிரோடிருக்கும் வரையில் பிள்ளைகளுக்கு குடும்பசொத்துக்களில் யாதொரு சுதந்திரமும் இல்லாமலிருந்தது. தகப்பனிறந்தபிறகே பிள்ளைகள் குடும்ப சொத்துக்களேப் பாகித்துக்கொள்ள அதிகாரமுள்ளவர்களாக ஏற்பட்டார்கள். தகப்பனுள்ள வரையில் குடும்பசொத்தைப் பாகித்துக்கொள்ளவாவது, பாகித்துக் கொடுக்கும்படி அவனேக் கேட்கவாவது பிள்ளைகளுக்கு அக்காலத்தில் அதிகாரமில்லே. ஆனலும் தகப்பனனவன் விருத்தாப்பிய தசையை யடைந்து மிகவும் ஒடுங்கிப்போய்விட்டால் பிள்ளைகள் குடும்பசொத்துக்களே பாகம் செய்துகொள்ளலாமென்று கொஞ்சகாலத்துக்குப் பிறகு ஏற்பட்டது. அதற்கும் பிறகு கடைசியாய், பாட்டன் முதலிய முன்னேர்கள் தேடிய குடும்பசொத்தில் தகப்பனும் பிள்ளைகளும் சமமான பாத்தியஸ்தர்கள் என்றும், அப்படிப்பட்ட பூர்வார்ஜிதமான சொத்தை பாகித்துக் கொடுக்கும்படி தனக்கிஷ்டமான போது மகன் தகப்பனேக் கேட்கலாமென்றும் ஏற்பட்டு விட்டது. இத்தென்னிந்தியாவில் பிரமாணகிரந்தமாக வழ

ஙகி வரும் மிதாக்ஷிரை என்னும் வியாக்கியான நூலை எழுதினவ ரத விக்ஞானேசுவர யோகியும இவ்விதமே சொல்லியிருக்கிறார்.

**206.** மேற கூறியவாறு குடும்பங்களில் ஐக்கிய பத்தியம் குறைந்து வேறுபாடும சுயநயமும் ஏற்பட்டதினால், தகப்பனு டைய அதிகாரம் மட்டுப்படட்டதோடு பிள்ளைகளுடைய சுதந்தி ரமும அதிகரித்தது. அதனால குடும்ப நிலைமையும சொத்துக்க ளின் தன்மையும இருவகையான பிரிவையடைந்தன. பிதா (தகப்பன்) முதலான முன்னோர்வழியாக வந்த சொத்துக்களுக் கும ஒருவனால சுயமாகவே சம்பாதிக்கப்படுகிற சொத்துக்களுக் குமஉள்ள வித்தியாசத்தால், முந்தியது பிதுரார்ஜித மென்ற பெய ரையும், பிந்தியது சுயார்ஜித மென்ற பெயரையும அடைந்தது. கு டும்பஸ்தாகளெல்லோரும ஐக்கியமா யிருந்து குடும்ப யோக க்ஷேமங்களை ஒன்றாய நடத்துவது அவிபக்த நிலைமையென்றும, குடும்பஸ்தாகள் பாகம செய்துகொண்டு தனித்தனியாய இருப் பது விபக்த நிலைமை யென்றும வழங்கததொடங்கிற்று.

## பிதுரார்ஜித சொத்துக்கள்.

**207.** முதல மூன்று முன்னோகளான தகப்பன பாட்ட ன பூட்டன் (பிதா, பிதாமகா, பிரபிதாமகா) ஆகிய இவாகளிட மிருந்து அடையும சொத்துக்கள் பிதுராரர்ஜிதம எனப்படும. பிதுரார்ஜிதமான சொத்துக்கள இம்மூன்று முன்னோகளாலே யே தேடப்பட்டிருக்க வேணடுமெனபதில்லை. இம முன்னோர் களுடைய பூர்வீகாகளால தேடப்பட்டு இமமுன்னோகள வழி யாக வந்திருக்கிற சொத்துக்களும பிதுரார்ஜிதமேயாகும. த விர பிதுரார்ஜித சொத்தானது இமமூன்று முன்னோர்களாலும ஒருவரின் பின் ஒருவராய் அடையப்பட்டு வந்து கடைசியில ஒருவனுக்குக கிடைத்திருக்க வேண்டு மென்பது மில்லை இம மூன்று முன்னோகளில எவரிட மிருந்து கிடைத்திருந்த போதி லும அச்சொத்து பிதுரார்ஜிதமேயாகும.

**208.** தகப்பன பாட்டன் பூட்டன் ஆகிய மூன்று நேரா ன முன்னோகளிடமிருந்து அடையப்படும சொத்துக்கள் பிது

ரார்ஜித மாகுமென்ற காரணத்தால், ஒருவனுடைய பிதுரார்ஜித சொத்தில் அவனுடைய மகன், பேரன், கொள்பேரன் (புத்திரன், பௌத்திரன், பிரபௌத்திரன்) ஆகிய முதல மூன்று ஆண் சந்ததியார்களும் குடும்பத்தில பிறந்த மாத்திரத்திலேயே பாத்தியஸ்தர்களாக ஏற்படுகிறார்கள். 5 அல, 430.

**209.** மேலும் அம்முன்னோர்கள் வழியாக அடைந்த மேற்கூறிய சொத்துக்களன்றி, அச்சொத்துக்களின் விருத்தியம்சங்களும், அவ்விருத்தியம்சங்களைக் கொண்டு வாங்கப்பட்டவைகளும், அல்லது அவைகளினுடைய சகாயத்தை யாவது உபயோகத்தையாவது கொண்டு சம்பாதிக்கப்பட்டவைகளும், பிதுரார்ஜிதமென்றே சொல்லப்படும். 11 மது. 246; 10 மூ. இ. அ. 329; 8 கல். 131.

**210.** பிதுரார்ஜிதமான சொத்தை ஒருபாகஸ்தன் தன்னுடைய முயற்சி, மேல் பார்வை, கவனிப்பு முதலியவைகளால் விருத்தி செய்திருந்தாலும் அவ்விருத்தியானது பிதுரார்ஜித சொத்தின் தன்மையை யடைந்து குடும்பப் பொதுவானதாகுமே யன்றி விருத்தி செய்த பாகஸ்தனுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாது. 6 பம். 225.

**211.** தகப்பன் முதலான ஒரு முன்னோனுடைய சுயார்ஜித சொத்தை ஒருவன் தாயமாக வாரசு பாத்தியப்படி அடையாமல தானத்தினாலாவது உயில் மூலமாயாவது அடைந்திருந்தால அதினாலேயே அச்சொத்தானது பிதுரார்ஜிதமென்ற தன்மையிலிருந்து மாறி சுயார்ஜிதமாய் விடமாட்டாதென்றும், ஒரு சொத்தானது பிதுரார்ஜிதமா அல்லவா என்பது நிச்சயிக்கப்படுவதற்கு அச்சொத்து எவனிடமிருந்து அடையப்பட்டதென்பது குறிப்பேயன்றி, எவ்விதத்தால் அடையப்பட்டதென்பது காரணமாகமாட்டாதென்றும் ஆதியில் தீர்மானிக்கப்பட்டிருந்தது. 3 மது. ஹை. கோ. ரி. 50; 13 இ. அ. 5.

ஆனால் அத்தீர்ப்பு இப்பால் மாறிப்போய்விட்டது. தகப்பனானவன் தன்னுடைய சுயார்ஜித சொத்தை சாவசுதந்திர

பாத்தியபந்தாடு அடைந்த தனுபவித்துக் கொள்ளத்தக்கதென்று கனமகனுக்கு தானமாயாவது உயிலமூலமாயாவது கொடுத்துவிட்டால் அது அம்மகனுடைய சுயார்ஜிதம் போலாய்விடுகிறதென்றும், அதில் பாகம் கொடுக்கும்படி கேட்க அவனிடமகனுக்கு சுதந்தரமில்லையென்றும் இப்படித் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. 10 பம். 528; 24 மது. 429.

**212.** பிதுரார்ஜிதமான ஒரு சொத்தை அதன்பேரில் முன்னோரால் செய்துவைக்கப்பட்டிருந்த ஏராளமான கடனுடன் அடைந்த ஒருவன் தன்னுடைய சுயார்ஜிதத்தைக்கொண்டு அக்கடன் முழுவதையும் தீர்த்து முன்னோரால் செய்யப்பட்டிருந்த பந்தகங்களினின்றும் அப்பிதுரார்ஜித சொத்தை மீட்டுக் கொண்டாலும் அச்சொத்து அவனுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாது. அதுவும் பிதுரார்ஜிதமாகவே பாவிக்கப்படும். 5 மத். ஹை. கோ. ரி. 150; 4 மது. 250; 18 மது. 83.

## அப்பிரதிபந்த சப்பிரதிபந்த-தாயங்கள்.

**213** அப்பிரதிபந்ததாய சொத்து—முதல் மூன்று முன்னோர்களான தகப்பன், பாட்டன், பூட்டனகளுடைய சொத்துக்களுக்கு பிள்ளை, பேரன, கொள்ளுப்பேரன, ஆகிய முதல் மூன்று சந்ததியார்கள் நேரான முதல் வாரிசுகளாக இருக்கிறார்கள். இச்சந்ததியார்களிருக்கும்போது அச்சொத்தானது வேறு எவனையும் சேரமாட்டாது. அதுகாரணம் பற்றி மேற்கூறிய மூன்று முன்னோர்களிடமிருந்து பிள்ளை, பேரன், கொள்ளுப்பேரன் என்ற முறைபற்றி அடையப்படும் சொத்துக்கள் அப்பிரதிபந்த சொத்துக்களெனப்படும். பிரதிபந்தம் - என்றால் தடை; அப்பிரதிபந்தம் என்றால் தடையின்மை; இதற்கு வேறு எந்த வாரிசுகளாலும் தடுக்கப்படாமலிருப்பது என்பது பொருள். பிள்ளை, பேரன், கொள்ளுப்பேரன் என்ற வாரிசு பாத்தியத்தால் சொத்தையடைவது அப்பிரதிபந்த தாயம் எனப்படும். அப்பிரதிபந்த தாயத்தால் அடையும் சொத்துக்கள் மேற் குறித்தபடி பிதுரார்ஜிதமானவைகளாகவே இருக்கின்றன. 20 மது. 207.

சுயார்ஜிதமாகமாட்டாதென்று மதுராஸ் ஹைகோர்ட்டார் கொ ஞ்சகாலத்துக்கு முன் தீர்மானித்த (22 மது. 305), மேலான பிரிவி கௌன்சில் கோர்ட்டார் சமீபத்தில் இன்னும் அதிக மான பாருகலைச் செய்து அப்பீலில் வருமாறு தீர்மானித்திருக்கி றார்கள். அதாவது தகப்பனுடைய தகப்பன் எப்படி முன் னோன் என்று சொல்லப்படுகிறானோ அதுபோலவே தாயினு டைய தகப்பனை மாத்திரமும் முன்னோன் என்ற அர்த்தத்தில் சேர்ந்தவனென்றும். அவரிடமிருந்து தௌஹித்திரபாத்தியப்படி யடையும் சொத்தானது தௌஹித்திரனுடைய சுயார்ஜித சொத் தாகாமல் பூர்வார்ஜிதமான சொத்தாகவே பாவிக்கப்படவேண்டு மென்றும். அதாவது தௌஹித்திரனுடைய பிள்ளை முதலான ஆண் சந் ததியாருக்கும் பிறந்தவுடன் அதில் பாத்தியம் ஏற்படுகிறதென் றும் இப்படி பிரிவி கௌன்சில் கோர்ட்டார் தீர்மானித்திருக்கி றார்கள். (25 மது. 687) இதையனுசரித்து மதுராஸ் ஹைகோ ர்ட்டாரும் சமீபத்தில் அவ்வாறே இரண்டு கேசுகளிலும் தீர்மானி த்திருக்கிறார்கள். 27 மது. 300; 27 மது. 382.

**217** ஆனால் முன்னோன் முறையிலிருக்கிற மாதாமகர் முதலியோர் நீங்கலாக மற்றெல்லோரிடமிருந்தும் சப்பிரதிப ந்த தாயத்தால் அடைகிற சொத்துக்கள் சுயார்ஜிதமென்றே பா விக்கப்படும். மேலும் தாயார் உள்பட எல்லா ஸ்திரீகளிடமிரு ந்தும் வாரிசு பாத்தியப்படியடையும் சொத்துக்கள் யாவும் சுயார்ஜிதங்களேயாகும். 27 மது, 300.

## சுயார்ஜித சொத்துக்கள்.

**218.** பிதுரார்ஜிதமான சொத்தின் சகாயமில்லாமல் ஒரு வன் தன் சொந்தப்பிரயாசையினாலாவது சாமர்த்தியத்தினாலா வது தானாகவே சொத்து சம்பாதித்தால் அது அவனுடைய சுயா ர்ஜிதமெனப்படும். (அதாவது, சுயமாய்-தானாகவே, ஆர்ஜிக்கி றது-சம்பாதிக்கிறது என்பது பொருள்) 6 பம். 225.

மேலும் அவ்வாறு சம்பாதிக்கப்பட்ட சொத்து குடும் பப்பொதுவான பிதுரார்ஜித சொத்தோடு கலக்கப்படாமலும்

குடும்பப்பொதுவாக பாவிக்கப்படாமலுமிருந்து சம்பாதித்தவனுடைய சொந்தமாகவே அவனால் பாராட்டப்பட்டுமிருக்கவேண்டும். 27 மது. 228

**219.** யாதொரு சொத்தானது முன்னோர்களால் கைவிடப்பட்ட குடும்பத்தினின்றும் விலகிப்போய்விட்டதோ அதை ஒரு பாகஸ்தன் மற்ற பாகஸ்தர்களுடைய சம்மதம் பெற்றுக்கொண்டாவது, அல்லது அவர்களும் கைவிட்டுவிட்டார்களென்று தெரிந்து கொண்டாவது, நல்ல எண்ணத்தின்பேரில் தன் சொந்த முயற்சியாலும் குடும்பசொத்தின் சகாயமன்னியிலும் மீட்டுக் கொள்ளுவானேயானால் அதுவும் அவனுடைய சுயார்ஜிதமாகும் 20 அல். 267

ஆனால் மற்ற பாகஸ்தருக்கில்லாமல் தானே அச்சொத்து முழுவதையும் அடைந்துவிடவேண்டுமென்ற கெட்ட எண்ணங்கொண்டு அவர்களுக்குமுன் மோசடியாயாவது அவர்களுடைய சம்மதி பெறாமலாவது அச்சொத்தை மீட்டுக்கொண்டால் அது அவனுடைய சுயார்ஜிதமாகமாட்டாது. மேலும் மற்ற பாகஸ்தர்களுக்கும் பாத்தியப்பட்ட குடும்ப பொதுவான சொத்தின் சகாயத்தைக் கொண்டு ஒரு பாகஸ்தன் அதைமீட்டுக் கொண்டிருந்தாலும் அது அவனுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாது. 5. மது. ஹை. கோ. ரி. 150; 8 இ. அ. 99.

220. பிறரிடமிருந்து தானம் உயில் முதலிய வழியாயும் விவாக காலத்தில் வெகுமதியாகவும் அடையப்படும் சொத்துக்களும் சுயார்ஜிதங்களாகும் 3 மது, ஹை, கோ, ரி, 50.

221. பிதுரார்ஜித சொத்தின் சகாயத்தைக் கொண்டு சம்பாதிக்கப்படுவதும் பிதுரார்ஜிதத்தின் தன்மையை யடைகிறபடியால், குடும்பப் பொதுவான சொத்தின் செலவினால் கற்றுக் கொண்ட சாஸ்திர பயிற்சி முதலியவற்றால் சம்பாதிக்கப்படுகிற சொத்துக்களும் குடும்ப பொதுவானதாகுமேயன்றி சம்பாதிக்கிறவனுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாதென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**222.** மேற்சொன்ன சாஸ்திர விதியை யனுசரித்து, குடும்பப் பொதுவான சொத்தின் சகாயத்தால் சாமான்யமான படிப்பையடைந்த ஒருவர் வக்கீல் சம்பாதித்த தனியான சொத்துக்களும் பாகாதாகமுள்ள குடும்பப்பொதுவானதேயன்றி அவ்வக்கீலுடைய தனியான சுயார்ஜிதமாக மாட்டாதென்று மதுராஸ் ஹைகோர்ட்டார் முதலில் தீர்மானித்தார்கள். 7 மது. ஹை. கோ. ரி. 47.

ஆனால் அத்தீர்ப்பு சரியானதல்லவென்றும், தேகபோஷணை சாமான்யப்படிப்பு முதலியவற்றை இளம்பிராயத்தில் குடும்பசொத்திலிருந்து அடைய எல்லோரும் உரிமையுள்ளவர்களாக இருக்கிறபடியால், அவைகளின் நிமித்தம் குடும்பசொத்தின் பிரயோஜனத்தை ஒருவன் சிறுவயதில் அடைந்துவிட்டதினாலேயே அவனால் பின்னிட்டு சம்பாதிக்கப்படும் சொத்துக்கள் யாவும் குடும்பப்பொதுவானதாய் விடுமென்று சொல்லுவது எவ்வளவும் நியாயமல்லவென்றும் பிரிவி கௌன்சில் கோர்ட்டார் அபிப்பிராயப்பட, அதற்குப்பின் அவ்வபிப்பிராயத்தை யனுசரித்தே தீர்ப்புகள் செய்யப்பட்டு வருகின்றன. 1 மது. 252-4 இ. அ. 109, 117; 4 மது. 330.

**223.** குடும்ப திரவிய சகாயத்தால் சாதாரணப்படிப்பை மட்டும் அடைந்த ஒருவர் தன் சொந்தமுயற்சியாலும் குடும்ப திரவிய சகாயமன்னியிலும் சட்டப்பரிக்ஷை கொடுத்து சப்ஜட்ஜி உத்தியோகஞ்செய்து தனியாய் சொத்து சம்பாதிக்க, அச்சொத்து அவருடைய சுயார்ஜிதமேயன்றி குடும்பப்பொதுவானதாக மாட்டாதென்று பம்பாய் ஹைகோர்ட்டாரும் தீர்மானித்திருக்கிறார்கள். 6 பம். 225.

குடும்ப சொத்தின் செலவால் பால்யத்தில் தேகபோஷணையையும் சாமான்யப்படிப்பையும் அடைந்த ஒருவன் வயது வந்த பிறகு பெருத்த வர்த்தகத்தைச்செய்து ஏராளமான பொருளைச் சம்பாதிக்க, அப்பொருள் முழுவதும் அவனுடைய சுயார்ஜிதமானதென்று மதுராஸ் ஹைகோர்ட்டால் தீர்மானிக்கப்

**224.** ஆகையால் குடும்பசொத்திலிருந்து யாவரும் சிறு வயதில் அடைய உரிமை பெற்றிருக்கிற அன்னவஸ்திராதிகளின் பொருட்டும் சாமான்யமான படிப்பின் பொருட்டும் ஒருவன் குடும்பசொத்தின் பிரயோஜனத்தை யனுபவித்திருந்தபோதிலும் தன் சொந்த முயற்சி அல்லது சாமர்த்தியத்தால் வர்த்தகம், உத்தியோகம், கைத்தொழில் முதலிய வேலைகளைச்செய்து அவன் தனியான சொத்து சம்பாதித்தால் அச்சொத்து முழுவதும் அவனுடைய சுயார்ஜிதமாகுமேயன்றி குடும்பப்பொதுவானதாகமாட்டாது. 4 இ. அ. 117; 6 பம். 225; 15 பம். 32; 20 அல. 435.

**225.** ஆனால் சாமான்யமான படிப்பன்றி விசேஷத்திறமையையும் யோக்கியதையையும் உண்டுபண்ணக்கூடிய விசேஷப் படிப்பை ஒருவன் குடும்பப்பொதுவான சொத்தின் செலவினால் அடைந்திருந்தால், அப்படிப்பினால் ஏற்பட்ட யோக்கியதையைக் கொண்டு சம்பாதிக்கப்படுகிற சொத்து குடும்பப்பொதுவானதாகுமேயன்றி அவனுடைய தனியான சுயார்ஜித சொத்தாய்விடமாட்டாது. 6 மு. இ. அ. 539; 1 மது. 252-1 இ அ 117.

**226.** பாரிஸ்டர், ஹைகோர்ட்டு வக்கீல், ப்ளீடர்ஷிப் முதலான சட்ட பரீக்ஷைகள், ஸர்ஜன், டாக்டர், அபாத்திகிரி முதலான வைத்திய பரீக்ஷைகள், சிவில் சர்வீஸ் பரீக்ஷை, ஓவர்சியர் முதலான இஞ்சினியர் இலாகா பரீக்ஷைகள், எப். ஏ., பி. ஏ., எம். ஏ., முதலான கலாசாலை பரீக்ஷைகள், முதலானவைகளின் பொருட்டுள்ள படிப்புகள் விசேஷ படிப்புகளாகும்.

**227.** குடும்பப்பொதுவான திரவியத்தைக் கைமுதலாகக் கொண்டு வர்த்தகம் முதலிய தொழில்களைச்செய்து ஒருவன் பொருள் சம்பாதித்தாலும் அது அவனுடைய சொந்த சொத்தாகமாட்டாது. எத்தொழிலைச்செய்தாலும் குடும்பத்திரவிய சகாயமன்னியில் சொந்த முயற்சியாலும் சாமர்த்தியத்தாலும் ஒருவனால் தனியாய் சம்பாதிக்கப்படுவதுமட்டுமே அவனுடைய சுயார்ஜிதமாகும் (1 மது. 252; 4 இ அ. 103) இல்லாவிடில் அச்சொத்து குடும்பப்பொதுவானதாகவே ஏற்படும். அதிலும

இவ்வகையான குடும்பப்பொது சொத்தில் குடும்பசொத்தின் பிரயோஜனத்துடன் சம்பாதித்தவனுடைய சொந்தப் பிரயாசை யும் கலந்திருக்கிறபடியால், சம்பாதித்தவனுக்கு மற்ற பாகஸ்தர் களைவிட ஒருபங்கு அதிகம் கிடைக்கவேண்டுமென்று சாஸ்திர ஙகளில் சொல்லப்பட்டிருக்கிறது. குடும்ப திரவிய சகாயம் மூலகாரணமாயிருப்பதால் அதில் மற்றவர்களுக்கும் பங்கு கிடைக் கிறது; சம்பாதித்தவனுடைய விசேஷ சாமர்த்தியமும் பிரயா சையும் கலந்திருப்பதினால் அவனுக்கு இரண்டுபங்கு கிடைக்கி றது. 6 மு. இ அ. 526, 539.

**228.** தாயாருடைய திரவிய சகாயத்தின்பேரில் கற்றுக் கொடுக்கப்பட்ட நாட்டியத் தொழிலால் ஒரு தாசி சொத்து சம் பாதித்தால், அது அவளுடைய சுயார்ஜிதமாய் விடமாட்டாது. அவளிட தாயாருக்கும் அதில் பாத்தியமுண்டு. முன்பிரிவில் சொல்லியபடி அச்சொத்தில் தாசி இரண்டு பங்கையும் தாயார் ஒரு பங்கையும் அடையவேண்டும் 2 மது ஜை. கோ. ரி. 56,

ஆனால் தாசியானவள் வியபசாரித்தனம் செய்து சொ த்து சம்பாதித்தால் அது அவளுடைய சுயார்ஜிதமேயாகும். அதில் அவளிட தாயாருக்கு யாதொரு பங்குகிடைக்காது. ஐ. 4 மது. 330.

**229.** அவிபக்த குடும்பத்தைச்சேர்ந்த ஒரு பாகஸ்தனிட வசத்திலிருக்கும் சொத்துக்களைப்பற்றி வழக்கு உண்டாய் அவை கள் அவனுடைய சுயார்ஜிதமா அல்லது குடும்பப்பொதுவானதா என்ற கேள்வி பிறந்தால், மூலாதாரமாயிருக்கக்கூடிய சில பூர்வீக சொத்துக்களும் அக்குடும்பத்தில் இருக்கிறதாக ஏற்பட்டுவிட் டது தாவா சொத்தைத் தனனுடைய சுயார்ஜிதமென்று சொல் லுகிற பாகஸ்தனே அச்சங்கதியை முதலில் ருசுப்படுத்தவேண் டும். (12 இ. அ. 134-22 கல். 85; 10 மது. 251) மூலாதாரமா யிருக்கக்கூடிய பூர்வீகமான சொத்தொன்றும் இல்லாமலி ருக்கும்போதும் அல்லது குடும்ப சொத்தானது மிகவும் அற்ப மாயிருக்கும்போதும் அவன்பேரில் அப்பளுவு சுமத்தப்படமாட

டாது. அப்போது தாவாசொத்து அவனுடைய சுயார்ஜிதமாகவே பாவிக்கப்படும். 10 மு. இ. அ. 505. 3 பம். 534.

**230.** வெறும் ஒரு குடும்பஸ்தாகளுக்குள் குடியிருப்பு, சாப்பாடு, சடங்கு முதலியவைகள் ஒன்றாயிருப்பதினாலேயே அக்குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பாகஸ்தன் வசமிருக்கும் சொத்துக்கள் யாவும் குடும்பப்பொதுவானவைகளென்று பாவிக்கப்படமாட்டாது. 1 பங்காள லா ரி. 164; 2 மது. 19.

---

## 7-வது அத்தியாயம்.

---

# அவிபக்த குடும்ப நிலைமை.

**231.** குடும்பப் பொதுவான சொத்தில் பாகத்துக்குரியவர்களாயிருக்கிற பாகஸ்தாகள் ஏகோபித்திருந்து கொண்டு குடும்ப யோகக்ஷேமாதிகளை ஒருமித்து நடத்தி வருவது அவிபக்த குடும்ப நிலைமை என்று சொல்லப்படும்.

## I. அவிபக்தகுடும்ப பாகஸ்தாகள் இன்னாரென்பது.

**232.** ஹிந்து தர்மசாஸ்திரங்களின்படி ஸ்திரீகள் பாகத்துக்குரியவர்களல்ல. நம்முடைய மிதாக்ஷரை கிரந்தத்தின்படிக்கும் ஸ்திரீகளுக்கு குடும்ப சொத்தில் பாகபாத்தியம் கிடையாது. ஆண்பாற்புருஷர்களே அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த பங்காளிகளாக இருக்கிறார்கள்.

**233.** அவிபக்த குடும்பபாகஸ்தாகளாக இருக்கத் தகுதியுடையவர்கள் இன்னின்னாரென்பது வைதீகமான சில சாஸ்திர விதிகளையனுசரித்ததாக விருக்கிறது. தர்மசாஸ்திரங்களின்படி ஒரு ஹிந்துவானவன் தன்னுடைய தகப்பன், பாட்டன், பூட்டன் ஆகிய முதல் மூன்று முன்னோர்களுக்கும் உத்தரக்கிரியைகளைச் செய்யவும் அக்கிரியைகளிலும் சிரார்த்தாதிகளிலும

அவர்களின் பொருட்டு பூர்ணமான பிண்டங்களை போடவும
பாத்தியஸ்தனாகவும் கடமைப் பட்டவனாகவும் இருக்கிறான்.
அதுப்படி உதகக்கிரியை முதலியவற்றைச் செய்து பிண்டம
போட பாத்தியஸ்தர்களாக இருக்கிற ஒருவனுடைய பிள்ளை,
பேரன், கொள்ளுப்பேரன் ஆகிய மூவரும ஒருவனுக்கு சபிண்டாக
ளெனப்படுவார்கள். மேலும பிண்டம் போடுகிறவர்களன்றி
பிண்டத்தைப் பெறத்தக்கவர்களான தகப்பன், பாட்டன், பூட
டன் ஆகிய மூவரும ஒருவனுக்கு சபிண்டர்களாக இருக்கிறா
கள். அல்லாமலும ஒரே முன்னோர் அல்லது முன்னோர்களை க
குறித்து மேற்சொன்ன பிண்டங்களை எவர்கள் போடத் தகுந்த
வர்களாக இருக்கிறார்களோ அவர்களும ஒருவருக்கொருவர் சபி
ண்டர்களாகிறார்கள். அதாவது தகப்பனுடைய சந்ததியாரான
சகோதரன், சகோதரனிட பிள்ளை, சகோதரனிடபேரன் ஆகிய
இவர்களும, பாட்டன் பூட்டன் களுடைய முதல் மூன்று சந்த
தியார்களும, ஒருவனுக்கு சபிண்டர்களாக இருக்கிறார்கள். இ
வவாறு கீழாகவும, மேலாகவும, சுற்றுப்பக்கத்திலும் உள்ள
முதல் மூன்று ஆண் தலைமுறையார்கள் ஒருவனுக்கு சபிண்டா
கள் என்று சொல்லப்படுவார்கள். 6 மது. ஹை. கோ. ரி. 94,

**234.** மேற் கூறியபடி பலர்கள் ஒருவனுக்கு சபிண்டர்க
ளாக இருந்தாலும அப்பலர்களில் அநேகர் ஒருவருக்கொருவர்
சபிண்டர்களாகிறதில்லை. எவர்கள் ஒருவருக்கொருவர் சபிண
டர்களாக இருக்கிறார்களோ அப்படிப்பட்டவர்களே அவிபக்த
குடும்ப பாகஸ்தர்களாய் இருக்கத் தகுந்தவர்களாகிறார்கள்.
அதாவது அவிபக்த குடும்பத்தி லிருக்கப்பட்ட ஒவ்வொரு பாக
ஸ்தனும மற்றொவ்வொருவனுக்கும சபிண்ட முறையில் இருக்க
வேண்டும். அவ்வித மில்லாதவன அந்த அவிபக்த குடும்பத்
தைச் சேர்ந்த பாகஸ்தனாக மாட்டான்.

உதாரணம்: ஏ என்பவனுக்கு பி என்ற பிள்ளையும,
சி என்ற பேரனும், டி என்ற கொள்பேரனும், இ என்ற கொள்
பேரனுடைய பிள்ளையும, இருக்கிறதாக வைத்துக்கொண்டால்,
இ என்பவன், பி, சி, டி, என்ற மூவருக்கும் சபிண்டனாக இருந

தாலும் எ க்குச் சபிண்டனாகிறதில்லை. ஆகையால் எ. பி, சி, டி. ஆகிய இவர்களடங்கிய குடும்பத்தில் இ பாகஸ்தனாகமாட்டான். எ இறந்தபிறகே இ யானவன் பாகஸ்தனாகிறான். ஏனெனில் எ என்பவன் உயிரோடிருக்க பி, சி, டி, மூவரும் ஒருசமயம் இறந்து போய்விட்டால் அக்குடும்ப சொத்து பூராவும் எ என்பவனையே சேர்ந்து அவனுக்குப்பின் அவனுடைய விபக்த சகோதரர் முதலான சமீப தாயாதிகளை வாரிசு பாத்தியப்படி சேர்ந்துவிடுமே யன்றி இ என்பவனுக்குச் சேரமாட்டாது. ஆகையால் அவிபக்த குடும்பத்தார் சேர்ந்தவர்கள் எல்லோருமே ஒருவருக்கொருவர் சபிண்ட முறைமையில் இருக்க வேண்டும்.

**235.** பாட்டன், தகப்பன், சகோதரர் முதலானவர்களோடு அவிபக்த குடும்பமாயிருந்து பிறகு அவர்களிடமிருந்து பாகம் பிரித்துக்கொண்டு விலகுகிற ஒவ்வொருவனும் மகன் பேரன் முதலான ஆண் சந்ததியார்களுடன் மறுபடியும் அவிபக்த நிலைமையை அடையக் கூடியவனாக இருக்கிறான். ஆனதுபற்றி அவிபக்த நிலைமையும் விபக்த நிலைமையும் ஒவ்வொரு குடும்பத்திலும் மாறி மாறி வந்துகொண்டே யிருக்கிறது.

## II. அவிபக்த குடும்பப்பொதுவான சொத்துக்கள்.

**236.** அவிபக்த குடும்பஸ்தர்கள் தங்கள் தகப்பன் பாட்டன் பூட்டன் ஆகிய முதல் மூன்று முன்னோர்களிடமிருந்து அடைந்திருக்கும் சொத்துக்களும், அச்சொத்துக்களுடைய விருத்தியம்சங்களும், அச்சொத்துக்களின் சகாயம் அல்லது உபயோகத்தைக்கொண்டு சம்பாதித்திருக்கிற சொத்துக்களும் குடும்பப்பொதுவானதாகும். அதாவது - பிதுரார்ஜித பாத்தியமான சொத்துக்கள் யாவும் குடும்பப்பொதுவானதாக இருக்கின்றன. 3 கல. 508.

**237** மேலும் எல்லா பாகஸ்தர்களும் சேர்ந்து பிரயாசைப்பட்டு சம்பாதித்திருக்கிற சொத்துக்களும் அவர்களுடைய குடும்பப்பொதுவானதாகும் 3 மத. 151; 10 மு. இ. அ. 40[illegible]; 3 கல. 508.

**238.** ஒருவன் தன் தாயின் தகப்பனிடமிருந்து கௌகிக் கிரயாகதிப்படி அடைந்திருக்கிற சொத்தானது அவனுக்கும் அவனுடைய பிள்ளைகளுக்கும் பொதுவில் பாத்தியப்பட்ட குடும்பப்பொதுவான சொத்தாக இருக்கிறதென்று சமீபத்தில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 25 மத. 687 (பிரிவிகௌன்சில் தீர்ப்பு); 27 மத. 382.

**239.** ஒரு சொத்தானது ஒரு பாகஸ்தனால் குடும்ப திரவிய சகாயமில்லாமல் அவனால் சம்பாதிக்கப்பட்டிருந்தபோதிலும், அவன் அதைத் தனியான சொத்தாகப் பாராட்டாமல் குடும்பப்பொதுவான சொத்துக்களோடு கலந்து குடும்பப்பொதுவானதாக அனுபவித்து வந்திருந்தால் அதுவும் குடும்பப்பொதுவானதாய் விடுகிறது. 3 இ. அ. 259; 16 இ. அ. 71-16 கல. 397; 26 இ. அ. 229; 15 பம். 519; 10 கல. 393; 27 மத. 228.

## III. அவிபக்த குடும்பஸ்தர்களின் பாத்தியா பாத்தியங்களைப்பற்றி.

**240.** அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த எல்லா பாகஸ்தர்களும் அந்த குடும்ப சொத்துக்களைப் பொதுவில் அனுபவிக்கவும் அவைகளிலிருந்து சம்பாத்திகளையடையவும் சுதந்திரமுடையவர்களாக இருக்கிறார்கள். ஒரு பாகஸ்தன் குடும்ப சொத்துக்களின் பொது அனுபவத்தினின்றும் விலக்கப்பட்டுவிட்டால் அவன் பாக விபாஜனம் செய்யவேணுமென்ற அவசியமில்லையென்றும், குடும்பசொத்தை மற்றவர்களுடன் சேர்ந்து பொதுவாய் அனுபவித்துவரும் பொருட்டு வியாச்சியம் செய்யலாமென்றும், பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். 20 பம். 167.

**241.** குடும்பப்பொதுவான சொத்துக்களை எல்லா பாகஸ்தர்களும் பொதுவில் அனுபவிக்க சுதந்திரமுடையவர்களாக இருக்கிறார்களென்றாலும், தகப்பன், ஜேஷ்ட சகோதரன், முதலான குடும்பத்தலைவனே குடும்ப சொத்துக்களைப் பரிபாலனை செய்ய,

லும குடும்பகாரியங்களை நடத்திவரவும அதிகாரமுடையவனாக இருக்கிறான். குடும்பததலைவன நீங்கலான மற்ற கீழ்பட்ட பாகஸ்தாகளுக்கு அவ்வித அதிகாரமில்லை. பாகமாகும வரையில் அவாகள் குடும்ப சொததிலிருநது சமரக்ஷணை முதலியவை யடையபடைய பாத்தியமுள்ளவாகளாக இருககிறாகளேயன்றி குடும்பப்பொதுவான சொததில யாதொரு பாகததையாவது தனியாய தஙகள் சுவாதீனபபடுததிககொளளாக கூடாதவாகளாக இருககிறாகள். 11 மூ. இ. அ. 75.

**242.** பாகம் ஆகும் வரையில குடும்பபபொதுவான எல்லா சொததுக்களும அசசொததுக்களின வரும்படிகளும எல்லோருககும பொதுவில பாத்தியபபட்டதாக இருககின்றன. பாகம ஏறபடுகிற வரையில அவிபகத குடும்ப சொத்தில ஒரு பாகஸ்தனுக்கு இவ்வளவு பஙகு இருககிறதென்று சொலல முடியாது. ஏனெனில புதிதான பாகஸ்தாகள பிறககப்பிறகக பாகஸ்தாகளின் எண்ணிக்கை அதிகரிக்கிறது. ஆகையால ஒவ்வொருவருக்கும கிடைககக கூடிய பஙகு விகிதம குறைவடைந்து கொண்டே வரும. பாகஸ்தாகளில் யாராவது ஒருவன ஆண சநததியில்லாமல் இறநதுபோனால் அவனுடைய பஙகு பாத்தியமானது அவனோடு மறைநதுபோய் பொதுக குடும்ப சொததுடன சோநதுவிட அதனை உயிரோடிருககும மறற பாகஸ்தாகளுடைய பஙகு விகிதம் அதிகப்படுகிறது. ஆகையால அவிபகத குடும்பத்தைச் சோநத ஒருவன தனபஙகு இவ்வளவென்றாவது இன்னதென்றாவது அல்லது தனபங்குககுளள வரும்படி இவ்வளவென்றாவது குறிப்பிட முடியாது. 9 மூ. இ. அ. 539; 10 மதா. 11; 11 மூ. இ. அ. 75.

**243.** அவிபக்த குடும்பத்திலுள்ள ஒவ்வொரு பாகஸ்தனும அவனுடைய பெண்டுபிள்ளைகளும குடும்பப்பொதுவான எல்லா சொத்துககளாக கொண்டே சமரக்ஷிக்கப் படுகிறார்களே யன்றி அவரவருடைய பங்கிலிருந்து அவரவாகள் சமரக்ஷணை முதலிய வற்றை யடைகிறாக ளென்பதில்லை. குடும்பம ஒன்றா யிருககும வரையில் குடும்பாரத்தமாய் எவன பொருட்டு எவ்வ

அவனுடைய சந்ததியாரையே யடைகிறது. அவனும் சந்ததி யில்லாமல் இறந்துபோனால் அவனுடைய விதவையே குடும்ப சொத்துக்களை யடையத்தக்கவளாகிறாள். முன்னாடியே இறந்துபோய்விட்ட பாகஸ்தர்களின் விதவைகள் கடைசியிலிறந்த பாகஸ்தனுடைய விதவையினிடமிருந்து ஜீவனாம்சம் பெறவேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

**246.** ஆண் சந்ததியையுடைய ஒரு பாகஸ்தன் இறந்துபோனால் அவனுடைய பிரதிநிதிகளான மகன் முதலான அச்சந்ததியாரே அவனுடைய பங்கு பாத்தியத்தில் நிற்கிறபடியால், அப்பங்கு அவனுடைய சகோதரன் முதலான மற்றவர்களுக்கும் ஸர்வைவர்ஷிப்புப்படி பாத்தியப்படுகிறதில்லை. 5 மது. 362; 1 அல. 105.

**247.** ஒருவன் அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்தவனாக இருந்தபோதிலும் அவனுடைய சுயார்ஜிதமான சொத்துக்கள் முழுவதும் அவனுக்கே பாத்தியப்பட்டதாயிருக்கின்றன. மற்றவர்களுக்கு அதில் யாதொரு பாத்தியமும் இல்லை. ஆண் சந்ததியில்லாமல் அவன் இறந்துபோனாலும் அச்சுயார்ஜித சொத்துக்கள் அவனுடைய பெண்ஜாதி, பெண், தௌஹித்திரன் முதலான வார்சுகளுக்குச் சேருமேயன்றி சகோதரன் முதலான அவிபக்த குடும்ப பாகஸ்தர்களுக்குச் சேர்ந்துவிடமாட்டாது. 9 மூ. இ. அ. 610; 5 இ. அ. 61; 5 இ. அ. 160; 1 மது. 312; 17 கல. 33.

**248.** ஒருவன் தன் சுயார்ஜித சொத்தைக் குடும்பப்பொதுவான செலவுகளுக்கு உபயோகப்படுத்த வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. ஒரு சமயம் உபயோகப்படுத்தும்படி நேர்ந்தாலும் பின்னிட்டு அதை வாபசு பெற்றுக்கொள்ளும் விஷயமாய மற்றவர்களுடன் ஏதேனும் ஒரு ஏற்பாடு செய்துகொள்ளலாம். 1 மது. ஹை. கோ. ரி. 309.

**249.** அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொரு பாகஸ்தனும் தனக்குள்ள பங்கைப் பிரித்துக்கொடுக்கும்படி தனக்

கிஷ்டமானபோது குடும்பத்தலைவனைக் கேட்கலாம். அவசியமானால் அதற்காக வியாச்சியமும் செய்யலாம். மேலும் குடும்பத்தினுடைய ஸ்திதி என்னவென்று அறிந்துகொள்ளும்பொருட்டு குடும்பத்தலைவனைக் கணக்கும் கேட்கலாம். பாகவியாச்சியம் செய்யும்போதும் குடும்ப பரிபாலனத்தைப் பற்றி கணக்குகொடுக்கும் படிக்கும் குடும்பத்தலைவனைக் கேட்கலாம். 17 பம். 271.

**250.** ஆனால் மைனராயிருக்கும் பாகஸ்தனுக்கு மேற்கூறியபடி பாகம் கேட்கவாவது பாகத்துக்காக வியாச்சியம் செய்யவாவது அதிகாரமில்லை. ஆகிலும் குடும்பத்தலைவனுடைய நடவடிக்கைகள் குடும்பசொத்துக்கும் மைனர் பாகத்துக்கும் நஷ்டம் உண்டுபண்ணக்கூடியதாயிருந்தாலும் அல்லது குடும்பத்தில் மைனரின் பாத்தியம் மறுதளிக்கப்பட்டாலும் மைனரின் பொருட்டு அவனுடைய கார்டியன் அல்லது அடுத்த சிநேகிதன் பாகத்துக்காக தாவா செய்யலாம். 8 கல. 537; 19 பம். 99; 12 மது. 401.

**251.** ஒவ்வொரு பாகஸ்தனும் குடும்பப்பொதுவான சொத்தில் தன் பங்கு வீதத்துக்குள்ளதை அடமானம் ஒத்தி, கிரையம் முதலிய பந்தக பராதீனங்களுக்குட்படுத்தவும் சுதந்திரமுடையவனாக இருக்கிறான். (5 கல. 148). அவிபக்த குடும்பத்திலுள்ள ஒரு பங்காளியினிடமிருந்து ஒத்தி கிரையம் முதலான விநியோகத்தைப் பெற்ற அன்னியன் தான் விநியோகம் பெற்ற பங்கை மற்ற பாகஸ்தர்களுடன் சேர்ந்து பொதுவில் அனுபவிக்கலாம். சவுகரியப்படாவிட்டால் பாகத்துக்காக வழக்கிட்டு தான் வாங்கின பங்கைத் தனியே பிரித்து சுவாதீனப்படுத்திக்கொள்ளலாம். 1 பம். 95; 2 பம். 676; 5 பம். 493.

**252.** ஆனால் ஒரு பாகஸ்தன் தன் பங்குக்குள்ள சொத்தை தானம் செய்யவாவது உயில் செய்யவாவது கூடாது. ஏனெனில் அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பாகஸ்தன் இறந்துபோனால் அவனுடைய பங்கானது சர்வைவர்ஷிப் என்னும் பாத்

தியப்படி அவன் இறந்த நிமிஷமே மற்றவர்களையடைந்து விடுகிறது. இறந்த பிற்பாடே ஸ்வார்ஜிதத்துக்கு வரவேண்டிய தாயிருக்கிற உயிலிற்கண்ட பாத்தியமானது பிந்தினதாக ஏற்பட்டுவிடுகிறபடியால் அவ்வுயிலில் பிரயோஜனமற்றதாய் விடுகிறது. 8 ம. ஹை. கோ. ரி. 6; 6 பம். 24.

## IV. குடும்பார்த்தமான செலவுகளின்னதென்பது.

**253.** குடும்பத்தைச் சேர்ந்த எல்லோருடைய அன்ன வஸ்திராதிகளின் பொருட்டுள்ள காலக்ஷேபச் செலவுகளும், இறந்தவர் பொருட்டு நடக்கவேண்டிய உத்தரக்கிரியை வகைரா செலவுகளும், அப்போதைக்கப்போது நடக்கவேண்டிய சிராத்தம் முதலான அவசியமாயுள்ள சடங்குகளுக்காக ஏற்படும் செலவுகளும் குடும்பப்பொதுவான செலவுகளாகும்,

**254.** ஒவ்வொரு ஹிந்துப்பெண்ணும் கட்டாயமாய் விவாகம் செய்யப்படவேண்டுமென்றும், பிராமணர் முதலிய உயர்ந்த ஜாதிகளில் பெண்ணானவள் விவாகமாவதற்கு முந்தியே புஷ்பவதியாய்விட்டால் ஜாதிப்பிரஷ்டையாய் விடுகிறாள் என்றும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதுபற்றி ஒவ்வொரு ஹிந்து தகப்பனும் தன் பெண்களுக்கு விவாகம் செய்யக்கடமைப்பட்டவனாக இருக்கிறான். ஆகையால் பெண்களின் விவாகம் சுபசோபனாதிகளின் பொருட்டு ஏற்படுகிற செலவுகளும் குடும்பப்பொதுவானதாக இருக்கின்றன. பிராமணர் முதலிய உயர்ந்த ஜாதிகளில் ஆண் பிள்ளைகளுக்கு கட்டாயமாய் உபநயனம் செய்யப்படவேண்டுமாகையால் அது நிமித்தம் ஏற்படுகிற செலவும் குடும்பப்பொதுவானதாகும் 4 மது. 1..

**255.** ஆண் பிள்ளைகளுக்கு விவாகம் செய்யப்படவேண்டுமென்பது சாஸ்திரத்தின்படி கட்டாயமானதல்ல, விவாகம் என்ற ஸம்ஸ்காரமானது ஸ்திரீகளுக்குத் தான் பிரதானமானதேயன்றி சாஸ்திரங்களின்படி ஆண்களுக்குப் பிரதானமானதல்ல. அதுபற்றி ஹிந்துவானவன் தன் குமாரர்களுக்கு விவா

கப செய்யககடமைப்பட்டவனல்ல. ஆனதால குமாரர்களின் விவாகததின பொருட்டு ஏறபடுகிற செலவுகள் குடுமப அவசிய மான பொதுசசெலவுகளாக மாட்டாது. அது நிமித்தம் ஏற்ப டுகிற கடனும குடுமபாாத்தமான கடனுகமாட்டாது. அக்கட னானது அதன் பிரயோஜனத்தை யடைநத அதாவது - அதைக் கொண்டு விவாகம செய்யபபட்ட பாகஸ்தாகளின் பங்கு சொ ததைமட்டும பொறுததகாகுமேயனறி மற்றவாகளுடைய பங் கைப பொறுககமாட்டாது. 4 மது. 1; 27 மது 206.

## V. குடும்ப மாேனஜருடைய அதிகாரங்களும் கடமைகளுப்.

**256.** பூாவாாஜிதமான குடுமபசொததில பிளளைகள தக பபனோடு சமமான பாததியஸதாகளாக இருநதாலும, குடுமப ததலைவனை தகப்பனே குடுமபசொத்துககளைத தன வசததில வைததுககொணடு பரிபாலனம பணணவும குடுமபகாரியஙகளை நடததிவரவும அதிகாரமுடையவனாக இககிறான. (1 அல. 77). தகபபன இறநதபிறகு பிளளைகளில மூததவனாயிருககும ஜேஷ் டஸ்தானததால் குடுமப மானேஜரெனனும அதிகாரததை சாதா ரணமாய அடைவான. மூததவன இருகக இளையவன அவ்வதி காரததையும அநதஸ்ததையும அடைவது விசேஷமாய் வழககத திலில்லை. ஆனால இளையவனொருவன் மறற பாகஸ்தாகளுடைய சமமதம அலலது அஙகீகாரததினபேரில குடுமப காரியங்களை நடததிவநதால அவனே மானேஜராகவும பாவிக்கபபடலாம. 29 கல. 751.

**257.** அவிபக்த குடுமபப்பொதுவான சொததுக்கள குடு மபததலைவனான மானேஜருடைய வசத்தில் இருககத்தககதாயி ருக்கினறன. குடுமப அவசியமான செலவுகளின்பொருட்டு அ வன தனனிஷடப்படி செலவு செய்யலாம். சமபளத்துக்கு வேலை பாாககிற ஏஜண்டு முதலான அன்னிய மனுஷனைப்போல அவன குடுமபசசெலவுகளை மடடாயும செடடாயும செலவழிக கக கடமைபபட்டவனல்ல. 3 மது. ஹை. கோ. ரி. 177; 10 பம. 528; 17 பம. 271; 2 மது. 339; 22 அல். 307.

**258.** குடும்ப மானேஜரானவன் தனனால் செயயப்படுகிற செலவுகளுக்குக் கணக்கு வைதது்கொளள வேண்டுமெனற அவசியமுமில்லை. ஆசிலும் பாககாலததில் அவன் மற்றவாக ளால் கணககுக கேட்கபபடலாமாகையால் குடும்பார்ததமாய் செய்யபபடும செலவுகளுக்கு அவன கணககு வைத்து வருவதே உசிதமானதாகும 17 பட. 271.

**259.** குடுமபம ஒன்றாயிருக்கும வரையில குடுமபார்த்த மாயும நல்ல எணணத்தோடும குடுமபமானேஜரால் செயயபப டும செலவுகளுககு மறறவாகள கட்டுபபட்டேயிருககவேண்டும. குடுமபததலைவன அதிகமாயச் செலவு செய்கிறானென்றாவது அவனுடைய மேலவிசாரணை குடுமபததுககு லாபகரமாயில்லை என்றாவது அபிப்பிராயபபடும பாகஸ்தாகள பாகமபிரிதது்க கொள்ளவழி தேடலாமேயன்றி, மானேஜருடைய அதிகாரததைக மட்டுபபடுததவாவது குடுமபசெலவுகளை மட்டாகச செலவழிக கவேண்டுமென்று அவனை நிரபநதிககவாவது இடமில்லை. 1 பது. 561; 5 பம. 48; 1 அல. 105; 4 கல. 425.

**260.** ஆனால குடுமப மானேஜரால செயயபபடும மோசபு யான நடவடிக்கைகளை ரதது செய்துகொளளவும, அதினால நேரிடும நஷ்டங்களுககு அவனையே உததரவாதியாககவும, அவ னால செய்யபபடும் அனாவசியமான செலவுகளை அவனிடமிரு நது வஜா செய்துகொள்ளவும மறறு பாகஸ்தாகளுககு பாததிய முண்டு. 4 பம் 23.

**261.** மேலும குடுமப மானேஜரால் வாங்கபபட்ட எல லாக் கடனகளும குடுமபார்த்த மானவையே எனறு பாவிக்கப படவு மாட்டாது. 21 பம. 808; 5 கல். 34.

குடும்பப் பொதுவான திரவியத்தை மானேஜரானவன தன் சொந்தச செலவுகளுக்காக உபயோகித்திருநதால அதை அவனிட மிருந்து மற்ற பாகஸ்தாகள் குடுமபததுக்கு வஜா செ ய்யலாம.

**262.** குடும்ப மானேஜரானவன் குடும்பத்துக்கு வரவேண்டிய பணம் குத்தகை முதலியவற்றை வரப்பற்றவும், குடும்பத்திலிருந்து கொடுபட வேண்டியவைகளைக் கொடுக்கவும், குடும்பார்த்தமாயுள்ள சகலவித செலவுகளைச் செய்யவும், அவைகளின் பொருட்டு அவசியமானால் கடன்கள் வாங்கவும், அச்செலவுகளுக்காகவும் கடன்களுக்காகவும் அவசியமானால் குடும்பப்பொதுவான சொத்துக்களை அவசியத்தினளவுக்கு பந்தகபராதீனங்கள் செய்யவும் அதிகாரமுடையவனாக இருக்கிறான். மானேஜருடைய மேற்சொன்ன நடவடிக்கைகளுக்கு மற்ற பாகஸ்தர்களும் உடன்பட வேண்டியவர்களாக இருக்கிறார்கள். 9 கல். 508.

**263.** ஆனால் குடும்பார்த்தமாயுள்ள அவசியமான காரணங்களன்னியில் குடும்பத்தலைவனானவன் தன் பங்கு வீதத்துக்கு மேற்பட்ட சொத்தை பந்தக பராதீனம் செய்யக்கூடாது. (26 கல். 820; 21 அல. 63.) மேலும் காலாவதியாய்ப்போன ஒரு கடனை ஒப்புக்கொள்ளவாவது அக்கடனைக் குடும்ப சொத்திலிருந்து தீர்க்கவாவது குடும்ப மானேஜருக்கு அதிகாரமில்லை. இந்த விஷயமாய் அவன் செய்யும் நடவடிக்கைகள் மற்றவர்களை ஒருவிதமும் கட்டுப்படுத்தவு மாட்டாது. 20 பம். 155; 17 பம். 512; 17 மத. 221.

**264.** குடும்ப மானேஜருக்கு மற்ற பாகஸ்தர்களைக் காட்டிலும் விசேஷமான அதிகாரமிருந்தாலும் குடும்பப் பொது சொத்தின் விநியோகமானது குடும்பார்த்தமாயுள்ள அவசியத்தைப் பொறுத்ததாக இருக்கவேண்டியிருக்கிறபடியால், அவனுடைய பங்குவீதத்துக்கு மேற்பட்ட சொத்தை அவனிடமிருந்து விநியோகம் பெறுகிறவர்கள் அவ்விநியோகத்தின் அவசியத்தைச் செவ்வையாய் விசாரித்துத் தெரிந்துகொண்டு நல்லெண்ணத்தோடு விநியோகம் பெற வேண்டும். இல்லாவிடில் அவ்விநியோகம் மற்ற பாகஸ்தர்களுடைய பங்கு சம்பந்தப்பட்டமட்டில் செல்லமாட்டாது. 6 மூ. இ. அ. 391.

**265.** குடும்பார்த்தமாயுள்ள செலவுகளின் பொருட்டும் கடன் முதலிய அவசியங்களின் பொருட்டும் மாத்திரம் குடும்ப

மானேஜரானவன் தன் பங்கு விகிதத்திற்கு மேற்பட்ட குடும்ப சொத்தை விநியோகம் செய்யலாமென்று மேலே சொன்ன விதியானது ஜேஷ்ட சகோதரன் முதலான சாதாரண மானேஜருக்கே ஏற்பட்டது. தகப்பன் பாட்டன் ஆகிய முன்னோர்கள் குடும்ப மானேஜராக இருந்தால், அவர்கள் தங்கள் சொந்தக் கடன்களுக்காகவுங்கூட தங்கள் பங்குவிகிதத்துக்கு மேற்பட்ட குடும்ப சொத்தை விநியோகஞ் செய்ய அதிகாரமுள்ளவர்களாக இருக்கிறார்கள். 1 இ. அ. 321; 16 பம். 99; 27 மது. 326; 17 இ. அ. 11. (இதைப்பற்றி 14 வது அத்தியாயத்தைப் பார்க்க.)

## VI. கூட்டு வியாபாரம்.

**266.** அவிபக்த குடும்பஸ்தர்கள் ஒன்று சேர்ந்து கூட்டாய் ஒரு வியாபாரத்தைச் செய்தால் அதுவும் அன்னியர்கள் பலர் சேர்ந்து நடத்தும் ஒரு சாதாரணக்கூட்டு வியாபாரத்துக்குள்ள சட்டவிதிகளையே பெரும்பான்மையில் அனுசரித்ததாக இருக்கின்றது.

ஆனால் அன்னியர்கள் செய்யும் கூட்டுவியாபாரத்தில் கூட்டாளிகளில் எவனாகிலுமொருவன் இறந்துபோய்விட்டால் அக்கூட்டுவியாபாரம் சட்டப்படி கலைந்து விடுகிறது. அவிபக்த குடும்பஸ்தர்கள் சேர்ந்து செய்யும் கூட்டுவியாபாரமானது அவ்விதம் கலைந்துபோகமாட்டாது. உயிரோடிருக்கும் மற்ற பாகஸ்தர்களே அவ்வியாபாரத்தைத் தொடர்ச்சியாய் நடத்திக் கொண்டுவரலாம். 6 கல். 815; 5 பம். 38.

## VII. வியாச்சிய சம்பந்தமான விஷயங்கள்.

**267.** அவிபக்த குடும்பத்திலுண்டாகும் வியாச்சியங்களில் குடும்பத்தலைவனானவன் தான்மட்டும் வாதியாக நின்று அன்னியன் பேரிலுள்ள ஒரு வியாச்சியத்தை நடத்தலாமென்று முன் தீர்மானிக்கப்பட்டிருந்தது. ஆனால் அத்தீர்ப்பு இப்போது மாறிவிட்டது. எல்லா பாகஸ்தர்களும் கக்ஷிக்காரர்களாக இருந்துதான் வியாச்சியம் செய்யப்பட வேண்டுமென்று இப்பால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 23 மது. 190.

**268.** ஆனாலும் ஒரு பாகஸ்தன் குடும்பத்தின் பொருட்டு ஏதாவது ஒரு உடன்படிக்கையைப் பிறனொருவனோடு செய்து கொண்டிருந்தால் அவ்வுடன்படிக்கை சம்பந்தமாயுள்ள வியாச்சியத்தை அவன் மட்டுமே கொண்டுவரலாம். 7 கல் 738; 23 மத. 326.

**269** அவிபக்த குடும்பத்தின் பேரில் வியாச்சியம் கொண்டுவருகிற அன்னியன் குடும்பத்தின் பிரதிநிதியான குடும்ப மானேஜரையாவது அல்லது எல்லா பாகஸ்தர்களையுமாவது கக்ஷி சேர்த்தி தாவா செய்யலாம். ஆனால் குடும்பசொத்து விஷயமாயுள்ள வியாச்சியங்களில் எல்லா பாகஸ்தர்களும் கக்ஷிக்காரர்களாக சேர்க்கப்படவேண்டும்.

**270.** ஹிந்து குடும்பங்களில் முதலில் அவிபக்த நிலைமையும் அதிலிருந்து பிறகு விபக்த நிலைமையும் ஏற்பட்டுவருகிறபடியால், ஒரு வியாச்சியத்தில் சம்பந்தப்பட்ட வாதிபிரதிவாதிகள் பாகம் பிரிந்தவர்களா அல்லது பிரியாதவர்களா என்ற கேள்வி பிறந்தால், அவர்கள் பாகம்பிரியாதவர்களென்றே முதலில் பாவிக்கப்படுவார்கள். பாகம் பிரிந்ததாக வாதாடுகிறவனே தன் வாதத்தை முதலில் ருசுப்படுத்தவேண்டும். 9 மூ. இ. அ. 66; 8 பம். 154; 17 கல். 85.

---

## 8-வது அத்தியாயம்.

## பாகம்.

### 1. பாகத்துக்குரியவர்களையும் பாகார்கமுள்ள சொத்துக்களையும் பற்றி.

**271.** பிதுரார்ஜிதம் முதலான குடும்பப்பொதுவான ஸ்தாவர ஜங்கம சொத்துக்களை ஏகோபித்தனுபவித்துக்கொண்டு அவிபக்த குடும்பமாய் இருக்கத்தகுந்த பாகஸ்தர்கள் இன்னார்க

ளென்பதைப்பற்றி முன் அத்தியாயத்தில் கூறப்பட்டது. அப்படிப்பட்டவர்கள் தங்களுடைய குடும்பப்பொதுவான சொத்துக்களை ஏகமாய் அனுபவித்துக்கொண்டு ஒருமித்திருக்க சௌகரியப்படாமலாவது இஷ்டப்படாமலாவது இருந்தால், அவர்கள் அசசொத்துக்களில் தங்கள்தங்களுக்குள்ள பாகங்களைப் பிரித்தெடுத்துக்கொண்டு தனித்தனியாயிருக்கவும் உரிமையுள்ளவர்களாக இருக்கிறார்கள்; 10 பம. ஹை. கோ. ரி. 444.

**272.** சிலவித சொத்துக்கள் பிதுரார்ஜிதமானதாக இருந்தாலும் அவைகள் தங்கள் தன்மையினாலாவது வழக்கத்தினாலாவது பாகிக்கத்தகாதவைகளாக இருக்கின்றன. அப்படிப்பட்ட சொத்துக்கள் குடும்பத்தில் ஜேஷ்டனாயிருப்பவனுக்கே சேர்ந்ததாயிருக்கின்றன. இச்சொத்துக்களைப்பற்றி 13-வது அத்தியாயத்தில் விரிவாய் கூறப்பட்டிருக்கிறதைப் பார்க்க.

**273.** பிதுரார்ஜிதமான ஜாகீர் சுரோத்திரியம் முதலிய இனாமகளும், பிரும்மதாயம் தேவதாயம் முதலான மானியங்களும், கோவிலூழியம் புரோகிதம் முதலான விருத்திகளும், பாகாகமுள்ள வற்றுள சேர்ந்தவைகளாக இருக்கின்றன.

**274.** பாகிக்க முடியாததாயும் விலைமதிப்புக்கடங்காததாயுமிருக்கிற பூஜார்கமான குடும்ப விக்கிரகங்களும் அவைகளைச் சேர்ந்த பூஜை சாமான்களும் குடும்பத்தில் மூத்தவனாக இருப்பவனுடைய சுவாதீனத்திலேயே இருக்கத்தக்கதென்றும், விக்கிரகங்களை வைத்துப் பூஜை செய்யுமிடத்துக்கு மற்றவர்கள் பூஜா காலங்களில் சேவிக்கப்போகலாமென்றும் பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். 17 பம 271.

**275.** பாகிக்க முயல்வதில் எவைகள் சேதத்தையடைந்து உபயோகமற்றதாய் விடுகிறதோ அப்படிப்பட்ட சொத்துக்களை ஒரு பாகஸ்தனுடைய பங்குக்கே தள்ளிவிட்டு மற்ற பாகஸ்தர்கள் அச்சொத்துக்களின் விலைமதிப்பில் தங்கள் தங்களுக்குள்ள அவனிடமிருந்து அடையவேண்டும். 10 கல். 675.

**276.** தகப்பனுடைய ஸ்வார்ஜித சொத்துக்களை பாகித்துக் கொடுக்கும்படி அவனைக்கேட்க பிள்ளைகளுக்கு அதிகாரமில்லை. ஆனாலும் தகப்பன் இறந்த பிறகு அசசொத்துக்களை பாட்டன் முதலான முன்னோர்கள் வழியாக வந்த பூர்வார்ஜித சொத்துக்களைப் போலவே பிள்ளைகள் சமமாகப்பாகித்துக் கொள்ளவேண்டும்.

**277.** ஒருவனுடைய பிதுரார்ஜிதமான சொத்துக்களில் அவனுடைய பிள்ளை பேரன் கொள்பேரன் ஆகிய முதல் மூன்று ஆண் சந்ததியார்களும் குடும்பத்தில் பிறந்த மாத்திரத்திலேயே பாத்தியமுடையவர்களாக இருக்கிறார்கள். ஆனபடியால் பிதுரார்ஜிதமான சொத்தைப்பாகித்துக் கொடுக்கும்படி மகன் தகப்பனைக்கேட்கலாம். (1 அல. 431; 17 பம். 271 18 மது. 179;) மகன் இறந்தபிறகு அவனுடைய மகனான பேரன் பாட்டனை பாகம் கேட்கலாம். ஆனால் மகன் இருக்கும் போது பேரன் பாட்டனை பாகம் கேட்கக்கூடாது. அல்லாமலும் பாட்டனுடன் பாகம் பிரித்துக்கொள்ளும்படி பேரனானவன் தன் தகப்பனைக் கட்டாயப்படுத்தவும் கூடாது. அதுபோலவே மகனாவது பேரனாவது இருந்தால் கொள்பேரனுக்கு பாகம் கேட்க சுதந்திரம் இல்லை. 1 மது. ஹை. கோ. ரி. 77; 10 பம். 529; 1 அல. 159; 1 மது. 76; 12 பம். 289; 5 கல் 148 6 இ. அ. 88; 5 அல. 430; 6 அல் 574.

**278.** பிதுரார்ஜிதமான குடும்ப சொத்தில் தகப்பனும் பிள்ளைகளும் சமமான பாத்தியஸ்தர்களாக இருக்கிறார்கள். (5 அல. 430; 5 கல. 148). தகப்பனுக்கு பிள்ளையைவிட ஒரு பங்கு அதிகம் உண்டென்றும் ஜேஷ்ட குமாரனுக்கு மற்ற குமாரர்களைவிட கொஞ்சம் அதிகம் ஜேஷ்டாம்சமாகக் கொடுக்கவேண்டுமென்றும் பூர்வீக கிரந்தங்களில் சொல்லப்பட்டிருந்த போதிலும் இக்காலத்தில் அவை அனுஷ்டானத்தில் இல்லை. இப்போது எல்லோரும் சமமாகவே பாகித்துக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

**279.** ஒரு பாகத்தில் தகப்பனும் பிள்ளைகளுமன்றி பேரர்களும் கொள்பேரர்களுங்கூட சம்பந்தப்பட்டிருந்தால், அவ

ர்கள் தங்கள் தங்கள் தகப்பன்மார்களுடைய அம்சத்துக்குத் தக்கபடி பாகத்தை யடைய வேண்டும் தகப்பனை யிழந்த பேரர்களும் கொள்பேரர்களும் தங்கள் தங்கள் தகப்பனுக்குள்ள பங்கை முதலில் அடைந்து, பிறகு அப்பங்கை தங்களுக்குள், சமமாகப்பிரித்துக்கொள்ளவேண்டும். தகப்பனை யிழக்காமலிருக்கிறவர்கள் அந்தத்தகப்பன் அடைந்த பங்கை அவனுடன் சமமாகப்பிரித்துக்கொள்ளவேண்டும். 5 அல. 430.

நான்காவது சந்ததியாகிய கொள்பேரனுடைய மகன் மேற்படி பாகத்தில் நேரில் சம்பந்தப்பட முடியாது, ஆனால் அவனுடைய தகப்பனாவது பாட்டனாவது பூட்டனாவது ஒரு பங்கை அடைந்தால் பிறகு அதில் அவனுக்கு பாத்தியமுண்டு.

**280.** சந்ததியின்றி இறந்துபோன தாயாதிகளிடமிருந்தும் பந்துக்களிடமிருந்தும் சபபிரதிபந்த தாயத்தால் ஒருவன் சொத்தையடைந்திருந்தால், அதில் அவனுடைய பிள்ளை முதலானவர்களுக்கு அவன் உள்ளவரையில் யாதொரு பாத்தியமும் இல்லை. ஆகையால் அப்படிப்பட்ட சொத்தையுடைய தகப்பனை அதில் பாகம் கொடுக்கும்படி கேட்க அவனுடைய பிள்ளைகளுக்கு சுதந்தரமில்லை. 1 அல. 651; 22 மது. 305.

**281.** ஆகிலும் தாயின் தகப்பனான மாதாமகரானவர் தாய் வழியைச்சேர்ந்த முன்னோராக இருக்கிறபடியால் அவரிடமிருந்து தௌகித்திர பாத்தியப்படி அடையும் சொத்து அந்த தௌகித்திரனுக்கு ஏகதேசமான சுயார்ஜிதம் போலாகாமல் பூர்வார்ஜித சொத்தாகவே இருக்கிறதென்றும், அவனுடைய பிள்ளைகள் அச்சொத்தில் பாகம் கொடுக்கும்படி அவனைக் கேட்கவும் சுதந்திர முடையவர்களாக இருக்கிறார்களென்றும் சமீபத்தில் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. 25 மது. 687. (இது பிரிவி கவுன்சில் தீர்ப்பு); 27 மது. 300; 27 மது. 382.

**282.** ஒருவனுக்கு பல பெண்சாதிகளிருந்து ஒவ்வொரு பெண்சாதிக்கும் வெவ்வேறு எண்ணிக்கையான பிள்ளைகளிருந

அதுபோலவே ஒரு அவிபக்த குடும்ப பாகஸ்தன் இறக்கும்போது அவனுடைய பெண்சாதி கர்ப்பிணியாயிருந்தால், அவன் இறந்த பிறகு பிரிக்கப்படும் பாகத்தில் அவனுடைய அவ்விதவையின் கர்ப்பத்திலிருக்கும் ஆண் சிசுவுக்கென்று ஒருபாகம் ஏற்படுத்தப்படவேண்டும். ஆணில்லாமல் பெண் பிறந்தால் அதற்கு யாதொரு பாகமும் கொடுக்கவேண்டியதில்லை.

**286.** பாககாலத்தில் தாயின் கர்ப்பத்தில் இராமல் பாகத்துக்குப் பிறகு கர்ப்பத்திலுதித்துப் பிறக்கும் பிள்ளையானவன் தகப்பன் பங்கிலிருந்தே பாகம் பெறவேண்டும். மேலும் தகப்பன் வசமிருக்கும் அவனுடைய சுயார்ஜிதமான சொத்துக்கள் பின்பிறந்த அவிபக்த பிள்ளைகளுக்கே சேரும். 4 அல. 427.

**287.** ஆனால் தனக்கென்று ஒரு பாகம் வைத்துக்கொள்ளாமல் தகப்பனானவன் எல்லா சொத்துக்களையும் குமாரர்களுக்கே பிரித்துக்கொடுத்துவிட்டு பிறகு வேறு பிள்ளையைப் பெற்றால், முன்னமேயே சொத்துக்களையடைந்துவிட்ட மற்ற பிள்ளைகள் பின்பிறந்த பிள்ளைக்கும் ஒரு பாகம் கொடுக்கவேண்டும். 20 மது. 75.

**288.** மைனர்:- பாகம் கேட்க சுதந்திரமுள்ள ஒருபாகஸ்தன் மைனராயிருந்தால், மைனாரிடி நீங்கும் வரையில் பாகம் கேட்கவாவது பாகத்துக்காக தாவா செய்யவாவது அவனுக்கு அதிகாரமில்லை; ஆனாலும் குடும்பத்தலைவன் முதலானவர்களுடைய அக்கிரமமான நடவடிக்கைகளால் குடும்பசொத்தானது துர்வினியோகப்பட்டு மைனர் சொத்துக்கு நஷ்டமும் கெடுதியும் நேரிடக்கூடியதாக இருந்தாலும், குடும்ப எஜமானன் மைனரைக் காப்பாற்றாமல் அநாதரவு செய்தாலும், அல்லது மைனரின் பாகபாத்தியம் ஆக்ஷேபிக்கப்பட்டாலும் மைனருடைய கார்டியன் அல்லது அடுத்த சிநேகிதன் மைனருக்காக பாக வியாஜ்யம் செய்யலாம். அக்கிரமமான செலவுகளும் துர்வினியோகங்களும் செய்கிற பாகஸ்தன் மைனரின் சுபாவ கார்டியனான தகப்பனாகவேயிருந்தால், மைனரின் தாயாராவது தாயாரில்லாவிடில்

வேறு சொந்தக்காரராவது அடுத்த சிநேகிதராவது இருந்து வியா
ச்சியத்தைச் செய்யலாம். 1 மது. ஹை. கோ. ரி. 94 19 பம்.
99 8 கல். 537.

**289.** பாகஸ்தர்களில் ஒருவன் மைனராயிருப்பதினா
லேகிய குடும்பத்தில் பாகம் செய்யக்கூடாதென்ற விதியில்லை.
எல்லோரும் கிரமப்படி பாகம் செய்துகொள்ளலாம். ஆனால்
மைனருடைய கார்டியனானவன் பாகத்தில் மைனரின் பிரதிநிதி
யாக இருந்துகொண்டு மைனருடைய பங்கை ஒப்புக்கொள்ள
வேண்டும். நியாயமாயும் கிரமமாயும் செய்யப்பட்ட ஒரு பாக
மானது மைனரையும் கட்டுப்படுத்தும்.

**290.** சரியானபடி பாகம் பிரிக்கப்படவில்லையென்று
தெரியவந்தால், மைனரானவன் வயதுவந்த பிறகு அப்பாகத்தை
ரத்துசெய்துகொள்ள தாவா கொண்டுவரலாம்.

**291.** ஆனால் பாகமானது சட்ட விரோதமாகவும் அநி
யாயமாகவும் மோசடியாகவும் செய்யப்பட்டதென்று ருசு
வானாலொழிய பாகம் ரத்தாகமாட்டாது. 2 ம. ஹை. கோ. ரி. 47.

**292.** வைப்பாட்டி பிள்ளை.— பிராமணர் முதலிய மு
தல் மூன்று ஜாதிகளில் வைப்பாட்டி பிள்ளைக்குக் குடும்ப சொத்
தில் யாதொரு பாத்தியமும் கிடையாது. தக்க வயதாகிய மேஜா
ரிட்டியடையும் வரையில் தகப்பனுடைய குடும்ப சொத்தில்
அன்ன ஜீவனாம்ச பாத்தியத்தை மட்டும் உடையவனாக இருக்கி
றான்.

**293.** சூத்திரர் முதலிய ஜாதிகளில் வைப்பாட்டி பிள்ளை
களுக்குத் தகப்பன் சொத்தில் பாகபாத்தியமுமுண்டு. பெண்சாதியி
னிடமாகப் பிறந்த சொந்தப்பிள்ளை இரண்டு பங்கையும் வைப்
பாட்டி பிள்ளை ஒரு பங்கையும் அடைய பாத்தியஸ்தர்களாக
இருக்கிறார்கள். அதாவது சொந்தப்பிள்ளையானவன் வைப்பா
ட்டி பிள்ளையைவிட ஒரு பங்கு அதிகம் அடைகிறான். 14 பம்.
282.

**294.** ஆனாலும் வைப்பாட்டி பிள்ளைகள் தகப்பனை பாகம் கேட்கவாவது பாகத்துக்காக தகப்பன்பேரில் தாவா செய்யவாவது அதிகாரமில்லை. 4 மத. 44; 11 கல. 714; 23 மத. 16.

**295.** ஆனால் தகப்பன் இறந்தபிறகு தகப்பனுடைய சொந்தப்பிள்ளைகளான தன் பின்னோர்களின்பேரில் வைப்பாட்டி பிள்ளையானவன் பாகத்துக்குத் தொடரலாம். 12 மத. 401; 17 இ. அ. 128; 18 கல. 151.

**296.** தகப்பனுடைய சொந்தப்பிள்ளைகளுடன் மட்டும் வைப்பாட்டி பிள்ளை பங்காளியாக இருக்கிறானேயல்லாது, தகப்பனுடைய தகப்பன், தகப்பனுடைய சகோதரர், அச்சகோதரர்களின் பிள்ளை, முதலான மற்ற தாயாதிகளோடு அவன் பங்காளியாகமாட்டான். ஆனதால் வைப்பாட்டி பிள்ளையின் தகப்பன் அவிபக்த குடும்ப நிலைமையிலேயே இறந்துபோயிருந்தால் வைப்பாட்டி பிள்ளைக்கு குடும்ப சொத்தில் யாதொரு பாகமும் கிடைக்கமாட்டாது. இறந்துபோன அந்தத்தகப்பனுக்கு சொந்தப்பிள்ளை இருந்தாலும் அச்சொந்தப்பிள்ளையே பாகத்தில் பிரதிநிதியாக நின்று தன் தகப்பன் பங்கு முழுவதையும் அடைவானேயன்றி வைப்பாட்டி பிள்ளைக்கு யாதொரு பாகமும் கிடைக்கமாட்டாது. ஜீவனாம்சம் மட்டுமே அவனுக்குக் கிடைப்பதாகும். 7 மத. 407; 8 மத. 557; 10 மத. 334; 21 அல. 99, 25 மத. 429.

**297.** தகப்பனுக்கு ஏதேனும் தனியான சொத்து இருந்தால் அதில்மட்டும் வைப்பாட்டி பிள்ளை சொந்தப்பிள்ளையோடு பாகபாத்தியஸ்தனாக ஏற்படுகிறான் 27 மத. 32; 17 இ. அ. 128-18 கல. 151; 25 மத. 429.

**298,** ஒரு ஹிந்து புருஷனை வைத்துக்கொண்டிருந்த வைப்பாட்டியானவள் ஹிந்து மதத்தைச்சேர்ந்த ஸதிரியாகவே இருந்தால்மட்டும் அவளிடமாகப் பிறந்த பிள்ளைகளுக்குஅந்த தகப்பனுடையசொத்தில் பாத்தியம் ஏற்படும், ஹிந்துவல்லாத மகம்மதிய கிரிஸ்துவ முதலான அன்னிய மதத்தைச் சேர்ந்த ஒரு

ளைப்பாட்டியிடமாகப் பிறந்த பிள்ளைக்கு ஹிந்து தகப்பனுடை
யசொத்தில் பாக பாத்தியமாவது ஜீவனாம்ச பாத்தியமாவது ஏற்
படமாட்டாது. 27 மது. 13.

**299.** ஸ்வீகாரப் பிள்ளை.—ஸ்வீகாரமெடுத்துக் கொண்டவ
னுக்கு ஸ்வீகாரத்துக்குப் பிறகு சொந்தப்பிள்ளை பிறந்துவிட்
டால் அத்தகப்பனுடைய சொத்தில் பின்பிறந்த சொந்தப்பிள்ளை
நான்கு பங்கையும் ஸ்வீகாரப்பிள்ளை ஒரு பங்கையும் அடைய
வேண்டும். அநேக சொந்தப்பிள்ளைகள் பிறந்தாலும் அவர்க
ளில் ஒவ்வொருவனுக்கு முள்ளதில் நாலிலொரு பங்கையே
ஸ்வீகாரன் அடையவேண்டும்.

**300.** பிரஷ்டன்.—மதப்பிரஷ்டனாயாவது ஜாதிப்பிரஷ்ட
னாயாவதுபோன ஒருவன் தாய பாத்தியத்திலிருந்தும் பாக பாத்
தியத்திலிருந்தும் விலக்கப்பட்டவனாகிறானென்று ஹிந்து தர்ம
சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் அவ்வித
காரணங்களால் அவன் அப்பாத்தியங்களிலிருந்தும் விலக்கப்பட
மாட்டானென்று நமது இந்தியா கவர்னமெண்டார் 1850 வரு
ஷத்திய 21-வது ஆக்டில் விதித்திருக்கிறார்கள். ஆகையால்
அவ்வித பிரஷ்டனுக்கும் அவனுடைய சந்ததியாருக்கும் குடும்
பசொத்திலிருந்து சரியான பாகம் கொடுக்கப்படவேண்டும்

**301.** தேசாந்திரம்போன பாகஸ்தன்.—யாராவது ஒரு பாக
ஸ்தன் தேசாந்திரம் போயிருந்தால் அவன் திரும்பிவரும் வரை
யில் மற்றவர்கள் பாகம் செய்துகொள்ளக்கூடாதென்பதில்லை.
தேசாந்திரம் போயிருக்கிறவனுடைய பங்கை பிரத்தியேகமாய்
ஏற்படுத்தி வைத்துவிட்டு மற்றதை கிரமப்படி அவர்கள் பாகித்
துக்கொள்ளலாம். தேசாந்திரம் போயிருக்கிறவனுக்கு பிள்ளை
முதலிய சந்ததியார்களிருந்தால் அச்சந்ததியார்களே அப்ப
ங்கை யடைவார்கள். சந்ததியில்லாவிடில் அவனுக்காக ஏற்படு
த்திவைக்கப்பட்டிருக்கும் பாக சொத்தானது ஒரு மைனரு
டைய சொத்தைப்போல பாதுகாக்கப்பட்டு வந்து அவன் திரு
ம்பி வந்த பிறகு அவனிடம் ஒப்புவிக்கப்படவேண்டும். அவன

தேசாந்திரத்திலேயே இறநதுபோக அவனுடைய சந்ததியா திருமபிவந்து கேட்டாலும் அப்பங்கு சொத்து அவாகளுககுக கொடுக்கப்படவேண்டும. தேசாநதிடம போனவனுடைய ஆறு வது தலைமுறை வரையிலுள்ள சநததியார்களும் அப்பஙகை அடையலாமென்று தாமசாஸதிரங்களில் சொலலப்பட்டிருக்கிறது. ஆனல் 1877 வருஷததிய 15-வது ஆகடடாகிய காலாவதிச சட்டத்தினல் மேற்சொன்ன சாஸதிர விதியானது ரத்தாயிருக்கிறது. பாகத்திலிருநது நீக்கிவிடப்பட்ட சங்கதி தெரிநதது முதல் பனிரெண்டு வருஷஙகளுக்குள்ளாக அப்பங்கு சொத்தையடைய பாகஸதன் தாவா கொண்டுவரவேண்டுமென்று ஷை சட்டத்தில் விதிககப்பட்டிருக்கிறது.

302. யாதாயினும் ஒரு பாகஸதனுக்கு மற்றவாகள் பங்கு கொடாமல பூரா குடும்பசொத்தையும தங்களுககுள்ளேயே பாகித்துக்கொணடுவிட்டாலும், பாகத்திலிருநது விலக்கபபட்டவன அரசங்கதி தனககுத் தெரியவந்தது முதல பனிரெண்டு வருஷஙகளுககுள்ளாக பாக வியாச்சியம கொணடுவரலாம.

## II. பாகத்துக்குத் தகுதியற்றவர்கள்.

303. தாய பாத்தியததிலிருநது விலக்கப்பட்டவாகளாக இருககிற ஆணும பெண்ணுமலலாத அலிகள், பிறவிககுருடா, பிறவிசசெவிடா, பிறவி முதற்கொண்டே கைகால இல்லாமலிருக்கிற மொண்டி மொட்ட சபபாணிகள, புததியேயிலலாத ஜடன, புததி சுவாதீனமில்லாத பைததியககாரன முதலானவாகள பாகத்திலிருந்தும் விலக்கப்பட்டவாகளாக இருக்கிறாகள. (387 வது பிரிவையும பார்கக). அவாகளுக்கு விதவைகளொபபடிதம ஜீவனும்சம மட்டுமே கிடைப்பதாகும. 8 கல். 149.

304. ஆனல் பாகத்துக்குத் தகுதியற்ற மேறசொன்னவாகளுக்கு யாதொரு குற்றங் குறையுமில்லாத சரியான ஆண் சநததியிருந்தால் அச்சந்ததியான் பாகத்துக்கு உரியவனுக இருக்கிறான். பாகத்திலிருந்து விலக்கப்பட்டிருக்கிறவன் அபபாகம சம்பந்தப்பட்டமட்டில் இறந்துபோனவனெப்பந்தம் பாவிககப

படுவான்; அவனுடைய அசந்ததியானே பாகத்தில் அவனுடைய பிரதி நிதியாக நின்று அவன் பங்கையடைவான். ஆனால் அச்சந்ததியான் பங்கு பிரித்துக்கொள்ளும் மற்ற பங்காளிகளுக்கு மூன்று தலைமுறைக்குட்பட்ட சபிண்டனாக இருக்கவேண்டும். 9 மது. 64.

**305.** மேற்சொல்லிய குற்றங் குறையுள்ளவனை விலக்கி மற்றவர்கள் குடும்பசொத்தை பாகித்துக்கொண்ட பிறகு அவன் சொஸ்தமான ஸ்திதியை அடைந்தாலும், அல்லது அவனுக்கு சரியான ஆண் சந்ததி உண்டானாலும், அவனுடைய பங்கை அவனுக்காவது அவனுடைய சந்ததியாருக்காவது கொடுத்துவிட வேண்டியதாக ஏற்படும் என்று மதராஸ் ஹைகோர்ட்டார் அபிப்பிராயப்படுகிறார்கள்.

**306.** பாகம் பிரித்துக்கொண்ட பிறகு ஒரு பாகஸ்தனுக்கு பைத்தியம் குஷ்டரோகம் முதலிய வியாதிகள் நேரிட்டாலும் ஏற்கனவே கிடைத்த சொத்து அவனைவிட்டு விலகிப்போகமாட்டாது.

**307.** சன்னியாசி.— ஸம்ஸார வாழ்க்கையையும் உலகப் பற்றையும் முற்றிலும் ஒழித்த சன்னியாசிக்கும் குடும்ப சொத்தில் பாகம் கிடைக்கமாட்டாது. ஆனால் பக்திமார்க்கத்திலிருந்துகொண்டு குடும்ப வாழ்க்கையில் அதிகமான கவனம் செலுத்தாமலிருப்பவன் சன்னியாசியாய்விட மாட்டானகையால் அப்படிப்பட்டவனை பாகத்திலிருந்து விலக்கக்கூடாது. குடும்பம் சம்பந்தப்பட்ட வரையில் சன்னியாசியாய்ப்போனவன் இறந்துபோனவனெப்பந்தமே பாவிக்கப்படுவான். ஆனதால் அவனுக்குள்ள பங்கு சொத்தானது அவனுடைய பிரதிநிதிகளான பிள்ளை முதலிய சந்ததியாரைச் சேரும்.

**308.** ஸ்திரீகள்:— குடும்பம் அவிபக்த நிலைமையிலிருக்கும்போது ஆண் சந்ததியின்றி இறந்துபோகும் பாகஸ்தனுடைய பங்கு பாத்தியமானது அவனிறந்ததும் மற்ற பாகஸ்தர்களை ஸர்வைவர்ஷிப் என்னும் பாத்தியப்படி யடைந்து 'விடு[illegible]

படியால், அப்பாகஸ்தனுடைய விதவைக்கு பாகத்தில் பங்கொரு
பங்கும் கிடைக்கமாட்டாது. ஜீவனாம்சத்துக்குமட்டுமே அவ
ள் பாத்தியஸ்தியாக இருக்கிறாள். அவளுக்கு பெண்கள் இருந்
தால் அவர்களுடைய சமாரக்ஷணைகளுக்கும் விவாகாதிச் செலவு
களுக்கும் பாககாலத்தில் குடும்ப சொத்திலிருந்து தக்க ஏற்பாடு
செய்யப்படவேண்டும்.

**309.** ஆண் சந்ததியை வைத்து விட்டு இறந்துபோன
பாகஸ்தனுடைய பங்கு பாத்தியமானது அவனிட சந்ததியாரை
யடைகிறபடியால் அவனுடைய விதவை அப்பங்கிலிருந்தே ஜீவ
னாம்சத்தைப் பெறத் தக்கினவளாக இருக்கிறாள். பிள்ளைகள்
பங்கிட்டுக் கொள்ளுவது தகப்பனுடைய சுயார்ஜித சொத்தாக
வே இருந்தாலும் தாயாருக்கு ஜீவனாம்சம் மட்டுமே கிடைக்கும்.

**310.** ஆகையால் குடும்ப சொத்தில் ஸ்திரீகளுக்கு எவ்வி
தத்திலும் பாகம் கிடைக்கமாட்டாது. குடும்ப வீட்டில் குடியி
ருக்கவும் சொத்திலிருந்து கிரமமான ஜீவனாம்சம் பெறவுந்தான்
அவர்களுக்கு பாத்தியமுண்டு.

## III. பாகம் செய்துகொள்ளும் விதம்.

**311.** பாகம் செய்துகொள்ளும்போது குடும்பப் பொது
வாயிருக்கும் எல்லா ஸ்தாவர ஜங்கம சொத்துக்களையும் குடும்ப
த்துக்கு வரவேண்டிய லேவாதேவி வகையறாக்களையுமன்றி, குடு
ம்ப சொத்துக்களின்பேரிலுள்ள பொறுப்புகளையும் குடும்பத்தி
லிருந்து கொடுபடவேண்டிய பொதுக்கடன்களையும் சரியாய்க்
கணக்கிட்டுக் கொள்ளவேண்டும். குடும்பப்பொதுவான கடன்
களுக்கும் குடும்ப சொத்தின் பொறுப்பாயிருக்கிற விதவை முத
லியோர்களுடைய ஜீவனாம்சம் முதலியவற்றிற்கும் குடும்பப்
பொதுவான சொத்திலிருந்து தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்ட
பின், மீதமாயுள்ளதை பாகஸ்தர்கள் தங்கள் தங்கள் பங்கு வீத
த்துக்குத்தக்கபடி பிரித்துக்கொள்ளவேண்டும்.

அல்லது, சொத்துக்களைப் பிரித்துக்கொள்ளுவது போல வே குடும்பப் பொதுவான கடன்களையும் பொறுப்புகளையும் பாகஸ்தாகள் அவரவாகள் பங்குவீதத்துக்குத்தக்கபடி பிரித்துக் கொள்ளலாம்,

312. இறந்துபோன பாகஸ்தர்களுடைய விதவைகளின் ஜீவனுமசமும கன்னிகைகளின் சமரக்ஷணை விவாகம் சுபசோப னநிச செலவுகளும் குடுமப சொத்தில அப்பாகஸ்தனுக்கிருந்த பங்கினபேரிலுள்ள 'பொறுபபுகளாக இருக்கின்றன. ஆகை யால் அசசெலவுகளுக்காக ஏற்படுத்தப்படும ஜீவேசு மொத்தமா னது இறந்தவனுடைய பங்குககும, குடுமப அந்தஸ்தை உத்தே சித்து அச்செலவுகளின் அளவுககும் தக்கபடியாயிருக்கவேண் டிய. மேலும அப்பங்கையடைகிற பாகஸதர்களே அசசெலவுக ளுக்கு ஏறபாடு செய்யவேணடியவாகளாக இருக்கிறார்கள்.

313. யாதாயினும ஒரு பாகஸ்தனுக்கு அதிகமான குழந தைகளிருந்து அவாகளுடைய சமரக்ஷணை விவாகம் முதலான குடுமபாரத்தமான விஷயங்களுக்காக குடும்பப் பொது சொத்தி லிருநது அதிகமாகச செலவழிநதிருநதாலும் அவன் அதிகப் பறறுவழியை யடைநதிருக்கிறுனெனறுவது அவ்வதிகச் செல வுகளினளவுக்குள்ள திரவியம் மற்றவாகளுக்கும் பொதுவிலிரு நது கொடுக்கப்படவேண்டுமென்றுவது உள்ள ஆக்ஷேபனைகளை பாககாலத்தில் யாரும செய்யக்கூடாது. அவிபக்தமாயிருந்த போது குடுமபார்த்தமாய் எவன்பொருட்டு எவ்வளவு செலவழி நதிருநதாலும் அவைகளெல்லாவற்றையும் குடும்பப்பொதுவான தாகவே பாவித்து, அவ்வாறு ஏற்கனவே செலவழிந்துபோனது போக பாககாலத்தில் மீதமாய் நிற்கும் குடும்ப சொத்தையே பாகஸ்தர்கள் கிரமப்படி பிரித்துக்கொள்ளவேண்டும். 3 மது, ஹை. கோ. தீ. 177; 1 பம். 521; 5 பம். 589; 28 பம். 144,

314. ஆனல் குடும்பார்த்தமில்லாமல் ஒரு பாகஸ்தனு டைய சொந்த விஷயமாய் அதிகம் செலவழிந்திருந்தாலும், அல்லது ஒருவன் சொந்தமாய் பட்ட கடன்கள் குடும்ப சொத்

திலிருந்து நீக்கப்பட்டிருந்தாலும், அவைகள் அவனுடைய சொந்தப்பற்றுவழியாகவே தாக்கல் செய்யப்படும். அவ்வாறு ஒரு பாகஸ்தன் எவ்வளவு அதிகமாயப் பற்றியிருக்கிறானோ அத னளவுக்கு மற்றவர்களுக்கும குடும்பப்பொது சொத்திலிருந்து முதலில் கொடுக்கப்படவேண்டும.

**315.** ஹிந்துவானவன் தன் பிள்ளைகளுக்கு விவாகம் செ ய்ய சாஸ்திரங்களினபடி கடமைப்பட்டவனல்ல. பிராமமணர் முதலிய உயர்நதஜாதியாாகளிலும உபநயன ஸம்ஸகாரமே பிரதா னமன்றி விவாகம் பிரதானமல்ல. ஆகையால் ஒரு பிள்ளையினு டைய விவாகத்தின் பொருட்டு குடும்ப சொத்திலிருந்து செய்ய ப்பட்டிருக்கும செலவுகளுக்கும கடன்களுக்கும் மற்ற பிள்ளை கள் கட்டுப்படவேண்டிய அவசியமில்லை. 4 மது. 1; 27 மது. 206.

**316.** குடும்பப்பொதுவான சில சொத்துக்கள் பாகத்து க்கு வராமலிருக்கிறதாக பாகத்துக்குப்பின் தெரியவநதால், அவைகளும் பின்பு பாகிக்கப்படும். பாக காலத்திலறியக்கூடா மலிருந்த எந்தக் காரணத்தினாலாவது பங்குகள் ஏதவிநதியாசமா கஏற்பட்டிருந்தாலும் பங்காளிகள் சொத்துக்களைச் சரியாய் மறு படியும் பாகித்துக்கொள்ளலாம். மோசடியாய்ச செய்யப்பட்ட பாகமானது ஒருபோதும செல்லுபடியுள்ளதாக மாட்டாது. 10 பம். ஹை. கோ. ரி. 444.

**317.** ஒரு பாகஸதன் குடும்பத்திலிருந்து விலகியிருப் பதினாலேயாவது அல்லது விலக்கப்பட்டிருப்பதினாலேயாவது பிரிவினையடைநதவனாகமாட்டான். பாகம் என்ற அநதஸ்து ஏற்பட்ட பிற்பாடுதான் ஒவ்வொருவரும பிரிநததாக பாவிக்கப படுவார்கள். அவ்வித பாகம் ஏற்படுவதற்கு எல்லாப் பங்காளி களுடைய சம்மதமும் வேண்டியிருக்கிறது. 5 கல். 474.

**318.** ஆனால் தகப்பனானவன் பிள்ளைகளுடைய சம்மதியி ல்லாமலே கிரமமானபடி பாகம் பிரித்துவைக்கலாம். தகப்ப னால் செய்யப்படும் அவ்வித ஏற்பாட்டுக்கு பிள்ளைகள் கட்டுப்ப ட்டவர்களா[illegible] தவிர அது முதல் அவர்களுக்குள் பாகம் பிரி ந்ததாகவும் ஏற்[illegible] 2 மது. 317.

319. வீட்டிலுள்ள தட்டுமுட்டு சாமான்களைத் தவிர விலைபெறக்கூடிய யாதொரு சொத்துக்களில்லாமலிருந்தாலும் குடும்பஸ்தர்கள் தங்களுடைய அவிபக்த நிலைமையை மாற்றிக் கொள்ளும்பொருட்டு ஒரு உடன்படிக்கை செய்துகொண்டு அதன் மூலமாய் பாகம் பிரிந்தவர்களாக ஏற்படுத்திக்கொள்ளலாம். அதாவது பாகித்துக்கொள்வதற்கு சொத்து யாதொன்றுமில்லாத விடத்தும் பிரிவினை என்ற அந்தஸ்தையடைய வேண்டுமென்று எண்ணி அதற்குள்ள ஏற்பாடுடன் தனித்தனியாய் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் சுபாவமாய் ஏற்படுவருகிற அவிபக்த நிலைமை மாறினதாக மாட்டாது. 13 மூ. இ. அ. 113.

320. ஒருதரம் பாகம் ஏற்படும்போது அதில் எல்லா பாகஸ்தர்களும் பிரியவேண்டுமென்ற அவசியமில்லை. பிரிய இஷ்டமுள்ளவர்கள் மட்டும் தங்கள் 'பங்குக்குள்ளதைப் பிரிதெடுத்துக்கொண்டுபோக, மற்றவர்கள் ஏகோபித்தேயிருக்கலாம்; அல்லது பிரிய இஷ்டப்படுகிற பாகஸ்தன் தன்பங்குக்கென்று ஏதேனும் கொஞ்சசொத்தை வாங்கிக்கொண்டு குடும்பத்திலிருந்து விலகியும் விடலாம். 9 கல். 817.

321. மேலும் சௌகரியத்தை யனுசரித்து பங்காளிகள் சில சொத்துக்களை மட்டும் பாகித்துக்கொண்டு மற்றவைகளைப் பொதுவி லனுபவித்தும் வரலாம். 2 மது. 326.

322. ஆனால் பாகத்தைக் குறித்து கோர்ட்டில் வழக்குச் செய்வதாயிருந்தால் எல்லா சொத்துக்களையும் சேர்த்தியே தாவா கொண்டுவரப்படவேண்டும். 7 பம். 272; 23 மது. 608; 13 மது. 275; 24 பம். 128; 12 கல். 566; 14 கல். 122.

323. பாகத்துக்காக தாவாசெய்யும் சுதந்திரம் பாகஸ்தர்களுக்கன்றி அவர்களுடைய பங்கு பாத்தியத்தைக் கிரயம்பெறுகிற அன்னியர்களுக்குங்கூட உண்டு. அப்படிப்பட்ட [illegible] யன் தான் கிரயம்பெற்ற பாகசொத்தின் [illegible] பெறுவதற்காக வியாச்சியம் செய்வதாயிருந்தால் [illegible] சொத்

துக்களின் பேரிலுந்தான் பாகவியாச்சியம் செய்யவேண்டும். 13 மத. 27; 20 மத, 243,

324. அவிபக்த குடும்பஸ்தாகள் தங்களுக்குள் பாகம் செய்து கொள்ளக்கூடாதென்று ஒப்பந்தம் செய்துகொண்டு அந்தப்படி நெடுகிலும ஏகோபித்திருக்கலாம், ஆனாலும் அவ்வித ஒப்பந்தமானது அவர்களுடைய சந்ததியாரையாவது பங்குசொத்துக்களை கிரையம பெறுகிற அன்னியர்களையாவது கட்டுப்படுத்த மாட்டாது. கல. 106.

325, பாகஸ்தாகள் பாகம செய்து கொள்ளாமல் சொத்துக்களைப பொதுவிலேயே அனுபவித்து வரவேண்டும் என்று பிறர் ஏற்படுத்தும் நிபந்தனைகளும் பாகஸ்தர்களைக் கட்டுப்படுத்த மாட்டாது.

326. பாகத்தைக குறித்து எழுததுமூலமான சாசனம ஏறபட வேண்டுமென்ற அவசியம இல்லை. ஆனாலும் இக்காலத்தில் பாகதஸ்தாவேசு ஒன்று ஏற்படுத்தி வைததுக்கொளளுவதே உசிதமானதாகும், அப்படிச் செய்தால் பின்னிட்டு வழக்குகளுக்கு இடமிராது. பாகத்தைக்குறித்து ஏறபடும் தஸ்தாவேசானது கட்டாயமாய் ரிஜிஸடர் செய்யப்படவும வேண்டும். ரிஜிஸ்டர் ஆகாத ஒரு பாகதஸ்தாவேசானது கோர்ட்டுகளில சாக்ஷியமாக ஏற்றுக்கொளளப்பட மாட்டாது.

## IV. பாகத்தின் பலாபலன்கள்.

327. கிரமமானபடி பாகம் பிரிந்த பிற்பாடு அவிபக்த குடும்ப நிலைமை மாறிவிடுகிறது. அவரவர்களுடைய பாகத்துக்கு ஏற்பட்ட சொத்துக்களில் மற்றவர்களுக்கு யாதொரு பாத்தியமுமில்லை. பாகத்துக்குப்பிற்பாடு ஒருவன் ஆண் சந்ததியின்றி இறந்து போனாலும் அவனுடைய பங்கு சொத்துக்கள் அவனிட பெண்சாதி, பெண், தௌஹித்திரன் ஆகிய இவர்களைச் சேருமேயல்லாது இவர்களிருக்கும்போது விபக்தமாய்ப்போன பங்காளிகளைச் சேரமாட்டாது.

**328.** அவிபக்தமாயிருந்தபோது எந்தப்பங்காளி எந்தச் சொத்தினபேரில சொந்தமாய்க் கடனவாங்கி யிருந்தாலும் கிரமமாய் செய்யப்பட்ட பாகத்துக்குப்பின் அவரவர்களுடைய முன கடனகளுக்கும அவரவர்களிட பஙகு சொத்துக்களே பொறுப பாகிறதும. பாகத்துக்குமுன் ஒரு பாகஸதன் வாங்கின கடனுக்காக அவனால பந்தகபபடுத்தப்பட்டிருந்த ஒரு குடும்ப சொத்தானது பாகத்தில வேறு பாகஸதனுககுச சேர்ந்துவிட்டால், அச்சொத்து மேறசொன்ன கடனுககு பொறுப்பாக இருகக மாட்டாது. கடன் வாஙகின பாகஸதனுடைய பஙகுக்குப் பிரிந்த சொத்துக்களே அககடனகளுககுப பொறுபபாக ஏறபடும. ஆனல் இவ்வாறு ஏறபட பாகத்தில யாதொரு மோசடியு மில லாமலிருகக வேண்டும. 1 இ. அ. 106; 13 இ. அ. 110; 20 கல. 533; 24 அல. 483.

**329.** பாகம செய்துகொண்டு தனித்தனியாயப பிரிந்தவாகள இஷ்டபபட்டால மறுபடியும சேர்ந்து ஒருமித்துமிருகக லாம. ஆனல பிரியவேணடுமென்ற நோக்கமே சுபாவத்தில அதிகமாக இருக்கிறபடியால பிரிந்தவாகள் திரும்பியும சேருவது மிக்க அபூர்வம. மறுபடியும சேர்ந்தால் சேர்ந்திருககிற அபபாகஸதாகளும அவாகளுடைய சந்தியாரும முன்னிருந்த அவிபகத நிலைமையை அடைவாாகள. ஒருதரம பிரிந்தபின மறுபடியும சேர்ந்திருககும சகோதரர்களில எவனாவது ஆண சந்ததியின்றி இறந்துபோனல் அவன பஙகு சொத்தானது மறு படியும சேர்ந்திருககும பாகஸதர்களுக்கே சேரும். ஆனாலும் திரும்பியும் சேர்ந்தவன் பின்ஜோதரனுகவும சேராமலிருபபவன் சகோதரனுகவும் இருந்தால் அவாகள் இருவரும இறந்தவனுடைய சொத்தை சமமாக அடைவார்கள். 16 மதா. 440.

## V. வியாச்சிய சம்பந்தமான விஷயங்கள்.

**330.** ஒரு ஹிந்து குடும்பமானது சாதாரணமாய் [illegible]க்த நிலைமையிலிருக்கிறதாகவே பாவிக்கப்படும். [illegible] எவன் சொல்லுகிருனே அவனே அசசன்[illegible] [illegible]ப் படுத்தவேண்டும். 9 மூ. இ. அ. 66.

**331.** ஒரு பாக வியாச்சியத்தில் பாகஸ்தாகளெல்லோரு மின்றி ஜீவனாம்சபாத்தியஸ்தாகளும், குடும்பசொத்துக்களை விநியோகம் பெற்றிருக்கிற அன்னியாகளும் கக்ஷிக்காராகளாக சோக்கப்படவேண்டும்.

**332.** பாக வியாச்சியத்தில் வாதிக்கனுறி பிரதிவாதிகளா யிருக்கும் மற்ற பாகஸ்தாகளுக்கும் ஜீவனாம்சக்காராகளுக்கும் தீர்ப்பு கொடுக்கப்படும் அவாகளும் தங்கள் தங்களுக்குள்ள தீர்ப்புகளை நிறைவேற்றிக்கொள்ளலாம். 3 கல. 551; 9 கல 568.

**333.** பாக வியாச்சியத்தில் செய்யப்பட்ட தீர்ப்பானது முடிவானதாக ஏற்பட்டால்மட்டும் பாகம் ஸ்திரமானதாகும். கீழ்க்கோர்ட்டாரால் செய்யப்பட்ட தீர்ப்பானது அப்பீல் விசாரணையிலிருந்தால் பாகம் முடிவு பெற்றதாகமாட்டாது. அப்பீல் பாக்கியிலிருக்கும்போது ஒரு பாகஸ்தன் ஆண் சந்ததியின்றி இறந்துபோனால் அவன் பங்கு அவனுடைய பெண்சாதி பெண்களைச் சேராமல் மற்ற பாகஸ்தாகளையே ஸர்வைவர்ஷிப்பு பாத்தியப்படி சேர்ந்துவிடும். 6 பம். 113.

**334.** ஆனால் பாகவியாச்சியத்தில் செய்யப்பட்ட தீர்ப்பானது முடிவானதாக ஏற்பட்டுவிட்டால் தீர்ப்பின்படி சொத்துக்கள் பிரிவாகாமலிருந்தபோதிலும், பாகஸ்தாகள் பாகம் பிரிந்தவாகளாகவே ஏற்படுவாாகள். 4 கல. 434; 6 இ. அ. 177-2 மது. 83.

**335.** ஒரு குடும்பஸ்தாகள் குடியிருப்பு, சமையல் சாப்பாடு, வைதீகச் சடங்கு முதலிய விஷயங்களில் பிரிந்திருந்தபோதிலும், சொத்து விஷயத்தில் சேர்ந்திருக்கலாம். அதுபோலவே சொத்துவிஷயத்தில் பிரிந்து மற்ற விஷயங்களில் சேர்ந்திருக்கலாம். ஆகையால் குடியிருப்பு சமையல் சாப்பாடு சடங்கு முதலியன வேறுபட்டிருப்பதினாலேயே குடும்பம் பிரிவினையடைந்ததாக ஏற்பட்டுவிடமாட்டாது. 1 அல. 437; 4 மு. இ. அ. 137; 8 மூ. இ. அ. 66.

**336.** மேலும் குடும்பசொத்துக்களை பாகஸ்தர்கள் தனித் தனியாய் அனுபவித்து வருவதினாலேயே பாகம் பிரிந்ததாய்விடவுமாட்டாது. (1 இ. அ. 9; 1 அல். 437; 24 இ. அ. 118; 20 மது. 256). பாகம் பிரியவேணுமென்ற எண்ணத்துடன் பாகஸ்தர்கள் குடும்பப்பொதுவான சொத்தில் அவரவர்களுக்கு இவ்வளவு இவ்வளவு பாகம் என்று ஏற்பாடுசெய்துகொண்டால்மட்டும் குடும்பத்தில் பாகம் ஏற்பட்டதாகும். 11 மூ. இ. அ. 75.

**337.** பாகம் பிரிந்ததாக ஏற்படுவதற்கு குடியிருப்பு, சமையல் சாப்பாடு முதலியவைகளும் வேறு வேறாக இருக்கவேண்டுமென்றும், பங்கு சொத்துக்கள் தனித்தனியாக பிரிக்கப்பட்டிருக்கவேண்டுமென்றும் அவசியமில்லை. பாகம் செய்துகொள்ளவேண்டுமென்ற எண்ணங்கொண்டு பாகஸ்தர்கள் அவரவர்கள் பங்குக்கு இவ்வளவிவ்வளவு சொத்து என்ற ஓர் ஏற்பாடு செய்துகொண்டுவிட்டால் அதுவே பாகம் பிரிந்ததுபோலாகும். அவ்வாறு பாகம் செய்துகொண்ட பிறகு சொத்துக்களைத் துண்டு துண்டாகப் பிரித்துக்கொள்ளாமல் அவரவருடைய பங்கு விகிதாசாரத்துள்ள வரும்படிகளைமட்டும் பங்கிட்டு அனுபவித்தும் வரலாம். 11 மூ. இ. அ. 75; 13 மூ. இ. அ. 113; 3 மது. ஹை. கோ. ரி. 279; 1 இ. அ. 55; 5 அல. 512; பம. 157; 13 பம. 25; 12 கல. 96.

**338.** ஒரு குடும்பமானது அவிபக்தமா அல்லது விபக்தமா என்ற வழக்கு உண்டானால், பாகஸ்தர்கள் தனித்தனியாய்க் குடியிருந்துகொண்டு சமையல் சாப்பாடு முதலியவற்றை வேறு வேறாக வைத்துக்கொண்டிருத்தலும், சிராத்தம் முதலிய வைதீகச்சடங்குகளைப் பாகஸ்தர்கள் தனித்தனியாகச் செய்துவருதலும், பாகஸ்தர்கள் ஒருவரிடமிருந்து மற்றொருவர் கடன் வகைரா வாங்கிக்கொள்ளுதலும், சொத்துக்களை ஒருவருக்கொருவர் அடமானம் கிரயம் முதலிய விநியோகங்கள் செய்துகொள்ளுதலும், சர்க்கார் கந்தாயங்களை பாகஸ்தர்கள் அவரவர் பங்கு வீதத்துக்குத் தக்கபடி தனித்தனியாய்ச் செலுத்திவருதலும்

ஆகிய இப்படிப்பட்ட நடவடிக்கைகள் குடும்பம் பாகமானதென்பதைக்காட்டத்தக்க சாக்ஷியங்களாகும்.

## 9-வது அத்தியாயம்.

## ஜீவனாம்சம்.

339. குடும்பம் அவிபக்த நிலைமையிலிருக்கும்போது குடும்பத்தலைவனானவன் குடும்பத்தைச் சேர்ந்த ஆண் பெண் முதலிய எல்லோரையும் குடும்பசொத்திலிருந்து சம்ரக்ஷிக்கவும், அப்போதைப்போது குடும்பத்தில் நடக்கவேண்டிய விவாகாதி சுபசோபனங்களையும் பல வைதீகசசடங்குகளையும் நடத்திவரவும் கடமைப்பட்டவனாக இருக்கிறான்.

340 ஆண் சந்ததியின்றி அவிபக்த நிலைமையிலேயே இறந்துபோகும் பாகஸ்தனுடைய பங்கு பாத்தியமானது அவனுக்குப்பின் மற்ற பங்காளிகளை ஸர்வைவர் ஷிப் என்னும் பாத்தியப்படி யடைகிறபடியால், அவ்விதம் அடைகிறவர்கள் இறந்தவனுடைய விதவையையும் விவாகமாகாத பெண்களையும் சம்ரக்ஷணை செய்யக்கடமைப்பட்டவர்களாக இருக்கிறார்கள். 17 பம். 198. தவிர அப்பெண்களுடைய விவாகாதி சுபசோபனங்கள் யாவும் அப்பங்காளிகளால் நடத்தப்படவேண்டும். 23, மது. 512; கல்யாணசெலவன்றி கிரகப்பிரவேசம் சாந்திமுகூர்த்தம் முதலானவைகளும் குடும்பசொத்திலிருந்து செய்யப்படவேண்டும், (26 மது. 497) விவாகம் அல்லது சாந்திமுகூர்த்தத்துக்குப்பிறகு பெண்களுடைய சம்ரக்ஷணை அவர்களுடைய புருஷனையும் புருஷன் குடும்பத்தாரையுமே சேர்ந்ததாய் விடுகிறது. 28 கல. 279; 23 பம். 291.

341. சகோதரர்கள் செய்துகொள்ளும் பாகத்தில் தாயாரானவள் ஜீவனாம்சத்தையும், சகோதரிகள் விவாகாதிகளையும் புருஷன்வீட்டுக்குப் போகும்காலம் வரையில் சம்ரக்ஷணையையும் அடைய பாத்தியமுள்ளவர்களாக இருக்கிறார்கள்.

**342.** தாய பாத்தியத்திலிருந்து விலக்கப்பட்டிருக்கிறவர்களான நபுமஸகா, 'பிறவிக்குருடர், பிறவிச்செவிடா, ஊமை, கைகால இல்லாத மொண்டி முடம் சப்பாணிகள், பைத்தியக்காரா புத்தியேயிலலாத ஜடன், தீராத கொடிய குஷ்டரோகி ஆகிய இப்படிப்பட்டவாகளும இவாகளுடைய பெண்சாதிகளும இவர்களுக்கு தத்துபபிள்ளை இருநதால அவனும குடும்பசொத்திலிருந்து ஜீவனாமசத்தையடைநது வர பாததியமுள்ளவாகளாக இருககிறாகள். 8 மது. 325.

**343.** பாகாரகமிலலாத ஜமீன முதலிய சொத்துககள குடுமபத்தில மூததவனாயிருககிற வனுககே சொநதமாகவிருநதாலும, அவனுடைய தாயாதிகளான மறற குடுமபஸதாகளும அவாகளின பெண்டு பிள்ளைகளும அச்சொததிலிருநது ஜீவனாம சம பெறததககவாகளாக இருககிறாகள. 7 மு. இ. அ. 18; 9 மு. இ. அ. 66; 12 மு. இ. 203.

**344.** ஒருவன பிதூரார்ஜிதமான சொததுககளையின்றி சுயார்ஜிதமான சொததுககளைமட்டும உடையவனாக இருநதாலும, அவன் தன பெண்சாதியையும, வயதுவராத மைனர் மக்களையும, வயது சென்ற தாய தநதையாகளையும சமரக்ஷணை செய்யககடமைப்பட்டவனாக இருககிறான. மேறசொனனவாகளை சமரக்ஷணை செய்யவேண்டுவது சொத்தைப பொறுத்ததாயிராமல் ஒவ்வொருவருடைய யவும சொநதக்கடமையாக இருக்கிறது. அவாகளை சமரக்ஷணை செய்யாமல அநாதரவாய விட்டுவிடுவது பெருதத பாவமென்றும, அவாகளைச சமரக்ஷிப்பதே முதறகடமையென்றும தாம சாஸதிரங்களில சொல்லபபட்டிருக்கிறது. ஆகையால அவாகளை எவனாவது காப்பாற்றாமல் அநாதரவு செய்தால, அவனமேபில அவாகள் தாவாசெய்து தனியான ஜீவனாம்சம பெறலாம. 2 பம. 597; 8 மது. 361; 11 மது. 99; 23 பும. 608

**345.** தாயாரென்று முன்பிரிவில் சொல்லப்பட்டது இப்ற்ற தாயைமட்டும குறிக்கிறதேயன்றி, தகப்பனுடைய வேறு

பெண்சாதியான தாயின் சக்களத்தியைக் குறிக்கிறதில்லை. பிது ரார்ஜிதமான சொத்தையடைந்திருந்தால் மட்டுமே ஒருவன் தன தாயின் சக்களத்தியை (ஸபத்னீகமாதாவை) ஸம்ரக்ஷிக்ககட மைப்பட்டவனாகிறான். 9 பம. 279; 13 கல். 336.

**346.** ஒருவன் தன் பெண்சாதியிடமாகப் பிறந்த மக்களை யன்றி வைப்பாட்டியிடமாகப் பிறந்த மக்களையும் தக்க வயதை யடையும் வரையில் சம்ரக்ஷிக்கக்கடமைப்பட்டவனாக இருகின்றான். ஆனால் அப்படிப்பட்ட பிள்ளை ஹிந்து மதஸ்தனாயும் இருக்கவேண்டும். கிரஸதுவ முதலான அன்னிய மதஸ்திரீக குப் பிறந்தபிள்ளை ஹிந்துலாப்படி ஜீவனாம்ச பாத்தியஸதனாக மாட்டான். 27 மது. 13.

**347.** ஒரு வைப்பாட்டியானவள் வெகுகாலமாகவும் தொ டார்ச்சியாகவும் ஒருவனால் வைக்கப்பட்டிருநதவளாக இருநதா லும் வைத்துக்கொண்டிருந்த புருஷன் அவளை சம்ரக்ஷணை செய யவேண்டுமென்ற கட்டாயமில்லை. (8 மது. ஹை. கோ. ரி. 144; 28 மது. 282). ஆனாலும ஒருவன் ஒரு ஸதிரீயை வைப்பாட்டி யாக தொடர்ச்சியாயும வெகுகாலமாயும் வைத்துக்கொண்டிரு ந்து பிறகு இறநதுபோயவிட்டால், அவனுடைய சொத்துக்களை யடைகிறவர்கள் அவ்வைப்பாட்டியைச் சம்ரக்ஷிக்கவேண்டியவாக ளாகிறார்கள். 26 பம். 163; 12 பம. 26.

**348.** பெண்சாதியைப் புருஷன் காப்பாற்றவேண்டிய கட மைகளைப்பற்றியும் பெண்சாதியுடைய கடமைகளைப் பற்றியும 2-வது அத்தியாயத்தில் விரிவாய் கூறப்பட்டிருக்கிறது. பெண் சாதியானவள் புருஷன்பேரில் தொடரும் ஜீவனாம்ச வியாச்சியத் தில், தனியான ஜீவனாம்சம் பெறும் பாத்தியதையை ஸ்தாபிப்பது பெண்சாதியினுடைய கடமையாக இருக்கிறது. 2 பம. 634.

**349.** பெண்சாதி பிள்ளைகளைக் காப்பாற்றுவதே ஒருவனு டைய முதற்கடமையாக இருக்கிறபடியால், அவ்விதம் செய்யா திருப்பவனை அவ்வாறு செய்யும்படி கட்டாயப்படுத்த நமது [illegible]பென்டார் சிவில் கோர்ட்டாருக்கன்றி கிரிமினல் கோர்ட [illegible]ம் அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறார்கள்.

ஒருவன் சரியான ஜீவேசு உள்ளவனாக இருந்தும் பெண்சாதியையாவது, பெண்சாதியல்லாது வைப்பாட்டிபிடமாகப் பிறந்த மைனர் மக்களையாவது சம்ரக்ஷிக்காமல் அனாதரவு செய்தால் அவன்பேரில் அவர்கள் 1-வது வகுப்பு மாஜிஸ்திரேட்டு கோர்ட்டில் ஜீவனும்சத்துக்காக பிராதுசெய்து, அவனுடைய சொத்துக்கும், குடும்ப அந்தஸ்தையனுசரித்து அவர்களுக்கு வேண்டிய செலவுக்கும் தக்கபடியாய் மாதம் ஒன்றுக்கு 50 ரூபாய் வரையில் தீர்ப்புபெற்றுக்கொள்ளலாம் என்று கிரிமினல் புரொசீஜர சட்டம் 488-வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கிறது.

350. தக்க வயதை யடைந்திருக்கிற பிள்ளைகளை தகப்பனானவன தன் சுயார்ஜித சொத்தைககொண்டு காப்பாற்ற சட்டபபடி கடமைப்பட்டவனல்ல. மேலும் விவாகம செய்து கொடுத்துவிட்ட பெண்ணையும் தகப்பன் சம்ரக்ஷிக்க வேண்டிய அவசியமில்லை. அவளுடைய சமரக்ஷணை அவளிட புருஷனையும் புருஷன குடும்பததாரையுமே சேர்நததாய்விடுகிறது.

351. ஒவ்வொருவனும் முன்சொல்லியவாறு தன் பெண்சாதி பிள்ளைகளை காப்பாற்றக் கடமைப்படடவனாக இருக்கிறபடியால, அவாகளுடைய அன்னவஸ்திராதிகளுககு யாதொன்றும வைககாமல் சொதது முழுவதையும் தானம உயில் முதலியவற்றால பிறருக்கு வினியோகம் செய்துவிடக்கூடாது. அப்படிச செய்தாலும அவ்விநியோகங்கள் செல்லமாட்டாதென்று மதுராஸ் ஹைகோர்ட்டார் 1860-வருஷத்தில் தீர்மானித்தார்கள். ஆனாலும அவ்விநியோகம் முற்றிலும தள்ளுபடியாக மாட்டாதென்றும், பெண்சாதி பிள்ளைகளின் ஜீவனும்சத்துக்கு எவ்வளவு வேண்டியிருக்கிறதோ அம்மட்டில் மாத்திரம அவ்விநியோகம் செல்லுபடியாகாதென்றும், இப்பால ஷை கோரட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். 12 மதா. 267.

352. பெண்சாதி பிள்ளைகளுடைய காலக்ஷேபத்துக்கு யாதொன்றும வைக்காமல் எல்லா சொத்துக்களையும் ஒருவன்

கிரயம் தானம் உயில் முதலியன செய்துவிடக்கூடாதென்றும், அப்படிச் செய்துவிட்டாலும் சொத்தை வினியோகம்பெற்ற அன்னியனிடமிருந்து அப்பெண்சாதிபிள்ளைகள் ஜீவனாம்சம் பெறலாமென்றும், மற்ற ஹைகோர்ட்டாராலும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 2 அல. 315; 5 பம. 991; 18 பம. 452; 10 கல். 238.

353. பிதுரார்ஜித சொத்தை உடைத்தாயிராத ஒருவன் வயசுவந்த தன் புத்திராகளையாவது அப்புத்திராகளின் பெண்டு பிள்ளைகளையாவது காப்பாற்ற சட்டப்படி கடமைப்பட்டவனல்லவாகையால், பிதுரார்ஜித சொத்தில்லாத மாமனார்பேரில் மருமகள் ஜீவனாம்சத்துக்குத் தொடர முடியாது. 17 கல. 373; 1 அல. 170.

354. ஆனாலும் விதவையாயிருக்கும் ஒரு மருமகள் சுயார்ஜித சொத்தை உடைத்தாயிருந்த தன் மாமனார் இறந்தபிறகு, அச்சொத்தை வாரசு பாத்தியப்படி யடைந்திருக்கிற தன் கொழுனன் முதலிய தாயாதிகளிடமிருந்து ஜீவனாம்சத்தைப்பெறலாம். 11 அல். 194; 22 மத. 305; 22 கல. 410; 23 பம. 608.

355. யாதொரு ஆதாரவுமின்றி நிறகதியாய் இருக்கும் பிள்ளைகளின் விதவைகளையும் சகோதிராகளின் விதவைகளையும், ஒருவன் தன சுயார்ஜித சொத்தைக்கொண்டும் சம்ரக்ஷிக்கவேண்டுமென்று வெகு வருஷங்களுக்குமுன் பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருந்தார்கள். ஆனால் அத்தீர்ப்பு சட்டப்படி சரியானதல்லவென்று ஷை கோர்ட்டார் பின்னிட்டு ஆலோசனை செய்து அதைமாற்றி, பிதுரார்ஜிதமான சொத்திருந்தாலொழிய அப்படிப்பட்ட விதவைகளை ஒருவன் சம்ரக்ஷிக்க சட்டப்படி கடமைப்பட்டவனல்லவென்றே மற்ற ஹைகோர்ட்டுகளுடைய தீர்மானங்களைப்போலவே தீர்மானித்திருக்கிறார்கள். 2 பம. 573; 7 பம். 127; 8 பம். 15; 11 பம். 199.

356. முன்னோர்களால் செய்யப்பட்ட அடமானம் போக்கியம் முதலான வில்லங்கங்களுக்கு உட்பட்டிருந்த பிதுரார்ஜித

மான சொத்தை ஒருவன் தன் சுயார்ஜிதத்தைக்கொண்டு மீட்டுக் கொண்டிருந்தால் அதுவும் சட்டப்படி பிதுரார்ஜித சொத்தாகவே பாவிக்கப்படுமாகையால் அப்படிப்பட்ட சொத்தையடைந்திருக்கும் ஒரு மாமனார் தன மருமகளுக்கு அதிலிருந்தும் ஜீவனாம்சம் கொடுக்கவேண்டியவனாகிறானென்று மதுராஸ் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். 5 மது. ஹை கோ. ரி. 150

**357.** ஜீவனாம்சமானது கொடுக்கவேண்டியவன் உடைத்தாயிருக்கும் சொத்தின பரிமாணத்தையும் பெறுகிற நபரின் அந்தஸ்துக்கு தக்கபடி செலவுக்கு எவ்வளவு பிடிக்குமோ அதையும் அனுசரித்ததாக இருக்கிறது.

**358.** விதவையின ஜீவனாம்சமானது குடும்ப அந்தஸ்துக்குத்தக்கபடி அவளுடைய செலவுக்கு வேண்டியிருக்கிற அளவையும், அவளிட புருஷனுக்கு குடும்பசொத்தில எவ்வளவு பங்கு பாத்தியமிருந்ததோ அதையும அனுசரித்ததாக இருக்கிறது. 12 அல. 558; 21 அல. 232; 22 கல 410.

மேலும விதவையால செய்யப்படவேண்டிய வைதீகச சடங்குகளின செலவுகளையுந்தேசித்தும ஜீவனாமசத்தொகை நிஷ்கரிஷிக்கப்படவேண்டும. 12 அல. 558; 5 இ. அ. 55.

**359.** ஜீவனாமச பாத்தியமானது எப்போதும பாகபாத்தியத்துக்குட்பட்டதாயிருக்கிறபடியால் விதவையின வருஷவாரி ஜீவனாமசத்தொகையானது அவளிட புருஷன பங்குக்குள்ள வருஷ வருமபடிக்கு அதிகப்படமாட்டாது. 2 பம. 639.

மேலும ஷை ஜீவனாமசம புருஷன் பங்குக்குள்ள வருமபடியின மூனறில ஒரு பாகத்துக்குக குறையாமலிருக்கவேணடுமென்றும பமபாய் ஹைகோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 9 பம. 283; 11 பம. 199.

ஆகையால் ஒரு விதவையின் ஜீவனாமசத்துக்காக வருஷத்துக்கு அல்லது மாதத்துக்கு இவ்வளவென்று ஏற்படுத்தய

படும் தொகையானது அவளுடைய புருஷன் உயிரோடிருந்தால் அவனுக்கு என்ன பாகம் கிடைத்திருக்குமோ அப்பாகசொத்தின் வருஷம் அல்லது மாசவரும்படிக்கு மேற்பட முடியாதென்றும், அவ்விதம் தீர்மானிக்கப்படும் தொகையானது அவளிட காலக்ஷேமாதிகளுக்குப் போராததாயிருந்தாலும் அதற்குமேல அவளுக்கு யாதொன்றும் கிடைக்க சட்டப்படி நியாயமில்லையென்றும், தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 2 பம். 639; 11 பம. 199.

**360.** மேலும் ஜீவனாம்சங்கொடுக்க வேண்டியவனுடைய குடும்பசொத்தானது சொல்பமாயும் அச்சொத்தின் வரும்படி ரொம்ப அல்பமாயுமிருந்தால், விதவைக்கு தனியான ஜீவனாம்சம் கொடுப்பிக்க சாத்தியப்படமாட்டாதென்றும், அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில விதவையானவள் குடும்பத்தாரோடு சேர்ந்திருந்தே காலக்ஷேபத்தை நடத்திக்கொள்ளவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 2 பம. 573; 4 பம். 261; 22 பம. 52

**361.** ஜீவனாம்சம் கேட்கிற விதவைகள் வரும்படிதரக்கூடிய ரொக்கம் பூஸ்திதி முதலான சொத்துக்களை ஸ்திரீதனம், தானம், உயில் முதலியவற்றால யாரிடமிருந்தாவது ஏற்கனவே அடைந்திருந்தால், அப்படிப்பட்ட சொத்துக்களின் வரும்படிகளையும் கணக்கிட்டுத்தான அவ்விதவைகளுடைய ஜீவனாம்சத்தொகை நிஷ்கரிஷிக்கப்படும். 2 பம. 573.

**362.** ஆனால் ஜீவனாம்சக்காரியிட வசத்திலிருக்கும ஸ்திரீதனம வகையறா சொத்துக்கள் வரும்படி கொடுக்கக்கூடாத ஆடையாபரணாதிகளாகவும் பண்டங்களாகவுமிருந்தால, அப்படிப்பட்ட வகைகள் கணக்கில் சேர்க்கப்படமாட்டாது. 2 பம. ஹை. கோ. ரி. 341; 2 பம். ஹை. கோ. ரி. 584.

**363.** ஜீவனாம்சத்தொகையானது அதற்குப் பொறுப்பாயுள்ள சொத்தின் பரிமாணத்துக்குத்தக்கபடி ஏற்படவேண்டியிருக்கிறபடியால், அச்சொத்து அதிகப்படும்போது ஜீவனாம்சம அதிகப்படவும், சொத்து குறையும்போது ஜீவனாம்சம குறைய

வும் வேண்டியதாக இருக்கிறது. 2 பம். 630; 7 பம். 151; 22 மது. 175; 1 அல். 594; 24 பம. 392.

**364** ஆனால் ஜீவனாம்சம் கொடுக்கவேண்டிய நபர் யாதொரு நியாயமுமின்றி அக்கிரமமாய் சொத்தையழித்தால் அப்போது ஜீவனாம்சத்தொகை குறைக்கப்படமாட்டாது. 8 மது. 91; 24 பம. 386.

**365.** ஜீவனாம்சம் கேட்கிற ஸ்திரீயானவள் விபசாரியாக இருக்கக்கூடாது. ஜீவனாம்சத்தையடைந்தபின் விபசாரித்தனம் செய்தாலும் ஜீவனாம்சம் பெறும் பாத்தியதையை அவள் இழந்துவிடுவாள். ஜீவனாம்சத்துக்காகத் தீர்ப்புபெற்றவள் அதற்குப்பிறகு விபசாரித்தனம் செய்தாலும் அத்தீர்ப்பு நிறைவேற்றப்படமாட்டாது. மேலும் அத்தீர்ப்பானது ரத்து செய்யவும் படும். 7 பம. 84; 9 பம. 108; 5 கல. 776; 7 இ. அ. 151; 17 மது. 392; 19 மது 6; 17 கல 674; 15 அல. 382.

**366.** ஜீவனாம்ச பாத்தியத்தையுடைய ஒரு விதவை தன் புருஷன் வீட்டிலேயே அக்குடும்பத்தாரோடு சேர்ந்து வசிக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. பாலியத்தில் புருஷனையிழக்கிற இளைய விதவைகளுக்கு புருஷன் வீட்டிலிருப்பதைவிட பிறந்த வீட்டிலிருப்பதே மிக்க சௌகரியமாக இருக்கும். புருஷன் இறந்தபின் அவனுடைய பாகஸ்தாகளுடன் வசிப்பது சாகோஜபாயும் நிர்பந்தமாயுமிருக்கும். ஆனதுபற்றி அவ்விதவைகள் புருஷன் வீட்டிலேயே வசிக்காமல் வேறு இடங்களில் வசித்தாலும், ஜீவனாம்சம் பெறும் பாத்தியதையை அவாகள் அதனால் இழக்கமாட்டார்கள்.

**367.** ஆனால் விபசாரித்தனம் முதலிய கெட்ட நடத்தைகளின் பொருட்டு புருஷனிட குடும்ப வீட்டை விட்டு தனனிஷ்டம்போல அன்னிய இடங்களில் குடியிருக்கிற விதவைக்கு யாதொரு ஜீவனாம்சமும் கிடைக்கமாட்டாது 14 பம. 490.

**368.** மேலும் தன் பெண்சாதியானவள் குடும்ப வீட்டில் வசித்தாலமட்டும் ஜீவனாம்சத்தைப் பெறுவாளென்ற நிபந்த

னையை ஒரு புருஷன் இறந்துபோவதற்கு முன் உயில் முதலிய சாசனங்களில் ஏற்படுத்திவைத்திருந்தால், அப்போது அவளு டைய விதவை அநுபந்தனைப்படி நடக்கவேண்டியவளாகிறுள் அதை மீறி வேறு இடங்களில் குடியிருந்தால் அவளுக்கு யா தொரு ஜீவனுமசமும் கொடுக்கவேண்டிய நியாயமில்லை. 15 பம். 236.

369. ஒரு விதவையானவள் ஜீவனும்ச பாத்தியத்தைத் தவிர தன புருஷனுடைய குடும்ப வீட்டிலேயே குடியிருந்து கொள்ளும்படியான பாத்தியத்தையும உடையவளாக இருக்கி றுள். ஆனதால் அவளுடைய கொழுனன, மகன, முதலானவா களுக்காவது, அவாகளிடமிருந்து விநியோகம பெறுகிற அன்னி யருக்காவது, கோர்ட்டு ஏலத்திலெடுத்தவனுக்காவது, அவளைக் குடும்ப வீட்டிலிருந்தும அப்புறப்படுத்த அதிகாரமில்லை. இ. அ. 262; 7 பம. 282; 6 மது. 130.

370. ஆனுல குடும்பார்த்தமான கடன்களுக்காவது பிதுர்க்க களின்பேரில் ஏற்பட்ட டிக்கிரிகளுக்காவது குடும்ப வீடானது பராதீனப்பட்டுப்போனுல விதவையானவள குடியிருப்பு பாத்தி யத்தைக்கொண்டாட முடியாது. 12 மது. 260; 17 பம. 398.

371. விதவையினுடைய புருஷனுல வாங்கப்பட்டிருந்த கடனகளுக்காக குடும்ப வீடானது பராதீனப்பட்டுப்போனுல அக்கடனகள் எவவிதமாய் ஏற்பட்டனவாக இருந்தாலும விதவை அப்பராதீனங்களுக்கு முற்றிலும கட்டுப்பட்டவளாகிறுள்

372. ஆனுல் மகனுல் வாங்கப்பட்ட குடும்பார்த்தமில லாத கடன்களுக்கு தாயாா கட்டுப்படவேண்டிய அவசியமில்லை. குடும்பார்த்தமான செலவுகளுக்கல்லாமல மகனுனவன தன சொந்தத்தில் கடன்பட அக்கடன்களின நிமித்தம குடும்பவீடு கிரயம் செய்யப்பட்டால், கிரயம பெற்றவன கடனபட்டவனு டைய தாயாரை அவ்வீட்டிலிருந்தும அப்புறப்படுத்த முடியாது. 6 மது. 130; 7 பம. 282.

373. ஜீவனும்சத்துக்காக யாதொரு பூஸ்திதியாவது, தொகையாவது சாவசுதந்திரத்தோடு பூர்த்தியாய்க் கொடுக்கப்பட்டு விடலாம். அல்லது ஒரு குறிப்பிட்ட சொத்தின் வரும்படியைக்கொண்டு ஜீவனும்சத்தை நடத்திக்கொள்ளும்படி ஏற்படுத்திவைக்கலாம். அல்லது ஜீவனும்சத்துக்காக வருஷத்துக்கு அல்லது மாசத்துக்கு இவ்வளவு என்ற தொகையாவது தானியமாவது கொடுக்கப்பட்டும் வரலாம்.

374. ஜீவனும்சத்துக்காக யாதொரு பூஸ்திதி அல்லது தொகை ஒரு ஸதிரீக்கு சாவசுதந்திரத்தோடு பூர்த்தியாய்க் கொடுக்கப்பட்டுவிட்டால் அதை அவள் ஸதிரீதனசொத்தைப்போல தன் இஷ்டப்படி அனுபவித்துக்கொள்வதோடு பந்தகபாரதீனங்களும் செய்துகொள்ளலாம். 9 மூ. இ. அ. 55;

ஆனால் ஒரு சொத்தானது அவ்வாறு சாவசுதந்திரத்தோடு கொடுக்கப்படாமலிருந்தால் அச்சொத்தின் வரும்படியைக்கொண்டே ஜீவனும்சக்காரி காலக்ஷேபம் செய்துவரவேண்டும், மூலசொத்தைத் தன இஷடப்படி பந்தகபராதீனங்கள் செய்ய அவளுக்கு அதிகாரமில்லை. அவள் இறந்த பிறகு அச்சொத்தானது அவளிட புருஷனுடைய பின வாரசுகளுக்கே சேரத்தக்கதாகும். 4 மதா. 274; 5 கல. 113; 10 அல். 462; 14 மதா. 462; 26 இ. அ. 216; 27 கல். 156.

375. ஜீவனும்சமானது குடும்பசொத்தைப் பொறுத்ததாக இருந்தாலும கடன்கள் குடும்பசொத்துக்களின்பேரில் முதல பொறுப்பாக இருக்கிறபடியால ஜீவனும்சபாத்தியம அதற்குப்பின்னிட்டதாகவே இருக்கிறது. ஆகையால் பூர்வீகமான அல்லது குடும்பக்கடன்களுக்காக குடும்பசொத்துக்கள் பந்தகபராதீனங்கள் செய்யப்பட்டுப்போனால் அவைகளை ஜீவனும்சக்காரிகள் ஆக்ஷேபிக்க முடியாது. 11 கல், 102; 2 பம். 494; 4 அல், 296, 5 அல் 367; 2 மதா, 126, 12 மதா, 260; 27 மதா. 45.

**376.** ஆனால் கடன்கள் யாதொன்றும் இல்லாமலிருக்க ஜீவனும்சக்காரியினுடைய பாத்தியத்தை மோசம்பண்ணவேணு மென்ற கெட்டஎண்ணத்துடன குடும்பசோததானது பராதீ னம்செய்யப்பட்டால், ஜீவனுமச பாத்தியத்தையும் அவ்வித கெ. ட்ட எண்ணத்தையும தெரிநது விகியோகம்பெறுகிறவன், அவ் விகியோகத்துக்கு சரியான பிரதிபிரயோஜனம கொடுத்தவனாக இருநதபோதிலும ஜீவனும்சத்துக்கு பாத்தியப்படவேண்டுமெ ன்றும். யாதொரு பிரதிபிரயோஜனமுமின்றி சொததை தானமா ய்பெற்றவன் நல்ல எண்ணததோடு பெறறிருநதாலும் அரசீவனு மசத்துக்கு உட்படவேண்டுமெனறும், 1882ளு் வருஷத்திய 4-வது சட்டமாகிய டிரான்ஸ்பா ஆப் ப்ராபர்டி ஆகட்டின் 39-வது பிரி வில் விதிக்கப்பட்டிருக்கிறது.

**377.** ஜீவனும்சமானது குடும்ப சொத்தின்பேரிலுள்ள ஒருபொறுப்பாக இருக்கிறபடியால், ஜீவனும்சக்காரியானவள் தனக்கு நெடுகிலும கிடைத்துவரவேண்டிய ஜீவனும்சததின ஆதரவுக்காக ஒரு குறிப்பிட்ட சொததை பொறுப்பாக ஏற்படு த்திக்கொடுக்கும்படி கேட்கலாம். 12 மது, 260; 17 மது. 268.

**378.** ஆனால் ஜீவனும்சததுக்காக அவ்வாறு யாதொரு சொத்தும குறிப்பிட்டு பொறுபபாக ஏற்படுததபபடாம லிருக கும்போது ஒருகுடும்ப சொததை அனனியனொருவன நலல எண்ணத்தோடு கிரயம்பெறறால, அது ஜீவனுமசததுககு உட படமாட்டாது. 6 மது. 83, 2 பம. 494, 22 அல் 326. 24 அல 160.

**379.** ஜீவனுமசததுக்காக வியாசசியம் தொடருமபோது அனுதாவு செய்யப்பட்ட கடநதுபோன காலததின் ஜீவனும்ச பாக்கியையும சோத்திக கேட்கலாம. கடநதுபோன காலததின் ஜீவனும்சமானது அக்கிரமமாய்க் கொடுபடாமலிருநதால், அது முழுவதையும் கொடுக்கும்படி தீாப்புசெய்ய கோாட்டாருக்கு அதிகாரமுண்டு. 27 மது. 32; 17 மது. 268. ஆனாலும அநத நத கேசின் நியாயத்துக்குத் தக்கபடி ஜீவனும்சபாககியின் ஒரு

பாகத்தையாவது அல்லது பூராவையுமாவது மறுதளிக்கவும் கோர்ட்டாருக்கதிகாரமுண்டு. 21 அல். 183; 16 மத 403; 3 பம. 44; 17 பம 45.

380. ஜீவனும்ச வியாச்சியமானது ஜீவனும்சக்காரியை சமாக்ஷிக்கவேண்டியவன் சமாக்ஷிக்காமலாவது ஜீவனும்சத்துக்காக அவனுக்கு யாதொன்றும் கொடாமலாவது இருந்து, ஜீவனும்சம் கொடுக்கும்படி கேட்டதை அவன் மறுதளித்தது முதல் 12 வருஷங்களுக்குள்ளாக கொண்டுவரப்படவேண்டும்.

---

## 10-வது அத்தியாயம்.

---

# வார்சுபாத்தியம் அல்லது தாய பாத்தியம்.

381. பங்காளிகளுடன் சேர்ந்து அவிபக்த குடும்பமாயிருக்கும் ஒரு ஹிந்துவினுடைய பங்கு சொத்தானது அவனுக்குப் பின் அவனுடைய பிரதிநிதிகளான ஆண் சந்ததியாரையும், ஆண் சந்ததியில்லாவிடில் பெண்சாதி பிள்ளைகளைச் சேராமல் தகப்பன் சகோதிரர் முதலிய பங்காளிகளையும் சேருகிறதென்று 7-வது அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. ஆனால் அவ்வாறு அவிபக்த குடும்பப்பொதுவானதாயிராமல் ஒருவனுக்கு மட்டும் தனியே பாத்தியப்பட்டிருக்கிற ஒருவனுடைய பிரத்தியேகமான சொத்துக்களானவை அவனுக்குப்பின் அவனுடைய பாத்தியஸ்தாகளையே சேரத்தக்கதாயிருக்கின்றன. அப்பாத்தியஸ்தாகள் இன்னாரென்பது இவ்வத்தியாயத்திலும், அவர்களின் வரிசைக்கிரமம் அடுத்த அத்தியாயத்திலும் கூறப்படும்.

382. அவிபக்த நிலைமையிலாவது விபக்த நிலைமையிலாவது இருக்கிறவனுடைய சுயார்ஜிதசொத்துக்கள் எப்போதும் அவ

னுடைய தனியான சொத்துக்களாகவே இருக்கின்றன. அவை களில் அவனுடைய மகன் முதலிய சந்ததியாருக்கு அவனுள்ள வரையில் யாதொரு பாத்தியமுமில்லை, அவன் இறந்த பிறகே அசசந்ததியாாகளும மறறவாகளும அவனுடைய சொததுககு பாததியஸதாகளாக ஏறபடுகிறாாகள். மேலும தகப்பன், சகோ திரா முதலிய பங்காளிகளிடமிருநது பாகம பிரித்துக்கொண்டு தனியே இருககும ஒருவனுககு ஆண் சநததியில்லாமற் போனால் பாகததில கிடைத்ததாயிருககிற அவனுடைய தனியான சொத துககள் அவனுடைய விபகத தாயாதிகளைச சேராமல், பெண் சாதி, பெண், தௌகித்திரன முதலானவர்களைச சேருகின்றன. தௌகித்திரனும இலலாவிடில சகோதிரா முதலிய தாயாதிக ளைச சேரும. இவ்வாறு ஒருவனுடைய தனியான சொததுக் களை அவனுககுப்பின அடைகிற பாத்தியஸதாகள அவனுடைய வார்சுகளெனறும அவாகளுடைய பாத்தியம வாாசு பாத்தியம் அல்லது தாய பாத்தியமென்றும் சொல்லப்படும.

383. வாாசு பாத்தியமானது சொததுதாரனுடைய மரண காலததில்தான் ஏற்படுகிறது. அப்போது உயிரோடிருக்கும சமீப பாததியஸதன் அல்லது பாத்தியஸதாகள் யாரோ அவா களே வாாசுகளாவார்கள். அவர்களைவிட ஒரு சமீப வார்சு ஏற படுகிறவரையில் தாய பாத்தியமானது காததுக்கொண்டிருகக மாட்டாது. மேலும் ஒருவனுக்கு ஒரு தரம கிடைத்துவிடட தாயமானது அவனைவிடடு விலகிப்போகவுமாட்டாது. 6 பம. 616; 2 கல. 295; 7 கல். 178.

384. தாய பாத்தியம் ஏற்படுகிற காலத்தில வார்சானவன் பிறந்தேயிருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. தாயினுடைய கர்பத்தில் சிசுவாயிருந்தாலும் அது உயிரோடிருப்பதாகவே பாவி க்கப்படும். கர்ப்பத்திலிருக்கும் சிசு பிறப்பதற்கு முந்தி ஒரு பின் வார்சானவன் தாயத்தையடைந்து விடடாலும காப்பத்திலி ருந்து பின் பிறந்த அககுழநதையால் அவன் அபபுறப்படுததப் படுவான்.

385. தாய பாததியப்படி சொத்தையடைகிற ஒரு வார்சு ஆணாக இருந்தால் அவன் தாயத்தை முழுசுதந்திரத்துடன் அடைந்துவிடுகிறான். அதுபற்றி அச்சொத்துக்கள் அவனுக்குப் பின அவனுடைய வார்சுகளுக்கே சேருகின்றன.

386. ஆனால தாயம பெறும் ஒரு வார்சு ஸ்திரீஜாதியாக இருநதால அவள அசசொத்தை முழுசுதந்திரத்துடன் அடைய மாட்டாள். ஆயிசுகாலம வரையில் அதை அநுபவிக்கும்படியான பாததியத்தைமட்டும் அவள் அடைகிறாள். மேலும அச்சொத்து அவளுக்குப்பின் அவளுடைய வார்சுகளைச சேராமல் மூல புருஷனுடைய அடுத்த பின வாரசுகளையே சேருகின்றது. ஸதிரீ வாாசுகளுடைய சுதநதிரம முதலிய வறறைக்குறித்து அடுதத அத்தியாயததில் விரிவாய் சொலலப்படடிருப்பதைப் பாாக்க.

387. சொத்துக்களை யடைந்தாளவும அவற்றை வைதீக கருமஙகளின் பொருட்டு செலவழிக்கவும தகுதியற்றவாகளாயிருககிறவாகள் சாஸதிரஙகளின்படி தாய பாத்தியத்திலிருநது விலககபபட்டிருக்கிறார்கள். ஆகையால் நபும்ஸகர், புறவிக்குருடா, பிறவிச செவிடா, செவிட்டுமைகள், பிறவியிலிருநதே கை கால இலலாத மொண்டி முடம சபபாணிகள், கொடிய குஷ்டரோகி, புததியேயிலலாத ஜடன, புத்தி சுவாதீனமிலலாத பைத்தியக்காரன், ஆகிய இவர்களுக்கு வாாசு பாத்தியம் கிடையாது. 1 பம. 1 85; 1 பம். 557; 4 பம். ஹை. கோாட். 135; 6 அல் 332; 26 மது 133; 19 மது; 74. 1 மது ஹை கோாட் 214; 22 கல 864; 8 கல 149; 14 மூ. இ. அ. 176.

388. ஆனாலும் தாய பாத்தியத்திலிருந்து விலக்கப்படுவதற்கு மேற்சொன்ன அங்கக்குறைவுகள் பூர்ணமாயும நீங்காததாயும் இருக்கவேண்டும், 26 மது. 133.

389. தாயத்துக்குத் தகுதியற்ற மேற்சொன்னவர்கள் வேறு யாருக்காவது சமீப வார்சாக இருந்தால் தாயகாலத்தில் அவர்கள் இல்லாதவர்கள் போலவே பாவிக்கப்பட்டு தாயமா

னது அதற்கடுத்த வார்சுகளையடைந்துவிடும். 13 மு. இ. அ. 519. தாய பாத்தியத்துக்கு லாயக்கற்ற மேற்சொன்னவர்களுக்கு குடும்பத்தில் ஜீவனும்சம மட்டும் கிடைக்கும.

**390.** தாயத்துக்குத் தகுதியற்ற மேற்சொன்னவர்களுக்கு ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ள அதிகாரமில்லாதபடியால அவாகள் ஸ்வீகாரம் செய்துகொண்டாலும் அநத ஸ்வீகாரனுக்கு யாதொரு தாயமும் கிடைக்கமாட்டாது. அவனுக்கும ஜீவனும்சம் மட்டுமே கிடைக்கும.

**391.** தாயத்துக்குத்தகுதியற்ற மேற்சொன்னவர்கள் குறற்குறையில்லாத சரியான ஆண் சநததியை உடைத்தாயிருநதால் அசசநததியார் வார்சு பாத்தியத்துக்குத தகுதி யுளளவாகளாவாாகள். 2 பஙகால லா ரிபோாட்டு 103;

**392.** உலக வாழ்க்கையை முற்றிலுந்துறநது சன்னியாசியாய்ப் போனவனுக்கும் தாயபாததியம கிடையாது. ஆனால பக்திமார்க்கத்தில் இருநதுகொண்டு குடுமபததில் அதிகபபறறு வைக்காமலிருபபதினாலேயே ஒருவன் சநநியாசியாக பாவிககபபடமாட்டான. அப்படிப்பட்டவனுக்கு தாய பாததியமுண்டு. மேலும் சூத்திரர் முதலிய ஜாதியாருக்கு சன்னியாசி ஆசசிரமததையடைய விதியிலலையாகையால் சூததிர சனனியாசிகளை சாதாரணமாய் தாய பாத்தியத்திலிருநதும விலக்கப்பட மாட்டாாகள். தாயத்திலிருந்து விலக்கப்படுவதற்கு வழக்கப பிரமாணமான ஆதாரமிருக்கவேண்டும். 22 மது. 302.

**393.** ஒருவனுக்கு தாயபாததியம் ஏறபட்ட பிறகு மேற்சொன்ன குஷ்டரோகம் முதலிய கொடிய வியாதியாவது சிததசுவாதீனமின்மையாவது உண்டானாலும, ஏறகனவே கிடைதததாயம் அவாகளைவிட்டு விலகிப்போகவுமாட்டாது. 14 மது. 294; 7 இ. அ. 115; 22 கல். 864.

**394.** தாய பாததியத்திலிருநது விலக்கப்பட்டிருக்கிற மேலே சொன்னவாகள் தாயபாத்தியப்படி சொத்தை யடைய

மட்டும் தகுதியற்றவர்களே தவிர, தானமாயாவது உயில் முதலி யன மூலமாயாவது பிறரால் சொத்து கொடுக்கப்பட்டால் அதை ப்பெற அவர்கள் தகுதியுள்ளவர்களாகவே யிருக்கிறார்கள்.

**395.** ஜாதிப்பிரஷ்டனாயாவது மதப்பிரஷ்டனாயாவதுபோ ன ஒரு ஹிந்து தாயபாத்தியத்தை இழந்து விடுகிறான். என்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அவ்வி தியானது 1850 வருஷத்திய 21-வது ஆக்டால் ரத்துசெய்யப் பட்டிருக்கிறது. ஆகையால் பிரஷ்டனாய்ப்போன வனுக்கும் இக்காலத்தில் தாயபாத்தியம் உண்டு.

**396** இறந்துபோனவனுடைய சொத்துக்கு அவனுடைய சமீபசபிண்டன் வார்சு பாத்தியஸ்தனாக இருக்கிறான் என்று ஹிந்து தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. தர்மசா ஸ்திரங்களின் இரண்டு பிரதான வியாக்கியான கிரந்தங்களாயி ருக்கிற மிதாக்ஷரியையும் தாயபாகத்தையும் முறையே எழுதி வைத்த விக்ஞானேசுவரயோகியும் ஜீமூதவாகனரும் சபிண்டன் என்ற ஷை பதத்திற்கு வெவ்வேறு விதமாய் வியாக்கியானப்படு த்தி இருவகையான தாயக்கிரமத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதாவது.—இறந்துபோன முன்னோர்களின் பொருட்டு சிராத்த தாதி வைதீகச்சடங்குகளில் போடவேண்டிய பிண்டத்தைப்போ டுகிறவன் என்று ஜீமூதவாகனர் வியாக்கியானப்படுத்தியிருக்கி றார். ஆனால் நம்முடைய மிதாக்ஷரியை எழுதிவைத்த விக்ஞா னேசுவர யோகியோ, சபிண்டன என்ற அப்பதத்திற்கு ஒரே இரத்தக்கலப்புள்ளவன் என்று பொருள்படுத்தி, நெருங்கின இரத்த சம்பந்திகளை முந்தியும் இரத்தசம்பந்தம் மட்டாயுள்ள வர்களைப்பிறகும் வார்சுகளாக எடுத்திருக்கிறார்.

ஆகையால் பங்காள தேசத்தில் ஆதாரமாக வழங்கும் தாயபாகம் என்ற கிரந்தத்தின்படி தாயபாத்தியமானது இறந்து போனவர்களையுத்தேசித்துச் செய்யப்படும் உத்தரக்கிரியை சிரா த்தம் முதலிய வைதீகக்கருமங்களுக் குரித்தான பிண்ட விதிக ளையே முக்கியமாய் அனுசரித்ததாக இருக்கின்றது. ஆனால்

நமம தென்தேசத்தில் வழங்கும் மிதாக்ஷரை கிரநதத்தின்படி தாயபாத்தியமானது இரத்தசம்பநதமாயுள்ள சொந்தத்தையே முக்கியகாரணமாகக் கொண்டிருக்கிறது.

397. இரதத சம்பநதமுள்ளவர்கள் பொதுவாய் அபரக்கிரியை சிராாததம் முதலான கருமங்களைச செய்ய உரிமையுள்ளவர்களாகவும், அக்கருமங்களைச் செய்ய உரிமையுள்ளவர்கள் அநேகமாய் இரத்தசமபந்தமுள்ளவாகளாகவும தான் இருக்கிறாாகள். ஆனாலும் சிரார்த்தம முதலான வைதீகச்சடங்குகளில் இறந்துபோன முன்னோாகளின பொருட்டு போடப்படும பிண்டங்களைப்புற்றியுள்ள விதிகளினால பஙகாளா லாவாகிய தாயபாகம் என்ற நூலில் பிரத்தியேகமான தாயக்கிரமம சொல்லப்பட்டிருக்கிறது. அதனால அது நமது மிதாக்ஷிரையோடு அநேக இடங்களில் பேதப்பட்டிருக்கின்றது.

398. ஆனால் நமமுடைய மிதாக்ஷிரை கிரந்தகாத்தாவானவா சிரார்ததாதிகளில் போடபபடும அவ்வித பிண்ட விதிகளைய னுசரியாது இரததசமபநததநதினுடைய ஒற்றுமையையே பிரதானமாககக்கொண்டு இரதத சம்பநதம அதிகமாயுள்ளவர்களை முந்தியும இரத்தசம்பநதம குறைவாக உள்ளவாகளைப் பிந்தியும வார்சுகளாக ஏற்படுத்தியிருக்கிறாா.

399. இரத்த சம்பந்தமாயுள்ள சொநததததையே முக்கிய காரணமாகக் கொண்டிருக்கிற நம்முடைய மிதாக்ஷிரை கிரந்தத்தின்படி வாாசுகள் அடியிற்கண்டபடி இருவகை படுவாாகள அவைகளாவன :—

(1) ஒரே கோத்திரத்தைச் சோந்தவர்களான தாயாதிகள் அல்லது கோத்திரஜான்.

(2) வேறு கோத்திரத்தைச் சேர்ந்தவர்களான பந்

## தாயாதிகள்.

**400.** தாயாதிகள் மூன்று வகைப்படுவார்கள். அவை யாவன.—

(1) சமீப சபிண்டர்கள். (2) தூரசபிண்டர்கள் அல்லது சகுல்யர்கள். (3) சமானோதகர்கள்.

**401.** சமீபசபிண்டர்கள்.—ஒருவனுக்கு முதல் மூன்று தலைமுறையி லுள்ள ஆண் சந்ததியார்களான பிள்ளை, பேரன், கொள்பேரன ஆகிய இவர்களும, முதல் மூன்று முன்னோர்களான தகப்பன் பாட்டன் பூட்டன்களும, இம்மூன்று முன்னோாகளின முதல மூன்று தலைமுறைக்குட்பட்ட ஆண் சந்ததியாாகளான பக்க தாயாதிகளும் சமீப சபிண்டர்கள் எனப்படுவார்கள.

**402.** சகுல்யர்கள்.—4-வது 5-வது 6-வது தலைமுறையிலுளள ஆண் சந்ததியாாகளும முன்னோர்களும பக்க தாயாதிகளும சகுலயாகள அலலது தூரசபிண்டர்கள் எனப்படுவார்கள். சமானோதகர்கள்—7-வது முதல் 14-வது தலைமுறை வரையிலுளள எல்லா தாயாதிகளும் சமானோதகாகள் எனபபடுவார்கள்.

**403.** சகுல்யவர்க்கத்தில் சந்ததியாராவது முன்னோர்களாவது இருபபது மிக்க அபூர்வம். அநேகமாய் அசாத்தியமென றும சொலலலாம். சமானோதகவர்க்கத்தில் பின்னோர்களாவது முன்னோர்களாவது இருப்பது முற்றிலும அசாத்தியம். ஆகையால் இந்த இரண்டு வகைகளிலுமுள்ள கோத்திரஜாள் பக்க தாயாதிகளாகவே யிருப்பார்கள்.

**404.** எதிலும் ஆண் தலைமுறை வழியாகவே சம்பந்தப்பட்டு ஒரே குலத்தையும் கோத்திரத்தையுமே சேர்ந்தவர்களாகவிருக்கிற தாயாதிகளுடைய ரத்த சம்பந்தமே உயர்வானதாக இருக்கிறதென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அது பற்றியே ஏழுதலைமுறைக்குட்பட்டவர்களான சபிண்ட சகு

ல்யவர்க்க தாயாதிகளில் ஒருவன் இறந்துபோனால் மற்ற தாயாதிகளுக்கு பத்து நாள் பூருவும் ஆசௌசம் (தீட்டு) ஏற்பட்டிருக்கிறது. சமானோதகர்களுடைய இரத்த சம்பந்தம் குறைவானதாக இருப்பதால் அவ்வர்க்கத்தாருக்குள் மூன்று நாள் ஆசௌசம் மட்டுமே ஏற்பட்டிருக்கிறது. ஆனால் எவ்வளவு நெருங்கின பந்துவுக்கும சாஸ்திரங்களின்படி மூன்று நாளுக்கு மேற்பட்டு ஆசௌசம் கிடையாது. மேலும் அநேக சமீப பந்துக்களுக்கு மேற்படி தீட்டானது மூன்று நாளுக்கும குறைவாகவே யிருக்கிறது. இவ்விதம் பந்து வர்க்கத்தாருடைய ஆசௌசத்தைக் காட்டிலும தாயாதி வர்க்கத்தாருடைய ஆசௌசமே விசேஷித்ததாக இருக்கிறது.

இரத்த சம்பந்தத்தைப் பற்றியதாயிருக்கிற இவ்விதஆசௌசவிதிகளினாலேயும் பந்துவர்க்கத்தாரை விட தாயாதி வர்க்கத்தாரே மேலான இரத்த சம்பந்தமுள்ளவர்களாக இருக்கிறார்களென்று இதனால் விளக்கமாகிறது. ஆனபடியால் சமானோதகர்கள் ஈறாக வுள்ள எல்லா தாயாதிகளும அற்றுப்போன பிறகே பந்துவர்க்கத்தார் வாரசுகளாக வருவார்கள் என்று நமமுடைய மிதாக்ஷரை கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## பந்துக்கள்.

**405.** தன்னுடையவும், தன் சந்ததியார் முன்னோர் பக்க தாயாதிகளாகிய சபிண்டர்களுடையவும வழியாக சம்பந்தப்பட்டிருக்கிற ஸதிரீகள் மூலமாய் ஏற்பட்டுள்ள இரத்த சம்பந்திகளான அன்னிய கோத்திரத்தார்கள் பந்துக்கள் எனப்படுவார்கள். அவர்கள் சமீப பந்துக்களென்றும் தூர பந்துக்களென்றும இருவகைப்படுவார்கள். ஆறு தலைமுறைக் குட்பட்டிருக்கிற எல்லா பந்துக்களுக்கும் வார்சு பாத்தியமுண்டு. சமீப பந்துக்கள் முந்தியும் தூர பந்துக்கள் பிந்தியும் வார்சாவார்கள். மேலும் ஒருவனுக்கு பந்துக்கள் தன் வழியைச சேர்ந்தவர்களென்றும், தகப்பன் வழியைச் சேர்ந்தவர்களென்றும, தாய்

வழியைச் சேர்ந்தவாகளென்றும் மற்றும் மூவகைப்படுவார்கள். 16 மது. 23.

406. பந்துவர்க்கத்தார்கள்.—தன்னுடையவும் தன் மகன் பேரன்களுடையவும தெளகிததிரர்களும, தகப்பனுடைய தெளகித்திரனுன மருமான், பாட்டனுடைய தெளகிததிரனுன அததான (அத்தைமகன்), பூட்டனுடைய தெளகிததிரனுன தகபபனிட அத்தான் ஆகிய இவர்களும, சகோதரா தகபபனிட சகோதரா முதலான சமீப தாயாதிகளுடைய தெளகித்திரர்களும தனவழியையும தகப்பன் வழியையுஞசோநத சமீப பந்துககளாகிறாகள்.

407. தாயினுடைய பெற்றோர், தாயின கூடப் பிறநதவனுன மாமன, மாமன மகன், மாமன பேரன், சிறிய தாயார் பெரிய தாயா, சிறிய தாயாா பெரிய தாயாாகளின மககள் முதலானவாகள தாய் வழியைச சோந்த சமீப பநதுககளாகிறாகள். தாயினுடைய சிற்றப்பன் பெரியபபன, சிறிய பாட்டன் பெரிய பாடடன முதலானவாகளும, அவாகளின் வர்க்கத்தார்களும், தாயினுடைய அமமான், தாயினுடைய சிறிய தாயார் பெரிய தாயாா முதலானவர்களும, அவர்களின் வாக்கத்தாரும தாய்வழியைச சோநத பினனிடட பந்துக்களாகிறாகள.

408. தகப்பனுடைய தாயின் பெற்றோாகளும அவாகளின வாககததாாகளும தகப்பன வழியைசசோநத பிந்தின பநதுககளாகிறாகள.

409. தெளகித்திரன்.—எல்லா பந்துக்களுக்குள்ளும் தனனுடைய சொநதப பெண்ணின பிளளையான தெளகித்திரனே முதல் பநதுவாக இருக்கிறான். ஆனுலும அவனுடைய வாாசுபாததியம மற்ற பந்துக்களுடையதைப்போல எல்லா தாயாதிகளுக்கும் பின்னிட்டானதல்ல, தெளகித்திரனுனவன் தக்க பார்தவ்ய முளளவனுகவும் விசேஷ பாத்தியஸ்தனுகவுமிருக்கிறான்.

410. ஆதிகாலத்தில் ஆண்சந்ததியில்லாதவர்கள் பெண்ணை ஒரு புருஷனுக்கு விவாகம்செய்து கொடுக்கும்போது அப்பெண்

ணினுடைய வயிற்றில் பிறக்கும் பிள்ளை தனக்கும் பிள்ளையாக இருக்கவேண்டுமென்பதாக அப்புருஷனுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளுவது வழக்கமாக இருந்தது. அவ்வொப்பந்தத்தை யனுசரித்துப பிறந்த பெண்ணினுடைய பிள்ளைக்கு புத்திரிகாபுத்திரன் என்ற பெயர் வழங்கப்பட்டு வந்தது. ஆனால் புத்திரியை விவாகம் செய்து கொள்ளுகிறவனுடன் அவ்வாறு ஒப்பந்தம் செய்துகொள்ளும் வழக்கம் நாளடைவில் நின்றுபோத எல்லாப் பெண்களுடைய எல்லாப் பிள்ளைகளும் சமமாகவே பாவிக்கப்பட்டார்கள். மேலும் பெண்ணானவள் பிள்ளை யொப்பந்தம சொந்த உதரத்திலிருந்து ஜனித்த சரியான இரத்த சமபந்தமுள்ளவளாக இருக்கிறபடியால், அவளுடைய வயிறறில பிறக்கும பிள்ளையான தௌஹித்திரனனவன் பிள்ளையினுடைய பிள்ளையான பேரனைப் பந்தம பாவிககப்படத்தக்க விசேஷ பாத்தவ்யமுள்ளவனாக இருக்கிறனென்று தர்ம சாஸதிரங்களில் சொல்லப்படடிருக்கிறது. ஆனதுபற்றி தௌஹித்திரனனவன் பிள்ளை பேரன் கொள்ளுபேரன் ஆகிய முதல் மூன்று ஆண சந்ததியாருக்கும் பின்னிட்டு அடுதத ஆண் வாரசாக எடுக்கப்பட்டிருக்கிறான். 16 மதா. 167; 27 மதா 311.

411. அவிபக்த குடும்பமாயிருக்கும பல சகோதராகள் தங்கள் தாயின் தகப்பனுடைய சொததை தௌஹித்திர பாத்தியுப்படி அடையுமபோது பிதுராாசசித சோததுக்குள்ளளானை வாஷிப என்னும் பாத்தியத்துடனேயும் அதை அடைகிறாகள என்று இப்பால் தீர்மானிக்கபபட்டிருக்கிறது. 25 மதா. 687 (பிரிவி கவுனசில் தீரப்பு); 27 மதா. 300.

## ஸ்திரீ வார்சுகள்

412. ஸதிரீகளுக்கு ஒருபோதும் சுயேசசையான அதிகாரமில்லையென்றும, அவர்கள் தகபபன், புருஷன், மகன் முதலான ஆண்களுடைய கட்டுக்கும் சமரக்ஷணைகளும் உட்பட்டவர்களென்றும் ஹிந்து தர்ம சாஸதிரஙகளில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதால் பெண்சாதி, பெண், தாயாா, பாட்டி, சகோதரி, அத்தை முதலான நெருங்கின சொந்தமுள்ள ஸதிரீகளுக்குங்

கூட ஆதிகாலத்தில் வார்சுபாத்தியம் ஏற்பட்டிருக்கவில்லை. ஆனாலும காலஞ் செல்லச் செல்ல ஸ்திரீகளுக்கும் சொத்து விஷயத்தில் கொஞ்சங் கொஞ்சமாய் பாத்தியம் ஏற்பட்டு வர இப்போது அவர்கள் வாரசுகளாகவும அங்கீகரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனாலும் அவாகளுடைய தாய பாத்தியம் சாதாரணமானதல்லவாகையால் தாய பாததியப்படி அடையும் சொத்தில் அவர்களுக்கு பூரண சுதநதிரம கிடையாது. ஜீவதசை வரையில் அதை அனுபவிகக மட்டும் அவர்களுககு பாத்தியமுண்டு. அதற்குப்பிறகு அசசொததானது மூல புருஷனுடைய பின் வார்சுகளை யடைகிறது. 2 மது. ஹை. கோரி. 402; 1 பம் ஹை. கோர். 117,

413. சகோதரி முதலானவர்கள்.—ஸதிரீகளுடைய வார்சு பாத்தியததை ஒபபுக்கொண்டிருக்கிற மிதாக்ஷரை கிரந்தத்திலும் சகோதரியானவள் குறிபபிடப் படவில்லை. அதுபற்றி அவள் வார்சு வர்க்கத்தில் சோநதவளல்ல வென்று நமது மதுராஸ் ஹைகோாட்டார் முதலில் அபிப்பிராயப்பட்டு அவளுக்கு விரோதமாய் தீாபபு செய்தார்கள். ஆகிலும நெருங்கிய இரத்த சம்பநதமுள்ளவளாயிருககிற சகோதரி வார்சு வாக்கத்திலிருந்து விலக்கப்பட்டிருப்பது அவ்வளவு சரியானதல்லவென்று பிற்பாடு ஆலோசிதது, மிதாக்ஷரை கிரந்தகர்த்தர் அவளை வார்சு வர்க்கத்தில் சொல்லத்தப்பிப்போனவரே யன்றி விலக்கினவரல்லவென்று வியாக்கியானம் செய்து, சகோதரிகளுக்கும் வார்சு பாத்தியமுண்டென்று பின்னிட்டு ஷை கோர்ட்டார தீர்மானித்திருக்கிறார்கள். 8 மது. ஹை. கோ. ரி, 88; 5 மது. 241,

414. மேலும் சொந்த சகோதரியன்றி, தகப்பனுடைய சகோதரியான அத்தையும், பிள்ளையினுடைய பெண், பெண்ணினுடைய பெண், சகோதரியினுடைய பெண் முதலானவர்களும் வார்சு வர்க்கத்தில் சேர்ந்தவர்களென்று மதுராஸ் ஹைகோர்ட்டாரால் தீர்மானங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. 13 மது. 10; 14 மது. 149; 15 மது. 421; 17 மது. 182; 18 மது. 193; 21 மது. 263.

ஆனால் தாயாதிகளுடைய விதவைகள் வார்சுகளாக எடுக்கப்படவில்லை. 4 மதா. ஹை. கோ. ரி. 187; 18 மதா. 168.

**415.** சகோதரி என்பது ஒரே தாய் தகப்பனுக்குப் பிறந்தவளை குறிக்கிறதேயன்றி தாயின் சக்களத்திக்குப் பிறந்த பின்னோதரியைக் குறிக்கிறதில்லை. 5 மதா. 29.

**416.** ஸ்திரீ ஜாதியார்களுடைய வார்சு பாத்தியம் சாதாரணமான தல்லவாகையாலும் ஆண்களுடைய வார்சு பாத்தியமே மேலானதாக இருக்கிறபடியாலும் ஸ்திரீ வார்சானவள் எவ்வளவு சமீப பந்துவாயிருந்தாலும் தூரமான ஆண் பந்துக்களுக்குப் பிறகே வார்சு பாத்தியத்தையடைவாள். 18 மதா. 193.

**417.** புருஷனுடைய சொத்தை வார்சு பாத்தியப்படி அடைய பெண்சாதியானவள் விபசாரதோஷமில்லாதவளாக இருக்கவேண்டும். (5 மதா. 149). விபசாரியாக இருக்கும் விதவை வார்சு பாத்தியத்துக்கு யோக்கியதையற்றவளாக இருக்கிறாள். ஆனாலும் வார்சு பாத்தியப்படி சொத்தையடைந்துவிட்ட பிறகு விதவை விபசாரித்தனம் செய்தாலும் ஒருதரம் கிடைத்த சொத்து அவளைவிட்டு விலகிப்போகமாட்டாது. 7 இ. அ. 115; 24 மதா. 441.

**418.** ஆனால் பெண்சாதியைத் தவிர புத்திரி சகோதரி தாயார் முதலான மற்றெந்த ஸ்திரீகளுக்கும் விபசார தோஷமானது தாயபாத்தியத்துக்குத் தடையாயிருக்கமாட்டாது. 5 மதா. 149; 26 மதா. 509.

## ஸ்வீகாரம் போனவர்களைப்பற்றி.

**419.** ஒரு குடும்பத்திற் பிறந்து வேறொரு குடும்பத்துக்கு ஸ்வீகாரம் போனவர்கள் ஸ்வீகாரத்துக்குப் பிறகு ஜனக குடும்பத்தினுடைய சம்பந்தத்தினின்றும் முற்றிலும் நீங்கி ஸ்வீகார குடும்பத்தையே சேர்ந்தவர்களாக ஏற்படுகிறார்கள். ஆகையால் ஒரு ஸ்வீகாரனுக்குள்ள வார்சு பாத்தியங்கள் ஸ்வீகார

குடும்பத்தில் தான் ஏற்படுகிறதேயன்றி ஜனக குடும்பத்தில் ஏற்படுகிறதில்லை. ஜனக குடும்பத்தைச்சேர்ந்த தாயாதி வர்க்கத்தாருக்காவது பந்து வர்க்கத்தாருக்காவது அவன் வார்சாகமாட்டான். அவனுக்கும் அவர்கள் வார்சாகமாட்டார்கள். ஸ்வீகார குடும்பத்தைச் சேர்ந்த தாயாதிகளுக்கும் பந்துக்களுக்கும் அவன் வார்சாகிறான். அவர்களே அவனுக்கு வார்சாகிறார்கள் 1 மதூ. ஹை. கோ. ரி. 180; 25 மதூ. 394.

**420.** ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டவனுக்கு அதற்குப் பின் சொந்தப்பிள்ளை பிறந்துவிட்டால் பின்பிறந்த சொந்தப் பிள்ளையே சொந்த உதரத்திலிருந்து பிறந்தகாரணம்பற்றி மேலான பாத்தியத்தையுடையவனாக இருக்கிறான். பிராம்மணர் முதலிய முதல் மூன்று ஜாதிகளில் தகப்பனுடைய சொத்தில் சொந்தப்பிள்ளை நான்கு பங்கும் ஸ்வீகாரப்பிள்ளை ஒரு பங்குமாக அடையப்பெறவேண்டும். அதாவது, ஸ்வீகாரத்துக்குப் பிறகு ஒரு சொந்தப்பிள்ளை பிறந்தால் பூறுசொத்தும் ஐந்து பங்காகப் பிரிக்கப்பட்டு சொந்தப்பிள்ளை நான்கு பங்கையும் ஸ்வீகாரன் ஒரு பங்கையுமடையவேண்டும். பின்பிறந்த சொந்தப்பிள்ளை இருவராக இருந்தால் பூறுசொத்தும் ஒன்பது பங்காகப்பிரிக்கப்பட்டு ஒவ்வொரு ஔரசனும் நான்கு பங்காக இருவரும் சேர்ந்து எட்டுப்பங்கையும், தத்தன் ஒரு பங்கையுமடையவேண்டும். அதுபோலவே மூன்று சொந்தப்பிள்ளைகளிருந்தால் தத்தனுக்கு பதின்மூன்றில் ஒருபங்கு தான் கிடைக்கும். ஆனதால் சொந்தப்பிள்ளைகள் அதிகமாகப் பிறந்துவிட்டால் தத்தனுடைய பங்கு மிகவும் அல்பமாய்ப் போய்விடுகிறது. 1 மதூ. ஹை. கோ. ரி. 45; 17 பம் 100.

**421.** ஆனால் சூத்திரர்களிலும் அதற்குக் கீழ்பட்ட ஜாதிகளிலும் ஸ்வீகாரனும் பின்பிறந்த சொந்தப்பிள்ளையும் சமமான பாத்தியஸ்தர்களாகவே யிருக்கிறார்கள். 17 மதூ. 253.

**422.** ஜமீன் முதலிய பாகிக்கத்தகாத சொத்துக்களுக்கு மேலான அந்தஸ்தையுடைய பின் பிறந்த சொந்தப்பிள்ளையே

வார்சாவான். ஸ்வீகாரனுக்கு அசசொத்திலிருந்து ஜீவனும்சம் மட்டுமே கிடைக்கும். 17 மது. 345.

423. வைப்பாட்டி பிள்ளை.—ஒருவன தனக்கு விவாகமா காத ஸ்திரீயுடன் தொடாசசியாய் தேகசம்பநதம் வைததுக்கொண்டு பிள்ளையைப் பெற்றால், அப்பிள்ளை வைப்பாட்டி பிள்ளை யெனப்படுவான். 4 மது. ஹை. கோ. ரி. 204; 7 மது. 407 பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் ஆகிய முதல மூன்று ஜாதிக ளில் வைப்பாட்டி பிள்ளைக்கு தகப்பன் சொத்தில் ஜீவனுமச பாத்தியம் மட்டும உண்டேயன்றி வாாசு பாத்தியம் கிடையாது. 1 பம். 97; 2 அல். 131.

424. சூத்திரர் முதலிய ஜாதிகளில் வைப்பாட்டி பிள்ளைக்கு வார்சு பாத்தியமுண்டு. 1 மது. ஹை. கோ. ரி. 478; 7 மது. 407. ஆனால் அவன் தன் தகப்பனுக்கு மட்டும் வாாசாவானே யன்றி தகப்பனுடைய தாயாதிகளுக்காவது பநதுக்களுக்காவது வார்சாகமாட்டான். 21 அல். 99.

425. தகப்பனுடைய சொத்தை சொந்தப்பிள்ளையும் வைப்பாட்டிபிள்ளையும தாயமாக அடையுமபோது சொந்தப்பிள்ளை இரண்டு பங்கும் வைபபாட்டி பிள்ளை ஒரு பங்குமாக அடைகிறார்கள். (14 பம். 282); அவர்களிருவரும அவிபக்தமாயிருக்கும போது அவர்களில் எவனாவது ஒருவன் ஆண் சநததியின்றி யிறந்துபோனால் மற்றவன் பூருசொததுககும ஸாவைவா ஷிப் என்னும் பாத்தியப்படி பாத்தியஸ்தனாவான. 18 கல். 151; 4 பம. 37. மேலும் விபக்த நிலைமையிலும் அவாகள் ஒருவருக்கொருவர் வார்சுகளாவார்கள். 17 இ. அ. 128; 4 பம். 37; 11 கல். 702.

426. சூத்திரர் முதலிய ஜாதிகளில் ஒருவனுக்குச் சொந்தப்பிள்ளை யில்லாமலிருக்க புத்திரியாவது தௌஹித்திரனாவது இருப்புதுடன் வைப்பாட்டி பிள்ளையும் இருந்தால், அப்புத்திரியும் தௌஹித்திரனும் வைப்பாட்டி பிள்ளை சமபாத்தியஸ தனாக இருக்கிறான். புத்திரி அல்லது தௌஹித்திரன் பாதி

சொத்தையும், வைபபாட்டிபிள்ளை மற்ற பாதி சொத்தையுமாக அடையவேண்டும். ஆனால் புத்திரி தௌகித்திரன் இவர்களுக்கு பாத்தியப்பட்ட பாதி சொத்தானது முதலில் பெண்சாதியால் அடையப்பட்டு அவளுக்குப்பின் புத்திரிக்கும் தௌகித்திரனுக்கும பாத்தியப்படுகிறது. புத்திரியாவது தௌகித்திரனாவது இல்லாமல் சொத்துதாரனுடைய பெண்சாதிமட்டு மிருந்தால் அவளும் வைப்பாட்டி பிள்ளையும சொத்தை சமமாக அடைகிறார்கள். 15 மது. 307.

---

## 11-வது அத்தியாயம்.

---

## வார்சுகளின் வரிசைக்கிரமம்.

**427.** பிள்ளை, பேரன், கொள்பேரன்.—(புத்திரன், பௌத்திரன, பிரபௌத்திரன) ஆகிய மூவருமெ ஒருவனுக்கு நேரான ஆண சந்ததியாக இருப்பதாக தவிர முதல்தரமான இரத்த சம்பந்த முள்ளவர்களாகவும இருக்கிறார்கள். உத்தரக்கிரியை சிரார்த்தம முதலிய வைதீககருமஙகளைச் செய்யும பாத்தியம் பிள்ளைகளுககன்றி பேரன் கொள்பேரன்களுக்கும் உண்டு. ஆனது பற்றி இமமூவரும் சமீப சபிண்டவர்க்கத்தில் முதன்மையானவர்களாக இருப்பதும தவிர வாரசுபாத்தியத்தில் ஒருவருக்குப்பின் ஒருவராய் வராமல் இவர்கஎல்லோரும் சமமான வரிசையில் இருக்கிறார்கள். 16 மது. 14.

**428.** அநேக பிள்ளைகள் இருந்தால் தகப்பன் சொத்தை அவர்கஎல்லோரும சமமாகவே அடையவேண்டும். ஆதிகாலததில் மூத்தபிள்ளைக்கு ஜேஷ்டாமசம் என்று கொஞ்சம் அதிக பாகம் ஏற்பட்டிருநதது. ஆனால் இக்காலத்தில் அவ்வித ஜேஷ்டாம்சம் யாதொன்றும் கிடையாது. இப்போது எல்லாப்பிள்ளைகளும் சமமான பாத்தியஸ்தர்களாகவே யிருக்கிறார்கள்,

**429.** மேலும் பல பெண்சாதிகளிருந்து அவர்களிடமாக வெவ்வேறு எண்ணிக்கையான பிள்ளைகள் பிறந்திருந்தாலும்

அப்பிள்ளைகள் தங்கள் தங்கள் தாய் மார்களுடைய அம்சத்துக்குத் தக்கபடி தாயம் பெறாமல் எல்லோரும் சமமாகவே சொத்தையடையவேண்டும்.

**430.** சில பிள்ளைகள் தகப்பனோடு பாகம் பிரித்துக்கொண்டு தனியாயிருக்க, மற்றவர்கள் தகப்பனுடன் சேர்ந்திருந்தால் சேர்ந்திருக்கும் பிள்ளைகளே தகப்பன் சொத்துக்கு வார்சாவார்கள். 4 அல். 427.

**431.** எல்லாப்பிள்ளைகளும் பாகம் பிரிந்தவர்களாகவேயிருந்தாலும் அவர்களே தகப்பனுக்கு வார்சாவார்கள். பிள்ளைகளிருக்கும்போது பெண்சாதியானவள் வார்சாகமாட்டாள். 2 மது. 182; 3 பம். 54; 21 மது. 425; 25 மது. 385; 23 கல. 670 பிரிவி கவுன்சில் தீர்ப்பு.

**432.** ஆகையால் பிள்ளைகளோடு பாகம்செய்து கொள்ளும தகப்பனானவன் தனக்குப்பின் தன்பங்குசொத்து தன் பெண்சாதியையே சேரவேணுமென்று விரும்பினால அந்தப்படி அவன் உயில் முதலியவற்றால் ஏற்படுத்திவைக்கவேண்டும. இல்லாவிடில் சொத்தானது பிள்ளைகளுக்குச்சேர்ந்து விடும். பெண்சாதியானவள் பிள்ளைகளிடமிருந்து ஜீவனாம்சத்தை மட்டுமே அடையத்தகுந்தவளாவாள்.

**433.** பிள்ளைகளுடன் பாகம்செய்துகொண்ட ஒருவன் தன்பங்குசொத்தைத் தானும் தன்பெண்ஜாதியும் ஆகிய இருவருமே சர்வசுதந்திரமாய் அநுபவித்துக்கொள்ளத் தக்கதென்று பாகதஸ்தாவேஜில் ஏற்படுத்திக்கொண்டான். அவன் இறந்தபிறகு அவ்விடபங்கு சொத்தைக்குறித்து அவனுடைய பிள்ளைகளுக்கும் அப்பிள்ளைகளின் தாயான மேற்சொன்ன விதவைக்கும் வழக்கு உண்டாக; பாகதஸ்தாவேஜின் வாசகத்தையநுசரித்து அப்பங்கு சொத்தானது தகப்பன் தாய் இருவருக்கும் கூட்டாக பாத்தியப்பட்டதென்றும், தகப்பனுக்குள்ள பகுதிசொத்து பிள்ளைகளைச்சேர்ந்ததென்றும்; பாக்கிபகுதிமட்டும் அவர்

களிட தாயாதரைச்சேர்ந்ததென்றும், நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது (27 மதி. 498) ஆகையால் பிள்ளையிருக்கும்போது பெண்சாதிவார்சாகமாட்டாள்.

434 பாகிக்கத்தகாத ஜமீன் முதலியசொத்துக்களுக்கு மூத்தபிள்ளையே வார்சாகிறான். 5 அல். 542 (இதைப்பற்றி 13-வது அத்தியாயத்தில் விரிவாய்சொல்லப்பட்டிருப்பதைப்பார்க்க)

435. பேரர்களும் கொள்பேரர்களும் அவரவர்களின் தகப்பன்மார்களுடைய அம்சத்துக்குத் தக்கபடி தாயம்பெறுவார்கள்.

436. பிள்ளை, பேரன், கொள்பேரன் ஆகிய மூவரும் இறந்துபோய் நாலாவது தலைமுறையானகிய கொள்பேரனுடைய பிள்ளைமட்டும் இருந்தால், அவன் அடுத்தாப்போல தாயத்துக்கு பாத்தியஸ்தனாகமாட்டான். சமீப சபிண்டர்களான முதல் மூன்று தலைமுறையிலுள்ள எல்லாதாயாதிகளும அற்றுப்போன பிறகே அவன் வார்சாவான் (வார்சுக் கிரமத்தில் இவன் 23-வது படியில் நிற்பதைக்கீழே 479-வது பிரிவிற்பார்க்க)

437. பெண்சாதி.—ஒருவனுக்கு கொள்பேரனுமில்லாவிட்டால் பெண்சாதி வார்சாகிறாள். 1 மதி. ஹை. கோ. ரி. 223.

புருஷனுடைய சொத்தைவார்சாக அடைய பெண்சாதியானவள் விபசாரதோஷமில்லாதவளாக இருக்கவேண்டும். ஆனால் புருஷன் இறந்தபிறகு வியபசாரத்தனஞ் செய்தாலும் ஏற்கனவேகிடைத்த ஆஸ்தி அவளைவிட்டு நீங்கமாட்டாது. 7 இ. அ. 115, 24 மதி. 141.

438. ஸ்திரீயானவள் புனர்விவாகம் செய்துகொண்டுவிட்டால முதல் புருஷனுடைய சொத்துக்குள்ள வார்சுபாத்தியத்தை இழந்துவிடுகிறாள். ஆகையால் விதவையாயிருப்பவள் தாயபாத்தியத்தை அடைந்தபிறகு புனர்விவாகம் செய்துகொண்டால் முதல் புருஷனுடைய சொத்து அவளைவிட்டு நீங்கிவிடும். 22 கல். 589.

**439.** மேலும் புருஷனுவது பெண்சாதியாவது ஜாதியினின்று விலக்கப்பட்டிருந்து அவாகளுக்குள் உள்ள பரஸ்பர சமபந்தமும் விலகிப் போயிருந்தாலும, அலலது விவாகபந்தகமானது கோர்ட்டாரால் ரத்து செய்யப்பட்டிருந்தாலும், பெண்சாதியானவள் புருஷன சொததுக்கு வாாசாகமாட்டாள. 8 மதா. 169

**440.** புருஷனுடைய சொத்தை வாாசு பாததியபபடி யடையும பெண்சாதிககு அசசொத்தில பூாண சுதநதிரம் கிடையாது. ஆயிசுகாலம வரையில் அதை யனுபவிகக மட்டுமே அவளுககு பாததியமுண்டு. அநேக பெண்சாதிகளிருநதால புருஷனுடைய சொததை அவாகளெல்லோரும சமமாய் ஏககாலத்திலடைகிறாகள். அவாகள் அசசொததை ஒருமித தனுபவித்துக்கொள்ள இஷ்டப்படாதவாகளாகவாவது சௌகரியப்படாதவாகளாகவாவது இருநதால, அவாகள் அதை தனிததனியாய் பிரிததும அனுபவிககலாம. ஆனால் அப்படிபபட்ட பிரிவினையானது பாகமபோலாய் விடமாட்டாது. யாராவது ஒருததி இறந்துபோனுலும அவளுடைய பங்கு அவளுடைய பெண்ணுககாவது தௌகித்திரனுககாவது உடனே சோநதுவிடாமல் உயிரோடிருக்கும மறற விதவைகளான அவளுடைய சக்களததிகளையே சேரும. எல்லா விதவைகளும் ஒவ்வொருவராய் இறநதுகொணடே வநதால் கடைசியில் உயிரோடிருககும விதவையே முழுசொததையுமடைவாள் 3 மதா. ஹை. கோ. ரி. 424; 1 மதா. 290, 2 மதா. 194. 7 மதா. 93; 12 அல். 51. (பிரிவி கௌன்சில் தீாபபு.)

**441.** புத்திரிகள் (பெண்கள்) — எல்லா விதவைகளும் இறந்துபோன பிறகு புத்திரிகள் வார்சாவாாகள். அவர்களில்விவாகமாகாத பெண்கள் முதலிலும், விவாகமாய் ஏழையாயிருப்பவர்கள் அதற்குப் பிறகும், விவாகமாய் பணககாரிகளாயிருப்பவாகள் கடைசியிலும் தாயம் பெறுவாாகள் 3 மதா. 265; 3 கல. 587; 2 அல். 561.

**442.** ஆனால் பிள்ளையில்லாத விதவைகளாயும் மலடிகளாயுமிருக்கிற பெண்களுக்கும் பிள்ளைகளையுடைய பெண்களுக்கும்

அரசு பாததியத்தில் யாதொரு வித்தியாசமுமில்லை. 3 மது. 265; 3 கல. 587.

**443.** தகப்பனுடைய சொத்தை தாயம் பெறுவதற்கு புத்திரிகள் விபசாரதோஷமிலலாதவாகளாக இருக்கவேண்டுமென்ற அவசியமிலலை. 4 பம. 104; 5 மது. 149.

**444.** வாரசு பாத்தியபபடி தகப்பனிடமிருந்து அடையும் சொததில பெண்களுககு முழு சுதநதிரம் கிடையாது. விதவைக ளொபபநதம ஆயிசுகாலம வரையில் அசசொத்தை அனுபவிக்க மட்டுமே பெண்களுக்கு பாததியமுண்டு.

**445.** அநேக பெண்கள் இருநதால் அவாகளும விதவை களைப்போல சொததை சௌகரியததி னிமிததம தனித்தனியாய் பபிரிதது அனுபவிததுககொள்ளலாம. ஆனாலும அவரவர்கள் பிரிவுக்குவநத சொததுக்களில அவரவாகளுக்கு யாதொரு விசேஷ சுதநதிரமும ஏறபட்டுவிடமாட்டாது. 3 மது. ஹை. கோ. ரி. 317; 24 கல். 339; ஒருவள் இறந்தபிறகு அவளுடைய பங்கு மறற பெணகளான அவளிட சகோதரிகளையே ஸாவைவா ஷிப/ பாததியபபடி யடையும. 2 இ. அ. 113.

**446.** தௌகித்திரர்கள்.—எல்லாப் புத்திரிகளும இறநத பிறகே அவாகளின பிள்ளைகளான தௌஹிததிரர்கள வார்சாகி றாகள. தௌஹித்திரனனவன் தனனுடைய மாதாமகருக்கு நேரான வாரசேயனறி தன் தாயினுடைய வார்சாக ஏற்பட்டு தாயம பெறுகிறதிலலை. ஆனதுபறறி தௌஹிததிரர்கள் தங்கள் தாய்மாாகளுடைய அம்சத்துககுதத தக்கபடி யில்லாமல், எல்லோரும் சமமாகவே தாயம்பெறுவார்கள். அதாவது எல்லாப்பெண் களுடைய எலலாப்பிள்ளைகளும் மாதாமகருடைய சொத்திலசம பாத்தியஸதர்களாக இருக்கிறார்கள். 6 மது. ஹை. கோரி. 310.

உதாரணம்:—சொத்துதாரனுகிய மூல புருஷனுக்கு மூன்று பெண்களிருந்து, அவர்களில் முதல் பெண்ணுக்கு ஒரு பிள்ளையும், இரண்டாவது பெண்ணுக்கு இரண்டு பிள்ளையும், மூன்

ரூவது பெண்ணுக்கு மூன்று பிள்ளையுமிருந்தால், இந்த ஆறு தௌகித்தரர்களும் மூலபுருஷனுன மாதாமகருடைய சொத்தை சமமாக அடையவேண்டும. அதாவது ஒவ்வொரு தௌகித்திர னும ஆறில் ஒரு பங்கு சொத்தையடைவான. 6 மது. ஹை. கோ. ரி. 310; 1 அல். 608; 2 இ. அ. 113.

**447.** தௌகித்திரிகளுக்காவது வாரசுபாத்தியம ஏறபடுவ தறகு முநதியே இறநதுபோன தௌகித்திராகளுடைய பிளளை களுக்காவது இசசமீப வார்சுபாத்தியம கிடையாது. தாயம ஏறபடும்போது உயிரோடிருக்கும தௌகித்திராகளே முழுசொ த்தையுமடைவாாகள். தௌகித்திரனுடைய பிளளை பநதுவாக கததாருக்குள் ஒரு பின வார்சாகமட்டும வருவான. (11 மது. 287) தௌகித்திரியானவள் எல்லா பந்துக்களுக்கும பினனிட டு உள்ள ஒரு தூரவார்சாக எடுக்கபபட்டிருககிறுள். 17 மது. 182.

**448.** அவிபக்த குடும்பத்தைச சோந்தவாகளாயிருககும தௌகித்திரர்கள வாாசு பாததியபபடி யடைநதிருக்கிற மாதாமக ருடைய சொத்தை பாகித்துககொள்ளாமல ஏகோபிததும அனு பவித்துவரலாம். இசசொத்து விஷயததிலும அவாகளுககுள சர்வைவர் ஷிப் பாத்தியம் எற்படுகிறதென்றும அதுபறறி அவி பக்தமாயிருக்கும்போது அவாகளில எவனுவது ஒருவன அனை சந்ததியினறி யிறந்தால அவனுடைய பங்கு அவனுடைய பெண சாதி பெண்களுக்குச் சேராமல உயிரோடிருக்கும அவனிட சகோதராகளுக்கே சோந்துவிடும எனறும் சமீபததில் தீாமானி க்கப்பட்டிருக்கிறது. 25 மது. 678. (பிரிவி கௌனசில தீாபபு).

## பெற்ளேர்களும் பெற்றோர்களின் வர்க்கத்தாரும்.

**449.** பெற்றோர்.—தௌகிததிரனுமில்லாவிட்டால் சொத்த தானது தாயையும் தாயிககுப்பிறகு தகப்பனையுமடைகிறது. தாய் என்ற பதம் பெறறதாயைக்குறிக்கிறதேயன்றி தகபபனு டைய வேறு பெண்சாதியான தாயின் சக்களத்தியைக் குறிககி றதில்லை. 5 மது. 29; 8 மது. 107; 16 அல். 221.

**450.** ஸ்வீகாரபபிள்ளை விஷயத்தில் புருஷனுடன் கூட இருந்து ஸ்வீகாரம வாஙகிக்கொண்டவளே ஸ்வீகாரப்பிள்ளையின தாயாராக பாவிககபபடுவாள். 18 மது. 283.

**451.** தகபபனைக்காட்டிலும தாயே அதிக ரத்தசமபந்த முள்ளவளாக இருக்கிறபடியால் முதலில தாயும பிறகு தகபப னும வாாசுககிரமததில் எடுககப்பட்டிருக்கிறாாகள். பிள்ளையின சொத்தை தாயபாததியப்படி யடைகிற தாயானவள் புருஷ னிடசொத்தை யடையுமவிதவை யொபபந்தம ஆயிசுகாலமவரை யில மாததிரம அசசொததை அனுபவிகக சுதநதிர முடையவ ளாக இருககிறாள். (2 மது. ஹை. கோ. ரி. 402) அவளுக்குப பின அசசொத்து மூல புருஷனுடைய தகப்பனைச சேருகிறது.

**452.** அண்ணன் தம்பிகள்.—தகப்பனுமில்லாவிட்டால் தா யமானது உடன் பிறநதவாகளான அண்ணன தமபிகளைசசேரும. அவாகளில் ஒரே தாய வயிறறில் பிறநதவாகள் முநதியும தாயின் சககளததிக்குபபிறநத பினனோதராகள் பிறகுமவாாசாவாாகள். 1 கல. 27; 19 அல. 215.

**453.** மேலும பாகம் பிரியாமல் அவிபகதமாயிருக்கிற அணணன தமபிகளே முநதினவாாசுகளாகவும, பாகம பிரிநது போன அண்ணநதமபிகள பிநதின வாாசுகளாகவுமிருக்கிறாாகள். ஆனாலும ஒரே தாய்க்குப் பிறநத சகோதராகள் பாகம பிரிநத வாகளாகவும தாயின சக்களத்திக்குப் பிறநத பின்னோதரர்கள் பாகம பிரியாதவாகளாகவும இருநதால இவ்விருவகையாரும் சமமாய் தாயம பெறுவாாகள். 1 கல். 27; 16 மது. 440.

**454.** தாயம் ஏற்படுகிறகாலத்தில் சில அண்ணன் தம்பிக ளும சில அண்ணநதமபிகளுடைய பிளளைகளும இருநதால, உயி ரோடிருககிற அண்ணன தம்பிகளே வாாசாவாாகளேயன்றி இற நதுபோன அண்ணநதமபிகளுடைய பிள்ளைகள் வாாசாகமாட் டாாகள்.

**455.** ஒரே தாய்க்காவது சக்களத்தி தாய்க்காவது பிறந்த அண்ணநதம்பிகள் யாருமில்லாவிட்டால் அவர்களுடைய பிளளை

கள் வார்சாகிறார்கள். இவர்களிலும் சகோதரர்களுடைய பிள்ளைகள் முந்தியும் பின்னோதரர்களுடைய பிள்ளைகள் பிந்தியும் வார்சாகிறார்கள்.

**456.** அண்ணன்தம்பிகளுடைய பிள்ளைகள் தாயம் பெறும்போது அவர்கள் தங்கள் தகப்பன்மார்களின் அம்சத்துக்குத் தக்கபடியில்லாமல் எல்லோரும் (தௌகித்திரர்களொப்பந்தம்) சமமாகவே தாயம் பெறுவார்கள், 17 பம. 303,

**457.** அண்ணன்தம்பிகளுடைய பிள்ளைகளுமில்லாவிட்டால் அண்ணன்தம்பிகளுடைய பேரர்கள் வார்சாவார்கள். இவர்களிலும் சகோதரவர்க்கத்தைச் சேர்ந்தோர் முந்தியும் பின்னோதரவர்க்கத்தைச் சேர்ந்தோர் பிந்தியும் வார்சாகிறார்கள். மேலும் எல்லா அண்ணன்தம்பிகளுடைய எல்லாப் பேரர்களும் சமமாகவே தாயம் பெறுவார்கள். 17 பம, 303.

**458.** அண்ணன் தம்பிகளுடைய பிள்ளைகளுக்குப் பிறகு அவர்களுடைய பேரர்கள் வார்சுகளாவார்கள் என்பது மிதாக்ஷிரை கிரந்தத்தில் வெளிப்படையாய்ச் சொல்லப்படவில்லை. அதனால் இவர்கள் தங்கள் தகப்பன்மார்களுக்கு அடுத்தாப்போலுள்ள வார்சுகளல்லவென்றும் அண்ணன்தம்பிகளுடைய பிள்ளைகளுக்குப்பிறகு, தகப்பனுடைய அண்ணன்தம்பிகளான சிற்றப்பன் பெரியப்பன்மார்களும் அவர்களின் பிள்ளைகளும் வார்சாவார்களென்றும் மதுராஸ் ஹைகோர்ட்டார் முதலில் அபிப்பிராயப்பட்டு அவ்வாறு தீர்மானித்தார்கள். (5 மதா. 291) ஆனால் மிதாக்ஷிரையில் சொல்லப்பட்டிருக்கும் 'சகோதரன் பிள்ளை' என்ற வாசகம் சகோதரனுடைய பேரனையும் உட்படுத்தியதாகவே இருக்கிறதென்றும் மதுராஸ் ஹைகோர்ட்டாருடைய முன்சொன்ன அபிப்பிராயம் அவ்வளவு சரியானதல்லவென்றும் அல்லகபாத் ஹைகோர்ட்டார் ஆலோசித்து, அண்ணன் தம்பிகளுடைய பிள்ளைகளுக்குப்பிறகு அண்ணன்தம்பிகளுடைய பேரர்களே வார்சாகிறார்களென்று தீர்மானித்திருக்கிறார்கள். 24 அல. 128.

## பாட்டனும் பாட்டனுடைய வர்க்கத்தாரும்.

**459.** அண்ணன் தம்பிகளுடைய பேரர்களீருகவுள்ள தகப்பனுடைய வர்க்கத்தார் யாருமில்லாவிட்டால், தகப்பனுடைய தாயாரான பாட்டியும், அவளுக்குப்பின் தகப்பனுடைய தகப்பனை பாட்டனும் வார்சாவார்கள்.

**460.** பாட்டனு மில்லாவிட்டால் அவனுடைய பிள்ளைகளான பெரியப்பன் சிறப்பன்மார்களும், அவர்களுக்குப்பின் அவர்களுடைய பிள்ளைகளும், அதற்கும் பிறகு அவர்களுடைய பேரர்களும், வார்சாகிருர்கள்.

**461.** தகப்பனுடைய சகோதர வர்க்கத்தாருக்கும் பின்னேதர வர்க்கத்தாருக்கும் தாயபாத்தியத்தில் யாதொரு வித்தியாசமு மில்லை.

## பூட்டனும் பூட்டன் வர்க்கத்தாரும்.

**462.** பாட்டனுடைய வர்க்கத்தாரும் அற்றுப்போயிருந்தால், பாட்டனுடைய தாயாரும், பாட்டனுடைய தகப்பனை பூட்டனும், பூட்டனுடைய பிள்ளைகளும், பேரர்களும், ஒருவரின்பின் ஒருவராய் வார்சாவார்கள்.

## சகுல்யர்களும் சமானோதகர்களும்.

**463.** பூட்டனுடைய வர்க்கத்திலுள்ள தாயாதிகளீருகவுள்ள முதல மூன்றுதலை முறைக்குட்பட்ட சபிண்டர்கள யாரும் இல்லாவிட்டால், நான்காவது ஐந்தாவது ஆருவது தலைமுறையர்களான தூரசபிண்டர்கள் (அல்லது சகுல்யர்கள்) வார்சாகிருர்கள். கொள்பேரனுடைய பிள்ளையான முதலாவது சகுல்யனே இவ்வர்க்கத்தாருக்குள் முதல் வார்சாக இருக்கிருன். இவனுக்குப்பிறகு இவனுடைய பிள்ளைகளும் பேரர்களும், அவர்களுக்கும் பிறகு மற்ற சகுல்யர்களும் ஒருவருக்குப்பின் ஒருவராய் தாயம் பெறுவார்கள்.

464. சகுல்யர்களிலும் யாருமில்லாவிட்டால் ஏழு முதல் பதின்மூன்று ஈறுகவுள்ள ஆண் தலைமுறையைச்சேர்ந்த சமானோதக் தாயாதிகள் ஒருவருக்குப்பின் ஒருவராய் வார்சுகளாவார்கள்.

## பந்துக்கள்.

465 சமானோதகர்கள் ஈறுகவுள்ள எல்லா தாயாதிகளும் அற்றுப்போயிருந்தால் வாரசு பாத்தியமானது இறந்தவனுடைய பந்து வர்க்கத்தாரைச் சேருகிறது. அவர்களில் சமீப பந்துக்கள் முந்தியும தூரபந்துக்கள் பிந்தியும் வார்சாவார்கள். இவ்விரு வகையோரிலும தன்வழியைச சேர்ந்தவாகள் முந்தியும், தகப பன் வழியைச சேர்ந்தவர்கள் பிறகும, தாய் வழியைச சேர்ந்த வாகள் அதற்குமபிறகும் வார்சாவார்கள். 16 மது. 30.

466. பநதுக்களில் முதல்வனும சிரேஷ்டனுமான தௌ ஹித்திரனைபபற்றி முனனமேயே சொல்லப்பட்டிருக்கிறது. இர ண்டாவது பந்துவான புத்திரனுடைய தௌஹித்திரனே பநது வர்க்கததாரில முதல் வாரசாக இருக்கிறான். அவனுக்குப்பிறகு பேரனுடைய தௌஹிததிரனும் அதறகும பிறகு தகப்பனுடைய தௌஹித்திரனை மருமானும (சகோதரி மகன) வாரசாகிறாகள.

467. சகோதரி மகனை மருமானுடைய வாரசு பாததிய த்தைப்பற்றி மிதாக்ஷரை கிரந்தத்தில் வெளிப்படையாய்ச சொல லப்படாமலிருநதாலும், அவனுக்குங கிழபபட்ட அநதஸதையு டைய அநேகர் வார்சுகளாக சொல்லப்படடிருப்பதால், அவனும வாரசுவாக்கத்தில் சேர்நதவனுகவே இருப்பதோடு வரிசைக்கிர மத்திலும் மேலான படியிலேயே இருக்கிறனெனறும தீர்மானி க்கப்பட்டிருக்கிறது. 6 மது. ஹை. கோ. ரி. 278; 2 மது. 304; 5 மது. 241; 20 அல். 191.

468. சகோதரியுடைய பிள்ளை எப்படியோ அப்படியே பின்னேஞதரியுடைய பிள்ளையும் வார்சாக இருக்கிறன். 15 மது. 300.

**469.** மேலும் மருமானுடைய பிள்ளைக்கும் வார்சு பாத்தியமுண்டென்றும், அவன் அம்மானுடைய பிள்ளையைவிட முந்தின வார்சென்றும் மதராஸ் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிருர்கள். 20 மது. 342.

**470.** ஆனல் மருமானுடைய மகன் மருமானுக்கு அடுத்த படியில் வார்சாகமாட்டான். மேலும அம்மானைக்காட்டிலும மருமான சமீப வார்சாக இருந்தாலும், அம்மானைக்காட்டிலும் மருமானுடைய பிள்ளை சமீப வார்சாக இருக்க யாதொரு நியாயமுமில்லை. மருமான் பிள்ளையைவிட அம்மானே அதிக ரத்தசம்பாதமுள்ளவனுக இருப்பதும தவிர ஆசௌச (தீண்டல்) விஷயத்திலும் அம்மானே மேலானவனுக இருக்கிருன். ஆகையால மருமானுடைய பிள்ளையானவன் அம்மானுக்குப் பிறகும அம்மானுடைய பிள்ளைக்கு முந்தியுந்தான் வார்சாக இருக்கவேண்டுமென்று ஊகிக்கத்தக்கதாயிருக்கிறது.

**471.** மருமானுககுப் பிறகு சகோதராகளுடைய தௌகித்திராகளும, சகோதரர்களுடைய பிளளைகளின தௌகித்திராகளும, அதறகுமபிறகு பாட்டனுடைய தௌகித்திரனை அத்தைமகனும, அவனுக்கும் பிறகு சிற்றப்பன் பெரியப்பன்களுடைய தௌகித்திராகளும், வார்சாகிருாகள்.

**472.** மேறசொனனவர்களுக்குப்பால் தாய் வழியைச சேர்ந்த சமீப பந்துக்களான தாயினுடைய பெற்ரோர், மாமன், மாமன் மகன், சிறிய தாயார் பெரிய தாயாாகளின பிள்ளைகள், மாமனிட பேரன் ஆகிய இவர்கள் வாாசாகிருர்கள். 11 மு. இ. அ. 448; 11 மது. 287; 15 மது. 421; 19 மது. 405; 5 பம. 597.

**473.** இவர்களுக்கும் பிறகு தகப்பனுடைய தாய் வழியைசசோந்த பநதுககள் வாாசாகிருர்கள்.

**473-(a)** மேலே சொல்லப்பட்ட சமீப பந்துக்களுக்கும் பிறகு ஒவ்வொரு வர்க்கத்திலுமுள்ள தூரபந்துக்கள் அந்தந்த வரிசைக்கிரமத்தில் வார்சுகளாக வருவார்கள்.

# 12-வது அத்தியாயம்,

## ஸ்திரீகளின் சொத்துக்கள்,

**481.** ஸ்திரீகளுடைய சொத்துக்களானவை அவைகள் கிடைக்கப்படும் வழியையனுசரித்து பொதுவாய் இருவகையாகப் பிரிக்கப்படலாம். அதாவது:—

(1) புருஷன், தகப்பன், பிள்ளை, சகோதரன் முதலான ஆண் பாத்தியஸ்தர்களிடமிருந்து வார்சு பாத்தியப்படி கிடைக்கும் சொத்து,

(2) மேற்சொன்ன விதமாயல்லாமல் மற்ற வழிகளில் கிடைக்கும் சொத்து,

**482** ஸ்திரியால் உடைத்தாயிருக்கப்படும் சொத்துக்கள் எல்லாம் பொதுவாக ஸ்திரீதனமென்று சொல்லப்படலாம், ஸ்திரீதனமென்ற பதத்திற்கு ஸ்திரீயினுடைய தனம் அல்லது சொத்து என்பது பொருள். நம்முடைய ஆதாரகிரந்தமாகிய மிதாக்ஷிரையிலும் ஸ்திரீயினுடைய எல்லா சொத்துக்களுக்கும் ஸ்திரீதனமென்ற பொதுவான பெயரே கொடுக்கப்பட்டிருக்கின்றது. ஆனாலும் முழுசுதந்திரத்தோடு ஒரு ஸ்திரீக்கு பாத்தியப்பட்டிருக்கும் சொத்துக்களே ஸ்திரீதன மென்று சொல்லத்தகுந்ததாகும். மேற்கூறிய இருவகை சொத்துக்களில் முதலாவது வகுப்பு சொத்தில் ஸ்திரிகளுக்கு முழுசுதந்திரம் இல்லை. இரண்டாவது வகுப்பு சொத்தில் தான் அவர்களுக்கு அநேகமாய் முழுசுதந்திரமிருக்கிறது, மேலும் அது அவர்களுக்குப்பின் அவர்களுடைய வார்சுகளையே சேரத்தக்கதாயிருக்கின்றது. ஆகையால் இரண்டாவது வகுப்புச் சேர்ந்த சொத்துக்களே ஸ்திரீதனமென்று சொல்லப்படும், முதலாவது வகுப்பு சொத்துக்களில் ஸ்திரீக்கு தன் ஆயுசுகாலம் வரையில் அனுபவிக்கமட்டும் பாத்தியமிருப்பதாலும், அச்சொத்துக்கள் அவளுக்குப்பின் அவளுடைய வார்சு

களைச்சேராமல் மூலபுருஷனுடைய பின்வாரிசுகளையே சேரத்தக்கதாயிருப்பதாலும் அது ஸ்திரீதனமென்று சொல்லத் தகுதியுள்ளதாகமாட்டாது. 9 கல். 725,

## I. முதலாவது வகுப்பைச்சேர்ந்த-அதாவது, ஸ்திரீகளுக்கு முழுசுதந்திரமில்லாத-சொத்துக்கள்.

**483.** புருஷன், தகப்பன், பிள்ளை, பேரன், சகோதரன், பாட்டன் முதலான புருஷ பாத்தியஸ்தர்களிடமிருந்து வாரிசு பாத்தியப்படி ஸ்திரீகளுக்குக் கிடைக்கும் சொத்துக்கள் இவ்வகுப்பைச் சேர்ந்ததாகும். மேலே 412, 413, 414-வது பிரிவுகளைப் பார்க்க.

**484.** புருஷன் இறந்தபிறகு அவனிடமிருந்து தாயபாத்தியப்படி பெண்சாதி அடையும் சொத்தானது விதவைசொத்து என்று சொல்லப்படும். தகப்பன், பிள்ளை, பேரன், சகோதரன் முதலானவர்களிடமிருந்து தாயபாத்தியப்படி சொத்தையடையும் புத்திரி, தாயார், பாட்டி, சகோதரி, முதலான ஸ்திரீகளுக்கும் தங்களுடைய தாய சொத்துக்களில் புருஷன் சொத்தில் விதவைக்கு எவ்வளவு சுதந்திரமிருக்கிறதோ அவ்வளவு சுதந்திரந்தான் இருக்கிறது. ஆகையால் விதவை சொத்துக்குரித்தான சட்ட விதிகள் யாவும் மற்ற ஸ்திரீகள் தாயத்தாலடைந்திருக்கும் சொத்துக்களுக்கும் உரித்தானதாக இருக்கின்றன. 2 மது. ஹை. கோ. ரி. 402; 6 அல். 431.

> குறிப்பு.—விதவை என்ற பதமானது அமங்கலியாயிருக்கும் எல்லா ஸ்திரீகளையும் பொதுவாய்க் குறிக்கிறதாயிருந்தாலும், இறந்துபோன புருஷனுக்குப் பெண்சாதி முறையிலிருப்பவளை அம்முறையில் வைத்துப்பேசியதாகவே இங்கும் மற்ற இடங்களிலும் அருத்தங்கொள்ளவேண்டும்.

**485** விதவை முதலான எல்லா ஸ்திரீகளும் இவ்வகுப்பைச் சேர்ந்த தாயசொத்துக்களைத் தங்கள் ஆயுசுகாலம் வரை

யில் அனுபவித்துக்கொள்ளமட்டும் சுதந்திரமுடையவர்களாக இருக்கிறார்களேயன்றி, அவற்றைத்தங்களிஷ்டப்படி விநியோகம் செய்ய அவர்களுக்கு அதிகாரமில்லை. மேலும் அந்த ஸ்திரீகள் இறந்த பிறகு அச்சொத்துக்கள் அவர்களுடைய வாரசுகளுக்குப்போகாமல் எவனிடமிருந்து தாயமாகப் பெறப்பட்டதோ அந்த மூலபுருஷனுடைய பின் வார்சுகளுக்கே சேருகின்றன. 8 மூ. இ. அ. 529; 11 மூ. இ. அ. 487; 4 கல். 744; 6 இ. அ. 15; 3 மது. 290; 8 மது. ஹை. கோ. ரி. 88; 5 பம். 670; 6 மது. 310.

மூலபுருஷனுடைய ஸ்தாவர சொத்துக்களிலன்றி ஜங்கம சொத்துக்களிலும் விதவை முதலிய மேற்சொன்ன ஸ்திரீகளுக்கு முழுசுதந்திரம் கிடையாது. 11 மூ. இ அ. 487; 8 மது. 290.

**486.** புருஷனுடைய சொத்தை தாயபாத்தியபபடியடைய விதவையானவள் வியபசாரதோஷ மில்லாதவளாக இருக்கவேண்டும். ஆனால் தாயபாத்தியப்படி சொத்தையடைந்தபின் அவள் வியபசாரியாக இருந்தாலும் ஏற்கனவே கிடைத்ததாயம் அவளைவிட்டு விலகிப்போகமாட்டாது. விதவையைத்தவிர வேறு முறைமையிலிருக்கிற எந்தஸ்திரீக்கும் வியபசாரதோஷமானது தாயபாத்தியத்துக்குத் தடையாயிருக்கமாட்டாது. 5 மது. 149; 26 மது. 509.

**487.** விதவை, புத்திரி, சகோதரிமுதலான ஸ்திரீ வார்சுகள் ஒருவராயிராமல் பலராயிருந்தால், அதாவது பலவிதவைகளும், பலபுத்திரிகளும், பலசகோதரிகளுமாக இருந்தால், இவர்கள் எல்லோரும் தாயசொத்தை சமமாகவே அடையவேண்டும். அச்சொத்தை ஏகோபித்து அனுபவித்துக்கொள்ள அவர்களுக்குள் சவுகரியப்படாமலிருந்தால் அவர்கள் அதைத்தங்களுக்குள் சமமாகப்பிரித்துக்கொண்டு தனித்தனியாய் அனுபவித்தும்வரலாம். 1 மது. 290; 4 இ. அ. 212; 16 இ. அ. 186; 24 மது. 441. ஆனாலும் அவ்வாறு பிரித் தனுபவிப்பது பாகம்போ

லாய்விடமாட்டார்து. அவர்களில் ஒருத்தி இறந்துபோனால் அவளுடைய பங்கானது பின்வார்சுகளுக்கு உடனே சேராமல் உயிரோடிருக்கும் மற்ற ஸதிரீகளையே அடையும். 3 மது. ஹை. கோ. ரி. 424; 11 மூ. இ. அ. 487; 16 மது. 1; 26 கல். 189; 23. மது. 504. மற்றவர்களும் ஒருத்தியின்பின் ஒருத்தியாய் இறந்து கொண்டே வந்தால் கடைசியில் உயிரோடிருக்கும் ஸதிரீக்கே முழுசொத்தும் சேருகின்றது. யாராவது ஒருத்தி தன் பங்கைப் பிறனொருவனுக்குக் கிரயம் செய்திருந்தாலும் கிரயதாரன் அக்கிரயசொத்தை அவளுள்ளவரையில் தான் அனுபவிக்கலாம். அவளிறந்தபிறகு அச்சொத்து உயிரோடிருக்கும் மற்ற ஸதிரீகளையே சேரத்தக்கதாயிருக்கின்றது. 16 மது. 1; 23 மது. 504.

**488.** எல்லா ஸ்திரீ வார்சுகளும் இறந்துபோன பிறகு கடைசியாய் சொத்தையடையும் ஆண் வாரசானவன் அனந்தர வாரசு என்று சொல்லப்படுவான். அப்படிப்பட்ட அனந்தர வாரசானவன் மூலபுருஷனுடைய சொத்தையடைந்து விட்டால் அது அவனுக்குப்பின் அவனுடைய வாரசுகளுக்கே சேருமேயல்லாது மூலபுருஷனுடைய அப்புறமுள்ள பின்வார்சுகளுக்கு தாயம் திரும்பமாட்டாது.

**489.** வாரசு பாத்தியப்படி அடைந்திருக்கிற ஒரு சொத்தின் மூலபாகத்தை விதவை முதலிய ஸ்திரீகள் தங்கள் இஷ்டம்போல பந்தகபராதீனங்கள் செய்ய அதிகாரமில்லாதவர்களாக இருக்கிறார்கள். ஆனால் அச்சொத்தின் வரும்படிகள் பூராவிலும் அவர்களுக்கு பூரணசுதந்திரமிருக்கிறது. அவ்வரும்படிகளை அவர்கள் தங்களிஷ்டம்போல் செலவழித்துக்கொள்ளலாம். மூலசொத்தின் வரும்படியானது அவசியமாயும் நியாயமாயுமுள்ள செலவுகளுக்குப் போராமலிருந்தால் அப்போதுமட்டும் அவர்கள் மூலசொத்தை அவசியத்தினளவுக்கு விநியோகம் செய்யலாம். அப்பவும் அவசியத்தின் நியாயமான அளவைமீறி மூலசொத்தைச் செலவழிக்கவாவது விநியோகப்படுத்தவாவது கூடாது. 21 கல். 190; 8 மது. 290.

**490.** மூலசொத்தைக்கூட விநியோகஞ்செய்யும்படியான அதிகாரத்தைக் கொடுக்கிற அவசியமாயும் நியாயமாயும் உள்ள செலவுகள் என்னவென்றால் —

(1) ஆஸ்திகாரனை புருஷன் பட்ட கடன்களும் அவன்பேரிலுள்ள கோர்ட்டு டிக்கிரிகளும். 13 மத. [illegible]; 18 பம். 534; 21 கல. 190.

(2) ஆஸ்திகாரனுடைய உத்தரக்கிரியை புண்ணிய செலவுகள்.

(3) சொத்தையடைந்திருக்கிற ஸ்திரீ வாரிசுகளுடையவும், ஆஸ்திகாரன் உயிரோடிருந்தால் அவனால் இவனுடைய எவர்கள் சம்ரக்ஷிக்கப்படவேண்டுமோ அவர்களுடையவும் காலக்ஷேபாதிச் செலவுகள். 12 கல. 52.

(4) ஆஸ்திகாரனை யுத்தேசித்துச் செய்யப்படும் சிரார்த்தம் வகையறா வைதீகச் சடங்குகளின் செலவுகள்.

(5) ஆஸ்திகாரனுடைய குடும்பத்திலுள்ள கன்னிகைகளின் விவாகாதிச் செலவுகள். 22 மத. 113.

(6) தாயத்தாரடைந்திருக்கிற வீடு பூமி வகையறா பூர்விக சொத்துக்கள் ஜீர்ணமாயும் சிதைந்தாயும் போகாமலிருக்கும்படி அப்போதைக்கப்போது செய்துவரவேண்டிய மராமத்து வகையறாச் செலவுகள். 10 கல. 823.

(7) தாயசொத்துக்களின் சர்க்கார் கந்தாயங்களும் கந்தாய பாக்கிகளும். 4 அல. 532.

(8) தாயசொத்தைப் பாதுகாப்பதின் பொருட்டு ஏற்படும் வியாச்சிய செலவுகள். 4 அல. 532; 12 கல. 52.

**491.** மேலே சொன்ன செலவுகள் அநேகமாய் எல்லா ஸ்திரீகளுக்கும் பொதுவாயுள்ளன. புருஷன் சொத்தையடைந்

திருக்கிற விதவைக்கு புருஷனுடைய பரலோகஸாதகத்தின்பொ ருட்டுள்ள சாமான்யமான தானதாமங்களைச் செய்யவும் அதுநிமி த்தம் அவசியமானால் மூலசொத்தைக் கொஞ்சம் செலவிடவும் அதிகாரமுண்டு. அப்படிச் செலவு செய்வதானது குடும்ப ஆஸ திக்கும் அந்தஸ்துக்கும் தக்கபடியாயிருக்கவேண்டும். ஆனால் புருஷன் பொருட்டல்லாமல் தன் பொருட்டாகவே தானதாமங் களைச் செய்துகொள்ளுவதற்காக மூலசொத்தைச் செலவழிக்க விதவைக்கு எவ்வளவும் அதிகாரமில்லை. 4 அல். 482; 22 கல். 506.

**492.** புண்ணியஸ்தலங்களுக்கு யாத்திரை போதல், கோ வில் கட்டிவைத்தல், குளம் வெட்டிவைத்தல், யாகம் செய்வித் தல், அன்னசத்திரம் போடுதல் முதலானவை சாமான்ய தர்மங் களல்லவாகையால் அவைகளின் பொருட்டு விதவையானவள் தாயசொத்தை அழிக்கக்கூடாது. 8 மது. 552.

**493.** ஆனாலும் தாயசொத்தானது ஏராளமாக இருந்தால் மேற்சொன்ன விசேஷ தருமங்களின் பொருட்டும் விதவைகள் சொற்பபாகத்தைச் செலவுசெய்யலாம் என்று தீர்மானிக்கப்பட் டிருக்கிறது. 11 மது. 238.

**494.** தர்மவிஷயமாயும் மதவிஷயமாயும் உள்ள செலவு களைச் செய்யுமதிகாரம் புருஷனுடைய சொத்தை வாரசாக அடைந்திருக்கிற விதவைக்கு அல்லாமல், தகப்பன், சகோதரன் முதலானவர்களிடமிருந்து தாயம் பெற்றிருக்கிற புத்திரி, சகோ தரி முதலான மற்ற ஸ்திரீவார்சுகளுக்கு அவ்வித சுதந்திரம் கிடையாது. ஆகையால் தர்மவிஷயமாயும் வைதீக விஷயமா யுமுள்ள மேற்கூறிய செலவுகளின் பொருட்டு விதவையைத் தவிர மற்ற ஸ்திரீ வார்சுகள் மூலசொத்தை எவ்வளவும் செலவ ழிக்கக்கூடாது.

**495.** காலாவதி தோஷத்துக்குட்பட்டுப்போன கடனைத் தீர்க்கும்படி கடன் வாங்கினவனையாவது அவனிட வார்சுகளையா

வது கடன் கொடுத்தவன் கட்டாயப்படுத்த இடமில்லையாகையால், ஆஸ்திதாரன் பட்டிருக்கிற கடனகளில் காலாவதியாய்ப்போனவைகளைத் தீர்ப்பதற்காக ஸ்திரீ வாரசுகளால் செய்யப்படும் தாயசொத்தின் விநியோகஙகள் செலலமாட்டாதெனறு பமபாய் ஹைகோர்ட்டார் முதலில் தீரமானித்திருந்தார்கள். ஆனால் அநத தீர்ப்பு இப்பால் மாறிபபோய் விட்டது. காலாவதியாய்ப்போன கடன்களைத் தீர்ப்பதற்காகவுஙகூட தாயசொத்தை ஸ்திரீ வார்சுகள் விநியோகம் செய்யலாமென்றும அபபடிபபட்ட விநியோகஙகள் சட்டப்படி செலலததகுநததாகுமென்றும எலலா கோர்ட்டாராலும தீரமானிக்கப்பட்டிருக்கிறது. 11 பம. 320; 13 மது. 189; 21 கல. 190.

**496.** ஆனால காலாவதியாகாத கடனகளிருக்குமபோது காலாவதியாய்பபோன கடனைத தீரபபது நியாயமாகமாட்டாது. அது மோசடியுமாகும. தவிர அநேக கடன்காரர்களிருகக சிலருடைய கடன்களைமட்டும் தீரதது மறறவாகளிட கடனகளைத தீரககாமலிருப்பதும மோசடியாகும. மோசடியான எண்ணத்துடன் செய்யப்படுகிற விநியோகஙகள் சடடப்படி செலலமாடடாது. ஆகையால் காலாவதியாய்பபோன கடன்களைத் தீரககும் பொருட்டு தாயசொததை விநியோகம செய்வதில ஸ்திரீகள நியாயமாயும யோக்கியமாயும நலல எணணததோடும நடநது கொள்ளவேண்டும. 11 பம. 166.

**497.** அவசியமான செலவுகளின பொருட்டு தாயசொத்தை விநியோகம செய்வதில் விதவை முதலிய ஸ்திரீ வாரசுகளுக்குள்ள அதிகாரமானது ஒரு அவிபக்த குடுமப மானேஜருடைய அதிகாரத்தைப்போன்றதாயிருக்கிறது. அதாவது நியாயமான அவசியத்தின் கிரமமான அளவை மீறி சொததை விநியோகப்படுத்த அவர்களுக்கு அதிகாரமில்லை. ஸ்திரீ வார்சுகளுடைய சுதந்திரம் இவ்வாறு மடடாயிருப்பதால் அவர்களிடமிருநது சொத்தை விநியோகம் பெறுகிறவர்கள் அவ்விநியோகத்தின அவசியத்தையும நியாயத்தையும் பற்றி செவ்வையாய் விசாரித்தறிந்து கொண்டும் நல்ல எண்ணத்தோடும நடவடிக்கை செய்யவேண்டும். 4 பம். 482; 11 பம். 320; 14 அல். 420; 21 கல். 190.

**498.** அவசியமான செலவு ஏற்பட்டுவிட்டால், அவசியத்தினளவுக்கு ஸ்திரீயானவள் தன் யுக்தம்போல சொத்தை பந்தகமாவது பரூதீனமாவது செய்துவிடலாம. பந்தகம் செய்யவேண்டுவது லாபகரமாயிருக்கும்போது பரூதீனமே செய்துவிட்டாலும அது பிசகாகமாட்டாது.

**499.** விதவை முதலிய ஸ்திரீவார்சுகளால் செய்யப்படும் தாயசொத்தின் பந்தகபரூதீனங்கள் கிரமமாயும நியாயமாயும் ஏறபட்டிருநதால் அவைகளுக்கு அனந்தரவாரசானவன் சம்மதி கொடுததிருநதாலும இராவிட்டாலும கட்டுப்பட்டவனுகவே யிருககிறன. 18 பம். 534,

**500.** ஆனுல அவசியமான காரணமின்றி ஸ்திரீ வார்சுகளால செய்யப்பட்ட பந்தகபரூதீனங்கள் பின்வாரசுகளைக கட்டுபபடுததமாட்டாது. ஸ்திரீகளுடைய அதிகாரம இவ்வாறு மட்டாயிருததலானது அனநதரவாரசுகளின லாபததின் பொருட்டும அக்கறையின பொருட்டும ஏறபட்டதலல. ஸ்திரீ ஜாதியாய இருககிற காரணத்திஞலேயே அவாகளுக்கு தாயசொததில் முழு சுதந்திரங்கிடையாது. பினவாரசு ஒருவன் இருநதாலும இலலாவிட்டாலும ஸ்திரீகளுடைய சுதநதிரம எப்போதும மட்டானதாகவே இருககினறது. ஆனதுபற்றி யாதொரு அனநதரவாரசு இலலாமல சொததானது கடைசியாய சாககாரரைச சேருவதாயிருநதாலும தாயசொததை அவசியமினறி விநியோகம செய்ய ஸதிரீவாரசுகளுககு அதிகாரமில்லை. 8 மூ. இ. அ. 500.

**501.** ஆனுலும ஸதிரீ வாரசால் அவசியமின்றி செய்யப்படும விநியோகங்கள் முறறிலும தள்ளுபடியுள்ளதாகமாட்டாது. ஸதிரீயானவள தன்னுல் செய்யப்பட்ட விநியோகங்களுக்கு தான் முற்றிலும கட்டுப்பட்டவளாகவே யிருக்கிறுள். அவளுடைய ஜீவதசைககுப பிறகே அவை செல்லுபடியுள்ளதாகமாட்டாது.

ஆகையால் ஒரு ஸதிரீ வார்சிடமிருந்து தாயசொத்தை விநியோகம பெறுகிறவன் அவளுள்ளவரையில் அச்சொத்தை

அனுபவிக்கலாம். அவனுடைய ஜீவதசைக்குப் பிறகே அவன் அனந்தரவார்சால அப்புறப்படுத்தப்படுவான். 1 மது. ஹை. கோ. ரி. 206; 2 மது. ஹை. கோ. ரி. 393; 1 அல. 503; 10 கல. 324; 22 மது. 522.

**502.** ஸ்திரீ வார்சுகளுடைய அதிகாரம் மட்டாயிருபப தால அவாகளால வாங்கபபட்ட கடன்களும செய்யப்பட்ட விநி யோகங்களும பின வாரசைக் கட்டுப்படுத்துகின்றனவென்று வாதாடுகிறவன, அக்கடனகளும விநியோகங்களும அவசியமா யும நியாயமாயுந் தான் ஏற்பட்டனவென்றும தகுந்த விசாரணை யின் பேரிலும நல்ல எண்ணத்தினபேரிலுமே ஸ்திரீ வாரசுடன தான நடவடிக்கை நடததியதாகவும் ருசுப்படுததக் கடமைப்பட் டவனாக இருக்கிறான். 6 கல். 843; 4 பம. 462; 24 இ. அ. 183; 21 கல். 190, (1882 வருஷத்திய 4-வது ஆக்டு 38-வது பிரி வையும், பாரக்க)

**503.** ஆகையால் விதவை முதலிய ஸதிரீ வார்சுகளிடமிரு நது சொததுககளை விநியோகம பெறுகிறவாகளும் அசசொது துக்களை நமபி அவர்களுக்குக் கடன் கொடுககிறவாகளும அந தஸதிரீகளுடைய வரவு செலவுகளைப்பற்றியும் அவசியஙகளைப பற்றியும செவ்வையாய் விசாரிதது அறிநதுகொள்ளுவதுடன மிக்க ஜாககிரதையாகவும யோக்கியமாகவும அவர்களுடன் நட வடிக்கை நடததவேண்டும. 6 கல. 843.

**504.** விதவை முதலிய ஸதிரீ வாரசானவள் அடுதத பின் வார்சினுடைய சம்மதததின்பேரில தாயசொததை விநியோகப் படுத்தினால், அவ்விநியோகததுககு யாதொரு அவசியமுமில்லாம லிருந்தபோதிலும், சமமதம் கொடுத்த அப்பின்வாரசு அதறகுக் கட்டுப்பட்டவனாகவே யிருக்கிறான், 5 கல், 44; 10 கல். 1102; 5 பம். 563; 3 அல், 362.

**505.** பின் வார்சுகள் அநேகராயிருந்தால் ஸ்திரீயானவள் தாயசொத்தை விநியோகம செய்வதறகு அவ்வநேகருடைய சம் மதத்தைப் பெறவேண்டும. அல்லது அவர்களில் பெரும்பான்

யையோருடைய சம்மதத்தையாவது பெறவேண்டும். பின் வார்சுகளுடைய சம்மதங்களைப் பெற்றுக்கொண்டு ஸ்திரீயானவள் தாயசொத்தை விநியோகம் செய்தால் அவ்விநியோகம் நியாயமாயும் அவசியமாயும் உள்ள காரணங்களால் ஏற்பட்டிருக்கலாமென்று நம்பக்கூடியதாகும். 5 கல். 49.

**506.** ஆனால் பக்க வார்சு இருக்க அவனுடைய சம்மதம் பெறாமல் ஒரு தூரவார்சினுடைய சம்மதத்தை மட்டுமே பெற்றுக்கொண்டு தாயசொத்தை விநியோகம் செய்வது சரியானதாகமாட்டாது.

**507.** மேலும் தூரவார்சை மோசம்பண்ணவேணுமென்ற கெட்ட எண்ணத்தின்பேரில் ஸ்திரீயானவள் ஒருபக்க வாரிசினுடைய சம்மதத்தைப் பெற்றுக்கொண்டு விநியோகம் செய்திருந்தாலும் அந்த மோசடியான நடவடிக்கை எவ்வளவும் செல்லமாட்டாது. 13 மூ. இ. அ. 228.

**508.** ஒரு ஸ்திரீ வார்சானவள் தன்னிட தாயசொத்தைத் தன் ஜீவகாலத்திலேயே அடுத்த ஒரு பின் வார்சுக்குக் கொடுத்துவிட்டாலும் அதினாலேயே அவ்வடுத்த பின்வார்சு அச்சொத்துக்கு பாத்தியவானாய் விடமாட்டான். அந்தஸ்திரீயினுடைய மரணகாலத்தில் எவன் அனந்தரவார்சாக ஏற்படுகிறானோ அவனே அச்சொத்துக்கு பாத்தியஸ்தனாவான். அதாவது காலாந்தரத்தில் ஏற்படும் அனந்தர வாரிசினுடைய கிரமமான பாத்தியம் பிறரால் எவ்விதத்திலும் தடுக்கப்படமுடியாது. 19 இ. அ. 30 19 கல். 236; 21 மது. 128.

**509.** விதவை முதலிய ஸ்திரீ வார்சுகளுக்கு தாயசொத்தின் மூலபாகத்தில் மட்டுமே மேற்சொன்னவாறு முழுசுதந்திரமில்லையன்றி, அச்சொத்தின் வருமபடிகள் முழுவதும் அவர்களுக்கு சர்வசுதந்திரமாய் பாத்தியப்பட்டதாக இருக்கின்றன. அவ்வருமபடிகள் முழுவதையும் அவர்கள் தங்களிஷ்டப்படி செலவழித்துக்கொள்ளலாம். ஸ்திரீயானவள் தன் செலவுகளுக்கு எவ்வளவு பிடிக்குமோ அவ்வளவை மட்டும் செலவு செய்துகொ

ண்டு பாக்கியை மீந்துவைக்கக் கடமைப்பட்டவளல்ல. வரும் படிகளுக்கும் அதின் செலவுகளுக்கும் அவள் கணக்கு வைக்க வேண்டுமென்ற அவசியமுமில்லை. தாயசொத்தை அனுபவிக்கும் விஷயத்தில் அவள் ஒரு டிரஸ்டி யொப்பந்தமில்லாமல் தன சொந்தமாகவே அனுபவிக்கிறாள். தாயசொத்து ஏராளமாக இருந்து அதன் வரும்படிகளும் ஏராளமாக இருந்தாலும் அவ்வரும்படிகளெல்லாவற்றையும் அவள் தன்னிஷ்டப்படி செலவழித்துக்கொள்ள சுதந்திரமுடையவளாக இருக்கிறாள். மேலும் அவ்வருமபடிகளைக்கொண்டு வாங்கப்படுகிற சொத்துக்களையும் அவள் தன் இஷ்டம்போல் விநியோகம் செய்துவிடலாம். 6 மூ. இ. அ. 433; 8 மதா. 290; 25 மதா. 351..

**510.** ஆனால் மீதமாகும் ,வரும்படிகளைச் செலவழித்துக் கொள்ளாமல் மூலசொத்தோடே சேர்த்துக் கலந்துவிடுவதுடன் அதில் தனியான சுதந்திரம பாராட்டிக்கொள்ளாமல் அதையும மூலசொத்தைப்போலவே ஸ்திரீயானவள் பாவித்து வந்திருந்தால், அப்படிப்பட்ட விருத்தியம்சத்தையும பிறகு தன் இஷ்டப்படி பந்தகபறாதீனங்கள செய்ய அவள் அதிகாரமில்லாதவளாக ஆய்விடுகிறாள். 5 கல். 512; 14 கல. 861; 4 மதா. 152; 14 இ. அ. 63; 10 பம். 478.

**511.** பின்னிட்டு சமயம் வருமபோது செலவழித்துக் கொள்ளலாமென்ற எண்ணங்கொண்டு ஸ்திரீயானவள் தாயசொத்தின் வரும்படிகளை மீந்துவைத்தால அப்படிச்சேர்த்துவைக்கப்பட்டிருக்கும் விருத்தியமசத்தை அவள் யாதொரு நிர்பந்தமுமின்றி தன் இஷ்டம்போல் செலவு செய்துகொள்ளலாம. மேலும தாயசொத்தின வரும்படியிலிருந்து ஸ்திரீயால் வாஙகப்பட்டிருக்கிற சொத்து அவளுடைய தனியான சொந்த சொத்தென்றே சாதாரணமாய் பாவிக்கப்படும். அப்படியல்லவென்று ஆக்ஷேபிக்கிறவன் அதைத்தக்க சாக்ஷியத்தால் ருசுப்படுத்தவேணடும். 25 மதா. 351; 16 கல். 574.

**512.** தாயசொத்தின் வரும்படியில் ஸ்திரீயானவள் முழு சுதந்திரவாளியாக இருந்தாலும் அதுவும் அதைக்கொண்டு வாங்

கப்படுகிற சொத்துக்களும் அவளுக்குப்பின் அவளுடைய வார்சு அல்லது வார்சுகளைச் சேரத்தக்க ஸ்திரீதன சொத்தாகமாட்டாது. மூலசொத்தொப்பந்தம் அதன் விருத்தியம்சங்களும் ஆடைதிதாரனுன மூலபுருஷனுடைய பின்வாரசுகளையே சேரத்தக்கதாயிருக்கின்றன. 9 கல். 758; 10 கல். 324; (ப்ரிவிகௌன்ஸில தீரபபு). 8 மது. 290.

513. விதவை முதலிய ஸ்திரீவார்சானவள் தாயசொத்தை அக்கிரமமாய் அழிதது சேதப்படுத்தினுலும, அல்லது அனநதர வாரிசுனுடைய பின் பாத்தியத்துக்கு அபாயமும் கெடுதியும சம்பவிக்கக்கூடிய நடவடிக்கைகளைச செய்தாலும, அல்லது அவசியமான காரணமின்றி தன் அதிகார வரம்பை மீறி தாயசொத்தை துர்விநியோகப்படுத்தினுலும, அவளுக்கு அடுத்தாப்போலுள்ள பின வாரசானவன் அப்படிப்பட்ட செய்கைகளைத் தடுக்கவும், நடவடிக்கைகளையும் விநியோகங்களையும் ரத்து செய்யவும் தாவா கொண்டுவரலாம். (6 மூ. இ. அ. 445). ஆனல் முந்திய வாரசு ஒருவனிருக்குமபோது பிநதிய வார்சு அவ்வித தாவாவைக்கொணடு வரககூடாது. ஆனுலும ஸதிரீயும் அவளுக்கடுத்தாப்போலுள்ள ஆண் வார்சும ஒனறு சேர்நதுகொண்டு பிந்திய வார்சை மோசம செய்யவேண்டுமென்ற கெட்ட எண்ணத்தின்பேரில் அப்படிபபட்ட அககிரமமான செய்கைகளையாவது நடவடிக்கைகளையாவது விநியோகஙகளையாவது செய்தால் அப்போது அப்பிந்திய வாரசும் தாவாகொண்டு வரலாம். 9 அல். 441; 11 மது. 106.

514. மேலும் மெற்சொன்ன அக்கிரமங்களைச் செய்கிற ஸதிரீககு அடுததாபபோலுள்ள வார்சும மற்றொரு ஸ்திரீ வார்சாகவே யிருநதால அதற்கும பின்னிட்டுள்ள ஆண் வார்சானவன் ஷை வியாசசியததைக்கொண்டு வரலாம். 13 மது. 195; 15 மது. 422.

515. தாயபாத்தியப்படி சொத்தையடைந்திருக்கும் ஒரு ஸதிரீ வார்சானவள் அசசொத்தை அக்கிரமமாய் சேதப்படுத்துகிறுள் என்று ருசுவானல் அதை அவளிடமிருநது பிடுங்கி அதை

வர் ஒருவரை நியமித்து, அவர் வசம் ஒப்புவிக்க கோர்ட்டாருககு அதிகாரமுண்டு. (6 மூ. இ. அ. 433). ஆனாலும அசசொத்தின் வருமபடிகளை ஸ்திரீயே தன ஆயிசுகாலம வரையில அனுபவித்துக்கொள்ள பாததிய முளளவளாக இருககிறாள். அனந்தரவாரிசினுடைய பாததியம உடனே ஏறபட்டுவிடமாட்டாது. ரிசீவர் நியமிககப்பட்டதின் செலவுகள்போக வருமபடியின் மீதமானது ஸ்திரீயினிடமே கொடுதது வரப்படும. 1 மது. ஹை. கோ. ரி. 286; 2 மது. ஹை. கோ. ரி. 399.

516. அனந்தர வார்சாக இருப்பவனே ரிசீவராக நியமிக்கப்படவேண்டுமென்ற அவசியமுமில்லை. கோர்ட்டார் இஷ்டப்பட்டால் அவனும் பிறனொருவனைப்போலவே ரிசீவராக நியமிககப்படலாம். 5 அல். 555.

517. விதவை முதலிய ஸ்திரீ வார்சால் செய்யப்பட்ட பாத்தியப்படுதினங்கள் நியாயமான அவசியமின்றி அக்கிரமமாய் செய்யப்பட்டனவென்று ருசுவானால், அவ்விநியோகங்கள் அந்த ஸ்திரீயினுடைய ஆயிசு காலத்துககுப் பிறகு செல்லமாட்டாதென்று தீர்மானிககப்படும. ஆனாலும் அந்தஸ்திரீயினுடைய ஜீவதசைவரையில் அவ்விநியோகங்கள் ஸாஜிதமாகவே நிற்கும, அவளுள்ள வரையில் அவளும் அவைகளுக்குக கட்டுப்பட்டவளாகவே யிருக்கிறாள். 7 அல் 163; 8 அல. 365; 8 அல். 616; 10 கல், 324.

518. ஆனால் அப்படிப்பட்ட விநியோகம முற்றிலும் அநவசியமாயிராமல் சொலுசபாகம நியாயமாய் ஏறபட்டதாக ருசுவானால், சொத்தை விநியோகம் பெற்றவன் மேறபடி நியாயமான அளவுககுள்ள பணத்தைத அனந்தர வாரிசிடமிருந்து வாங்கி பெறலாம். 3 பம. 234; 6 அல். 417; 8 மது. 92.

519. விதவை முதலான ஸ்திரீ வார்சினுடைய அக்கிரமமான நடவடிக்கைகளும் சொத்துக்களின் துர்விநியோகங்களும அவளுடைய ஆயிசுகாலம வரையில செல்லததக்கவைகளாகவே

யிருக்கின்றனவென்ற காரணத்தால் அவைகளை ஆக்ஷேபிக்கிற பின்வாரிசானவன் சாதாரணமாய் அவளுடைய ஜீவதசைக்கும் பிறகே அதைப்பற்றி தாவாசெய்துகொள்ளலாமென்று ஏற்படுகிறது. ஆனாலும் மேற்படி ஸ்திரீ வெகுகாலம் வரை ஜீவித்திருக்கக்கூடுமாகையாலும், அவ்வளவு காலத்துக்குப் பிறகு வியாச்சியம் கொண்டுவந்தால் அதற்குள்ள அநேக முக்கியமான சாக்ஷியங்கள் மத்திய காலத்தில் தவறிப்போய்விடக்கூடுமாகையாலும், ஸ்திரீயினுடைய ஜீவதசை காலத்திலேயே ஷை வியாச்சியம் கொண்டுவரப்படலாமென்று 1877-ம௵த்திய 1-வது சட்டமாகிய ஸ்பெஸிபிக் ரிலீப் ஆக்ட்டில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஸ்திரீயினுடைய துர்விநியோகம் முதலிய நடவடிக்கைகள் அவளுக்குப் பிறகு செல்லமாட்டாதென்று அவ்வியாச்சியத்தில் தீர்மானிக்கப்படும். ஷை சொத்தின் சுவாதீனத்துக்காக அந்த ஸ்திரீ வாரிசு இறந்த பிறகே வியாச்சியம் கொண்டுவரப்படவேண்டும். அவளுடைய ஜீவதசை காலத்தில் சொத்தின் சுவாதீனத்துக்காக கொண்டுவரப்படும் வியாச்சியம் செல்லமாட்டாது. 6 கல் 198.

**520.** விதவையானவள் சரியான அதிகாரமின்றி ஸ்வீகாரம் வாங்கிக்கொண்டால், அதை ஆக்ஷேபிக்க அக்கறையுள்ளவன் அது சங்கதி தனக்குத் தெரிந்தது முதல் ஆறு வருஷங்களுக்குள்ளாக அதைப்பற்றி வியாச்சியம் செய்து ஸ்வீகாரத்தை ரத்து செய்துகொள்ளலாம். 18 மது. 53 (1877-ம௵த்திய 1-வது சட்டம் 42-வது பிரிவையும் பார்க்க.)

**521.** விதவை முதலிய ஸ்திரீ வார்சு இறந்து போகிற காலாந்தரத்தில் ஏற்படும் அனந்தர வாரிசானவன், அவள் வசமிருந்த சொத்துக்களையும் அவளால் அக்கிரமமாய் பராதீனம் செய்யப்பட்டுப்போன சொத்துக்களையும் கைப்பற்றிக்கொள்ளுவதற்கு அவள் இறந்தது முதல் பனிரெண்டு வருஷங்களுக்குள்ளாக தாவா கொண்டுவரவேண்டும். 8 கல். 442; 9 கல். 934; 10 கல. 324; 26 இ. அ. 71.

**522.** ஸ்திரீ வார்சு உயிரோடிருக்க, ஒரு பின்வார்சானவன் தன்னுடைய அனந்தரவார்சு பாத்தியத்தை ஸ்தாபித்துக்

கொடுக்கவேணுமென்று தாவா கொண்டுவரக்கூடாது. ஏனென்றால் அந்த ஸ்திரீக்கு மரணம் சம்பவிக்கும் காலத்தில் எந்த வார்சு உயிரோடிருக்கிறானோ அவனே அனந்தரவாரசாக ஏற்படுவான். ஸ்திரீயானவள் எவ்வளவு காலம் ஜீவித்திருப்பாளென்பதும் அவளிறக்கும்போது இன்ன பின்வாரசு உயிரோடிருப்பான் என்பதும் யாவராலும் சொல்ல சாத்தியப்படாத நிச்சயமற்ற விஷயங்களாக இருக்கின்றன. ஆகையால் அனந்தர வாரசு பாத்தியஸ்தன் இன்னான் என்பது ஸ்திரீ வாரசு உள்ள வரையில் நிஷ்கரிஷிக்கப்பட முடியாததாக இருக்கிறது. ஆனது பற்றி ஸ்திரீயினுடைய ஆயுசு காலத்தில் கொண்டுவரப்படும் அவ்விதவியாச்சியம் செல்லுபடியுள்ளதாகமாட்டாது. 8 கல. 12; 22 அல். 294.

## 2-வது வகுப்பைச் சேர்ந்த ஸ்திரீதன சொத்துக்கள்

**523.** விவாகத்துக்கு முந்தியும் விவாகத்தினபோதும் விவாகத்துக்குப் பிந்தியும் ஒரு ஸ்திரீக்கு, பெற்றோர் புருஷன் பந்துக்கள் முதலியவர்களால் இஷ்டத்தின்பேரில் கொடுக்கப்படும் திரவியம் ஆடை ஆபரணம் பண்டம் முதலிய ஜங்கம சொத்துக்களும் வீடு பூமி வகையரா ஸ்தாவர சொத்துக்களும் அவளுடைய ஸ்திரீதனங்களாகும்.

**524.** புருஷனை விவாகம் செய்து கொள்ளும் பொருட்டு விவாகப் பெண்ணுக்குக் கொடுக்கப்படும் வெகுமதியானது சுல்கம் என்றும், விவாக காலத்தில் கொடுக்கப்படுவது யௌதகம் என்றும், யௌதகம் நீங்கலான மற்ற ஸ்திரீதனங்கள் அயௌதகம் என்றும் சொல்லப்படும். மேலும் விவாகத்துக்குப் பிறகு புருஷனாலும் பந்துக்களாலும் கொடுக்கப்படும் சொத்துக்கள் சௌதாயகம் என்றும் சொல்லப்படும்.

**525.** ஸ்திரீதன சொத்துக்களின் வரும்படிகளும் அவ்வரும்படிகளினின்று வாங்கப்படுகிற இதர சொத்துக்களும் ஸ்திரீதனங்களேயாகும். நகை பாத்திரம் பண்டம் முதலிய ஸ்திரீதன சொத்துக்களைப் புருஷன் இறந்தபிறகு விற்று விற்று

விக்ரயப்பணத்தைக்கொண்டு ஸ்திரீயானவள் பூமி வாங்கினால் அந்தப் பூமி அவளுடைய ஸ்திரீதன சொத்தேயாகும். 2 மது. 333; 1 அல. 76

**526.** மேலும் ஒரு ஸ்திரீக்கு புருஷனும் தகப்பனும் கொடுக்கப்பட்ட சொத்துக்களன்றி தானமாயாவது உயில் மூலமாயாவது பிறரால் கொடுக்கப்பட்ட சொத்துக்களும் ஸ்திரீதன சொத்தேயாகும். 7 மது. 387; 5 கல். 681.

**527.** ஆனால் தாயபாத்தியப்படி கிடைக்கக்கூடிய சொத்தானது தானமாயாவது உயில் மூலமாயாவது ஒரு ஸ்திரீக்குக் கொடுக்கப்பட்டிருந்தால் அதினாலேயே அச்சொத்தில் அவளுக்குப் பூர்ண சுதந்திரம் ஏற்பட்டுவிடமாட்டாது. 2 இ. அ. 7; 14 மது. 471; 16 மது. 201; 26 இ. அ. 66—22 மது. 431. ஸ்வசுதந்திரபாத்தியத்துடனடைந்து அனுபவித்துக்கொள்ளும்படியான பூர்ண அதிகாரத்துடன் சொத்தானது ஸ்திரீகளுக்கு தகப்பன் முதலிய சொந்தக்காரரால் கொடுக்கப்படலாம். அப்படிக் கொடுக்கப்பட்டிருந்தால் மட்டும் ஸ்திரீகளுக்கு அச்சொத்தில் பூர்ண சுதந்திரம் ஏற்பட்டதாகும். 23 இ. அ. 37—23 கல. 670; 26 கல. 106.

**528.** ஜீவனாம்சத்துக்காக பூர்ண சுதந்திரத்தோடு அவளுக்குக் கொடுத்துவிடப்பட்ட சொத்துக்களும், ஜீவனாம்ச சொத்துக்களின் வரும்படிகளும், அவ்வரும்படிகளின் மிச்சங்களும், அம்மிச்சங்களைக்கொண்டு வாங்கப்பட்டிருக்கிற சொத்துக்களும், ஸ்திரீதனங்களென்றே தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன. 5 அ. 310; 5 கல. 222; 1 மது. 166. 11 அல. 296.

**529.** சொந்தப் பிரயாசையினாலாவது சாமர்த்தியத்தினாலாவது ஸ்திரீயால் சம்பாதிக்கப்படும் சொத்துக்களும், அவளுக்கு அன்னியர்களால் கொடுக்கப்படும் சொத்துக்களும், ஸ்திரீதனங்களென்றே சொல்லப்படும். ஆனால் இவைகள் புருஷனுள்ளவரையில் அவனுடைய ஆதீனத்துக்குட்பட்டதாயிருக்கின்

றன. புருஷனுடைய சம்மதிபெறுமல் பெண்சாதியானவள் அவ
றறைத் தன்னிஷ்டப்படி விநியோகமசெய்யக்கூடாது. ஆனல
புருஷன் இறநதுபோனபிறகு அவள் அசசொத்துககளில பூ-பூ
சுதநதிரத்தையுடையவளாக இருக்கிறுள்.

530. புருஷனல் இனுமாகக்கொடுக்கப்பட்ட ஸ்தாவர
சொத்துககளான ஸ்திரீதனத்தை பெண்சாதியானவள் தன இஷ
டப்படி விநியோகமசெய்யக்கூடாது. சாவ சுதநதிரமா யனுபவி
ததுக்கொண்டு தன் இஷ்டப்படி விநியோகமுமசெய்து கொள்ள
லாமென்ற அதிகாரம புருஷனல கொடுககபபட்டிருநதாலனறி
அவன் இறநதபிறகும அதில அவளுக்குப்பூரண சுதநதிரமகிடை
யாது. ஆனலும், அவளுக்குப்பின் அசசொதது புருஷனுடைய
வாாசைசசேராமல் அவளுடைய வாாசைசெய சேரும. 5 பத.
ஹை. கோ. ரி. 111; 7 மதா. 387; 19 அல. 133.

531. முன் இரண்டு பிரிவுகளில் சொல்லபபட்டவை நீங
கலாக மற்றவகை ஸ்திரீதனசொததுககளை ஸ்திரீயானவள தன
இஷ்டப்படி செலவுசெய்யவும விநியோகிக்கவும பூரண சுதநதிர
முடையவளாக இருக்கிறுள. 1 மதா. 307; 2 மதா. 333; 5 அல.
310.

532. ஆனலும் புருஷனனவன் வறுமையினுலாவது கட
ன்காராகளுடைய இம்சையினுலாவது கஷ்டப்பட்டால, அப
போது பெண்சாதியுடைய பூரணசுதநதிர ஸ்திரீதனசொததையுங
கூட அவன் உபயோகபபடுததிக கொள்ளலாம். ஆனல அவ்வித
அதிகாரம அவனுக்குமட்டும ஏறபட்டிருக்கிறதே யன்றி அவ
னுடைய கடன்காரர்களுக்கு அசசொததில யாதொருசுதநதிர
முங்கிடையாது. 8 பம. ஹை. கோ. ரி. 129.

533 ஒரு ஸ்திரீயினுடைய எல்லா ஸ்திரீதனசொததுக
களும் அவளுககுப்பின அவளுடைய வாாசுகளையே சேருகின
றன. புருஷனுக்கு மகன், பேரன் முதலானவர்கள் முதலவாாசு
களாக இருக்கிறதுபோல, ஸ்திரீக்கு பெண் பெண்ணினுடைய
பெண் முதலானேர் முதல்வாாசுகளாக இருக்கிறுர்கள். ஒருவ

ளுடைய ஸ்திரீதனசொத்துக்கு மகன், பேரன் ஆகிய ஆண் சந்ததியார்கள் பின்னிட்ட வாரசுகளாகவே யிருக்கிறார்கள்.

**534.** தாயாருடைய ஸ்திரீதனசொத்தைப் பெண்கள் அடையும்போது விவாகமாகாத பெண்கள் முதலிலும்,விவாகமாய் ஏழையாயிருக்கிற பெண்கள் அதற்குப்பிறகும், விவாகமாய பணக்காரியாயிருப்பவள் கடைசியிலும் அடைகிறார்கள். ஆனால் பெண்களுடைய பெண்களான பேத்திகளுக்குள் இவ்விதவித்தியாசமில்லை. மேலும் பெண்களுடைய பெண்களும், பெண்களுடைய பிள்ளைகளும், தாயம்பெறும்போது மாதாமகாசொத்தை தெளகித்திரர்கள் அடைவதுபோல சமமாய்ப்பெறாமல், தங்கள் தங்கள் தாயமார்களின் அம்சத்துக்குத்தக்கப்படி அடைந்துக்கொள்ள வேண்டும்.

**535.** ஸ்திரீதனசொத்தை வார்சுபாத்தியப்படி அடைவதற்கு விபசார தோஷமானது தடையாயிருக்கமாட்டாது. பெண், பேத்தி முதலான ஸ்திரீகள் விபசாரிகளாக இருந்தாலும், அவர்கள் தங்கள் தாய், பாட்டி முதலானவர்களுடைய ஸ்திரீதன சொத்துக்களை வாரசு பாத்தியப்படி யடையலாம். 1 அல. 46; 26 மது. 509.

**536.** தாயாருடைய ஸ்திரீதன சொத்தை பிள்ளைகளடைந்தால் அது அப்பிள்ளைகளுடைய பிதுராஜ்ஜிதம் போலாகாமல் சுயாஜ்ஜிதம்போலவே பாவிக்கப்படும். அதுபற்றி தாயாருடைய ஸ்திரீதன சொத்தை யடைந்த பிள்ளைகள் அவிபக்தகுடும்பமாகவே இருந்தாலும் அச்சொத்துவிஷயமாய் அவர்களுக்குள் ஸர்வைவாஷிப் பாத்தியம் ஏற்படமாட்டாது. 27 மது. 300.

**537.** ஒரு பெண்ணானவள் விவாகமாகாமல் இறந்துபோய்விட்டால், அவளுடைய சொத்தானது அவளுடைய அண்ணன் தம்பிகளையும், அண்ணன் தம்பிகளில்லாவிட்டால் தாய்தகப்பன்மார்களையும், அவர்களுமில்லாவிட்டால் சுற்றத்தாரையும் சேருகின்றது.

**538.** விவாகம்செய்து கொள்ளுவதின் பொருட்டு கொடுக்கப்பட்ட சுல்கம் என்ற ஸ்திரீதனசொத்தானது, மற்ற ஸ்திரீதனசொத்துக்களைப்போல பெண் பேத்தி முதலானவர்களைச் சேராமல் அண்ணன் தம்பிகளையும் அவர்களில்லாவிட்டால் தாய தகப்பன் முதலியோரையும் சேருகின்றது. ஸ்திரீயானவள் விவாகமாவதற்கு முந்தியே இறந்துபோய்விட்டால, விவாகத்தின்பொருட்டு புருஷனால் கொடுக்கப்பட்ட தனம அவனுக்கே வாபஸ்செய்யப்படவேண்டும.

**539.** முன இரண்டுபிரிவுகளில் சொல்லப்பட்ட ஸ்திரீதனங்களைத்தவிர மற்றெல்லா ஸ்திரீதன சொத்துக்களும் 533, 534-வது பிரிவுகளில் சொல்லியபடி பெண, பெண்ணினுடையபெண, பெண்ணினுடைய பிள்ளை, பிள்ளை, பேரன, கொள்ளுபேரன ஆகிய இவர்களை வரிசைக்கிரமமாய் யடைகிறது. 21 மது. 58; 27 மது. 300.

**540.** பெண் முதல கொள்பேரன் ஈறாகவுள்ள சந்ததியார்களொருவருமில்லாவிடில ஸ்திரீதனமானது சொந்தக்காரியின விவாகத்துக்குத்தக்கபடி இரண்டுவித தாயக்கிரமவழியை யனுசரிக்கும. அதாவது, சுத்தகன்னிகாதானமாகிய பிராமம விவாகம் செய்யப்பட்டிருந்தால, அவளுடைய ஸ்திரீதனமானது புருஷனையும புருஷனுடைய இனத்தாரையுமே முதலிலசேரும. புருஷனாவது புருஷன் குடும்பத்தாராவது இல்லாவிடில அந்தஸ்திரீயினுடைய பிறந்த குடும்பத்தாரைச சேரும. ஆனால பணம்பெற்றுக்கொண்டு பெண்ணை விவாகஞ்செய்து கொடுத்தலாகிய ஆசுரவிவாகம் செய்யப்பட்டிருந்தால ஸ்திரீதன சொத்தானது புருஷன் முதலியோரை முதலில் சேராமல சொந்தக்காரியினுடைய தாய் தகப்பன் முதலான பிறந்தகுடும்பத்தாரையே முதலில்சேரும். அவ்வினத்தாரில் ஒருவரும இல்லாமலிருந்தால மட்டும அச்சொத்து புருஷனுக்கும் அவனுடைய வாகத்தாருக்கும சேரும்.

**541.** ஸ்திரீதனசொத்தானது சொந்தக்காரியினிடத்திலிருக்கும்போது தான் 'ஸ்திரீதன' மென்றபெயரால் கூறப்படும். அவள் இறந்துபோனபிறகு வாரிசு பாத்தியப்படி யடைகிற அவளுடையபெண் முதலான வேறுஸ்திரீகளுக்கு அச்சொத்து ஸ்திரீதனமாகமாட்டாது. அதாவது, ஸ்திரீதனசொத்தை வாரிசுபாத்தியப்படி யடைந்திருக்கிற ஸ்திரீக்கு அச்சொத்தில் முழு சுதந்திரம் கிடையாது. ஆயிசுகாலம் வரையில் அநுபவிக்கமட்டுமே பாத்தியமுண்டு. மேலும் அச்சொத்து அவளுக்குப் பின் அவளுடைய வாரிசுகளைச் சேராமல் மூலஸ்திரீயினுடைய பின் வாரிசுகளையே சேருகின்றது 3 மது. ஹை. கோ. ரி 312; 5 கல். 225; 17 கல. 911; 19 மது. 107.

**542** ஆனால் ஸ்திரீதனசொத்தை வாரிசு பாத்தியப்படி யடைகிற ஒருஸ்திரீயானவள் விவாகமாகாத கன்னிகையாகவே யிருந்தால் அவள் அச்சொத்தை பூரண சுதந்திரத்துடன் அடைகிறாளென்றும் அது அவளுக்குப்பின் அவளுடைய வாரிசுகளையே சேரத்தக்கதாயிருக்கிறதென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 19 மது. 107; 21 மது. 100.

**543.** ஸ்திரீதன சொத்தையடைகிற ஒருவாரிசு ஆணாக இருந்தால் அவன் அச்சொத்தை பூரணசுதந்திரத்துடன் அடைந்துவிடுகிறான். மேலும் அச்சொத்து அவனுக்குப்பின் அவனுடைய வாரிசுகளையே சேருகின்றது.

**544.** ஸ்திரீதனசொத்துக்குள்ள வார்சுகளின் வரிசைக்கிரம ஜாப்தா.—

1. பெண்கள்.
2. பெண்களுடைய பெண்கள்.
3. பெண்களுடைய பிள்ளைகள்.
4. பிள்ளைகள்.

5. பேராகள்.
6. கொள்பேராகள்.

ஸ்திரீதனசொத்துக்காரிககு பிராமம விவாகம செய்யபபட்டிருநதால்.

7. புருஷன.
8. சககளததியின பெணகள.
9. சககளததியின பேததிகள
10. சககளததிபெண்களின பிளளைகள.
11. சக்களததியின் பிள்ளைகள்.
12. சக்களததியின பேராகள.
13. சககளததியின கொளபேரர்கள்
14. புருஷனுடைய அணணன தமபிகள.
15. புருஷனுடைய அண்ணனதமபிகளுடைய பிளளைகள.
16. புருஷனுடைய சகோதரிபிளளைகள
17. தாயார.
18 தகபபனர்.
19. அண்ணன தம்பிகள.
20 அணணன தமபிகளின் பிளளைகள.
21. சகோதரிபிள்ளைகள.

அவளுக்கு அசுரவிவாகம் செய்யபபட்டிருநதால.

7. தாயார.
8 தகபபனா.
9. அண்ணனதமபிகள்.
10. அணணன தமபிகளின் பிள்ளைகள
11. தமககை தஙகைகள.
12. தகபபனருடைய தாயார.
13. தகபபனருடைய தகபபனா.
14. தகபபனருடையசகோதரரகள
15. தகபபனருடைய சகோதரர்களின பிளளைகள.
16. புருஷன.
17. சககளததியின பெணகள.
18. சககளததியின பேததிகள.
19 சக்களததிபெண்களின பிளளைகள
20. சக்களத்தியின் பிள்ளைகள.

## 13-வது அத்தியாயம்.

---

# பாகார்கமில்லாத ஜமீன் முதலிய சொத்துக்கள்.

**545.** ஜனங்களுடைய க்ஷேமம் அமரிக்கை அபிவிருத்தி முதலிய பொது நன்மைகளின் பொருட்டு ஒவ்வொரு தேசமும் ஒரு அரசாண்மைக்குட்பட்டிருக்க வேண்டியிருக்கிறது. தேசத்தினுடைய நன்மையின் பொருட்டும் ஜனங்களுடைய பாதுகாப்பின் பொருட்டும் ராஜாங்கம் ஏற்படுகிறதே யன்றி அரசனுக்காக இராஜாங்கம் ஏற்படுகிறதில்லை. இராஜாங்க விஷயமான காரியங்களை நடத்துவோர் பலராக இருந்தாலும், எல்லோருக்கும் மேலாக இருந்து அரசன் என்ற பட்டத்தையும் அப்பட்டத்துக்குரிய அதிகாரத்தையும் ஒருவனே அடையத்தக்கவனுவான ஆனதுபற்றி இராஜாங்கங்களும் இராஜாங்கம் போன்ற சிற்றரச நாடுகளும் ஒருவனுக்கே சேருமேயல்லாது ப்ரைவேட் (சொந்த) சொத்துக்களைப்போல இராஜகுடும்பத்திலுள்ள பலர்களுக்குள்ளும் பாகிக்கப்படத்தக்க பொது சொத்தாகமாட்டாது. 6 மு. இ. அ. 161; 9 மு. இ. அ. 66.

**546.** பாகிக்கத்தகாத மேற்படி இராசியங்களான சொத்துக்களும் அவைகளுக்குள்ள சுதந்திரங்களும், சாதாரணமாய் மற்ற தேசங்களிலிருப்பதுபோல நம்ம ஹிந்து தேசத்திலும், குடும்பத்திலுள்ள மூத்தகுமாரனுக்கே பாத்தியப்பட்டதாக இருக்கின்றன. 5 அல. 512.

**547.** மிகவிசாலமான நாடாகிய இவ்விந்தியாவில் பெரிய இராசியங்களும் சிற்றரசுகளுமன்றி, சிற்றரசுபோன்ற ஜமீன், பாளையப்பட்டு முதலிய அநேக சில்லரை சமஸ்தானங்களும் வெகுகாலமாக இருக்கின்றன. பூர்வகாலத்தில் ஷை ஜமீன்தார் முதலியோர் அவரவருடைய சமஸ்தானங்களில் ஒரு சிற்றரசன் போ

லவே விளங்கி அரசனுக்குரிய பல அதிகாரங்களையும் வகித்து வர, அச்சமீன் முதலியவைகளும் இராஜாங்கம் போலொத்த தன்மையை யடைந்தன. சிறிய இராசசியங்களான இசசமீன முதலியவைகளும் பெரிய இராசசியங்களைப்போல குடும்பத்தில ஜேஷ்டருக்க இருப்பவனுக்கே வழக்கமாய் பாத்தியபபட்டிருந்த ன. பிரிடிஷ் இராஜாங்கத்தார் இதசேசத்தின் ஆளுகையைக கைக்கொண்ட பிறகு ஜமீன் முதலிய சிலவரை சமஸ்தானங்களு க்கிருந்த இராஜாங்க அதிகாரங்கள் நின்றுபோய்விட்டன. ஆ னுலும முன்னிருந்த வழக்கத்தை யனுசரித்து, பூர்விகமான ஜமீன் பாளையப்பட்டு முதலியனவும் பாகிக்கபபடத்தக்க சொத தாகாமல் இராஜாங்கத்தைப்போல ஜேஷ்டகுமாரனுக்கே சேரத் தக்கதாகு மென்று கவர்ண்மெண்டாரால் விதிக்கபபட்டது. அ தை யனுசரித்து மேலான நியாயஸதலத்தாராலும் பூர்விகமான ஜமீன் முதலிய சொத்துக்கள் பாகார்கமில்லாமல முன்னிருந்த வழக்கமபோல் மூத்த குமாரனுக்கே பாத்தியப்படத்தக்கவை கள் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 9 மு. இ. அ. 66; 12 மு. இ. அ. 523.

**548.** ஆனால் இக்காலத்து ஜமீன்கள் இராஜாங்கம்போலி ல்லாமல் சாதாரணமான ஒருபெரிய எஸ்டேட் டொப்பந்தமே இருக்கிறபடியால பூர்விகமில்லாத ஜமீன்கள் சாதாரணமாய் பா கிக்கப்படத்தக்கவைகளேயாகும். ஆகிலும ஒருபுதிதான ஜமீன வழக்கமாய் பாகிக்கப்படாமல் பூர்விகமாயுள்ள ஜமீனைப்போல மூத்தவனுக்கே சேர்ந்து வந்திருந்தால அவவழக்கத்தை யனு சரித்து பூர்விகமில்லாத அச்சமீனும பாகிக்கத்தகாததாயவிடு மென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 5 மு. இ. அ. 169; 2 இ. அ. 263; 17 இ அ. 134, 13 மது. 406.

**549.** ஆகையால் ஜமீன்கள் பாகிக்கப்படத்தக்க தென்ப தும் பாகிக்கப்படத்தகாததென்பதும அந்தந்த ஜமீனகளுடைய வழக்கத்தைப் பொருத்ததாக இருக்கின்றது. 16 மது. 54.

**550.** பாகிக்கத்தகாததாயிருக்கிற ஒரு ஜமீன் அச்சமீன் தாரனுடைய இராஜாங்கவிஷயமான ஓர்குற்றத்திற்காக அவனி

டமிருந்து கவர்ன்மெண்டார் பிடுங்கி சாக்காருக்குசசோத்திக் கொண்டுவிட்டு, பிறகு அசசமீனை ஒரு அன்னியனுக்காவது அச சமீன் குடும்பத்தைசசோந்த ஒருவனுக்காவது கொடுததால், அது பாகாரகமில்லாமை முதலிய பூர்வீக சுதநதிரங்களுடனே யே மறுபடியும் கொடுக்கப்பட்டிருககிற தென்றே சாதாரண மாய் பாவிக்கபபடும். 12 மு. இ. அ. 1; 8 இ. அ. 99; 3 மது. 290.

551. ஆனாலும அவ்வித சுதநதிரங்களுடனேயே திருப்பி க்கொடுக்கப்படவில்லை யென்று அனுமானிககக்கூடிய நடவடிக் கைகளை சாக்காரால நடத்தபபட்டிருநதால், அபபோது அது ஒரு சாதாரண எஸ்டேடடுப்போல பாகாரகமுள்ளதாகும். 7 இ. அ. 38; 2 மது. 128; 13 இ. அ. 45-14 மது. 237.

552. பூர்வீகமான ஜமீன்முதலிய சொததுககள் மேற் சொலலியவாறு குடும்பததாருக்குள் பாகிககப்படாமல மூத்தவ னுககே சோந்ததாக இருநதாலும, அவை பிதுரார்ஜிதமான குடும்ப சொததாக இருப்பதால குடும்பத்தைசசோநத மற்றவா கள் அசசொததிலிருநது ஜீவனாமசமபெற பாததியமுள்ளவாக ளாக இருககிறார்கள். 21 அல. 232.

553. குடும்பப்பொதுவானதா யிருக்கிற ஜமீனையுடைய ஜமீன்தாரன் ஆண்சநததியின்றி இறநது போனாலும், சாதாரண அவிபக்த குடும்ப சொததுக்குரித்தான ஸாவைவர்ஷிப் என்னு ம பாத்தியப்படி அவனுடைய சகோதரர் முதலிய தாயாதிகள அசசமீனை அடைவாாகள். 9 மு. இ. அ. 263; 1 மது. 312.

554. நமம மிதாக்ஷரை லாவுக்குட்பட்ட ஒரு ஜமீன்தா ரன பெண்சாதியையும பின்னொரு தமபியையும வைத்துவிட்டு இறநதுபோன ஒரு கேசில ஜமீனானது அந்த தமபிக்குச சேரு மேயனறி பெண்சாதிக்கு சேரமாட்டாதென்று தீாமானிககப் பட்டிருக்கிறது. 29 கல. 433.

555. இராச்சியம் ஜமீன் பாளையப்பட்டு முதலான சமஸ் தானங்களுக்குறிய சொதது சுதந்திரங்கள் மட்டும் பாகிக்கத

தகாதவைகளே யன்றி, அவ்வதிகாரங்களை வகிக்கிற அரசன் ஜமீன்தாரன் முதலானவர்களின் சொந்த (பரைவேட) சொத்துக்கள் அவனுடைய வாரசுகளுக்குள் கிரமமாய் பாகிக்கப்படத் தக்கவைகளாகவே யிருக்கின்றன. ஆண்சந்ததியின்றி இறந்துபோகும் ஜமீன்தாரனுடைய ஜமீனானது முன் பிரிவில் கண்டபடி சகோதிரன் முதலான தாயாதிகளுக்குச் சேர்ந்தாலும், அவனுடைய தனியான பரைவேட சொத்துக்கள் அவனுடைய பெண்சாதி பெண்களையே சேரும். 5 மதா. ஹை. கோ. ரி. 41.

556. தேசத்துக்கு அரசன் அதிகாரியாயிருப்பதுபோல, மணியகாரன் கணக்கன் முதலிய கிராம உத்தியோகஸ்தர்கள் அவ்வவ் கிராமங்களில் இராஜனுடைய பிரதிநிதிகளாக இருக்கிறார்கள். மிராசு பாத்தியம் பெற்ற ௸ கிராமாதிகாரி வேலைகளும் பாகிக்கத்தக்கதல்ல. வழக்கத்தை யனுசரித்து அவைகளும் மூத்த குமாரனுக்கே பாத்தியப்பட்டதாக இருக்கின்றன. அவ்வேலைகளின் சம்பளத்துக்காக ஏற்பட்டிருக்கும் மானிய நிலங்களும் அவ்வேலைபார்க்கும் மூத்த குமாரனுக்கே பாத்தியப்பட்டதாகுமே யன்றி அவை பாகார்கமுள்ள குடும்பப் பொதுவான சொத்தாகமாட்டாது. 7 மதா. 236.

557. ஆனால் அவ்வேலைகளுக்குரிய மானியநிலங்களை நமது கவர்ன்மெண்டார் சில வருஷங்களுக்குமுன் அந்தந்த குடும்பத்துக்கே சொந்தமாக்கி அவைகளுக்கு சொந்தப்பட்டாவும் கொடுத்துவிட்டு, அவ்வேலைகளுக்கு ரொக்க சம்பளம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவ்விதம் சொந்தப்பட்டா கொடுக்கப்பட்டுவிட்டால் அந்நிலங்கள் பாகார்கமுள்ள குடும்பப் பொதுவான சொத்தாக ஏற்படுகின்றன.

558. தேவஸ்தானம் முதலியவைகளின் தர்ம விசாரணை பாத்தியமானது பாகிக்கப்படத்தக்கதல்ல. இறந்துபோன தர்மகர்த்தாவினுடைய ஜேஷ்ட குமாரனையே அவ் வுத்தியோகம் சேர்ந்ததாகும. தர்மகர்த்தாவுக்கு சந்ததியில்லாவிட்டால் பக்க வார்சுகளில ஜேஷ்டனாக இருப்பவனே அவ்வுத்தியோகத்தை யடைவான். 1 மதா. ஹை. கோ. ரி. 415.

**559.** மிதாக்ஷரை லாவுக்குட்பட்ட ஒரு ஜமீன்தாரன் பூர்வீகமான தன் ஜமீன் சொத்தை தன் இஷ்டப்படி விநியோகம் செய்யக்கூடாதென்றும், அவசியமாயும் எஸ்டேட்டின் நன்மையின் பொருட்டும் செய்யப்படுகிற நியாயமான விநியோகங்கள் தவிர மற்றவை அவனுக்குப்பின் செல்லமாட்டாதென்றும், பாகவியத்தைத்தவிர மற்ற விஷயங்களில் ஜமீன் சொத்தானது ஒரு அவிபக்த குடும்பசொத்தைப் போலவே பாவிக்கப்படவேண்டுமென்றும், வெகுகாலத்துக்குமுன் முதற்கொண்டு அநேக வருஷங்களாக மதராஸ் ஹைகோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டு வந்தது.

**560.** ஆனால் 1888-ம் வருஷத்தில் பிரிவி கௌன்சில் கோர்ட்டார் அவர்கள் இதற்கு விரோதமாய்த் தீர்ப்புச்செய்து மதராஸ் ஹைகோர்ட்டாருடைய தீர்மானங்களை மாற்றிவிட்டார்கள். இந்த பிரிவி கௌன்சிலின் தீர்மானப்படி, பாகிக்கத்தகாத ஜமீன் சொத்துக்களில் ஜமீன்தாரன் முழுசுதந்திரமுடையவனாக இருக்கிறான். ஜமீன் சொத்தை அவன் தன் இஷ்டப்படி விநியோகிக்கலாம். இஷ்டப்படி விநியோகிக்கக் கூடாது என்ற எதிரிடையான வழக்கம் ஒரு ஜமீனில் ஏற்பட்டிருந்தாலன்றி ஜமீன்தாரனால் செய்யப்படும் எவ்வித விநியோகங்களையும் ஆக்ஷேபிக்க மகன் முதலிய பின்வாரிசுகளுக்கு எவ்வளவும் பாத்தியமில்லை. 15 இ. அ. 51; 10 அல. 272.

**561.** மதுரைஜில்லாவி லிருக்கிற சிவகங்கை ஜமீன்தாரன் தன் ஜமீனிலுள்ள சுரங்கங்களை இருபது வருஷகாலம் அனுபவித்துக் கொள்ளும்படி அன்னியனொருவனுக்கு குத்தகைக்குக் கொடுத்துவிட, அக்குத்தகை செல்லமாட்டாதென்று அவனுக்குப்பின் வாரிசாகவந்த அவன்மகன் வியாச்சியம் கொண்டுவந்தான்.

ஆனால் ஜமீன் சொத்தை ஜமீன்தாரன் இஷ்டப்படி விநியோகம் செய்யக்கூடாதென்ற எதிரிடையான வழக்கம் அச்ஜமீனில் வழங்கிவந்ததாக ருசுப்படுத்த அவனால் முடியவில்லை.

அதுபற்றி தகப்பன் செய்த விநியோகத்தை ஆக்ஷேபிக்க மகனுக்கு பாத்தியமில்லையென்று சொலலி மதுராஸ ஹைகோர்டடார், முன சொன்ன பிரிவிகௌன்ஸில் தீர்மானத்தை யனுசரித்து அவவழக்கைத் தள்ளிவிட்டார்கள். 13 மது. 197.

**562.** ஆகையால இஷ்டப்படி விநியோகம செய்யக்கூடாதென்ற வழக்கமிருக்கிறதாக திருப்தியாய் ருசுப்படுத்தினாலன்றி முன ஜமீன்தாரன செய்தவிநியோகங்களைப பின் ஜமீனதாரன ஆக்ஷேபிக்க முடியாது. 20 அல. 537; 26 இ. அ. 83-22 மது. 383; 20 மது. 167.

**563.** ஜமீன் சொத்தின் வருமபடிகளில ஜமீனதாரன முழுசுதந்திரத்தையு முடையவனாக இருக்கிறான். அவற்றை ஜமீனதாரன் தன் இஷ்டப்படி செலவழித்துக கொளளலாம. செலவுசெய்யாமல் மீதத்துவைதது அமமீதத்தை ஜமீன்சொத்தோடு சோத்திக்கலக்காமல தனியாய் வைத்துககொணடால அது அவனுடைய தனியான சொத்தேயாகும. அவன ஆண்சந்ததியனறி இறநதுபோய் ஜமீனானது வாரிசுவாஷிபபு பாத்தியபபடி சகோதரன் முதலிய தாயாதிகளுககுச் சேரநதாலும, மேற்சொன்ன தனியானசொத்து அவனுடைய பரைவேட சொத்தைப்போல் அவனிட விதவைக்கே சேரும. 5 மது. ஹை.கோ.ரி 41; 12 மு. இ. அ. 540; 9 மு இ. அ. (சிவகஙகை கேசு); 29 கல். 433.

**564.** ஒரு ஜமீன்தாரனுக்கு அநேக பெண்ஜாதிகளிருந்தால, முதலில் விவாகம செய்யப்பட்டவளே பட்டமகிஷி எனறும அவள் வயற்றில் பிறக்கிற முதல பிள்ளையே பட்டத்துககுரியவ னெனறும் ஹிந்து தாமசாஸ்திரஙகளில சொலலப்பட்டிருக்கிறது. ஆனால் இககாலத்தில அவ்விதி அனுஷ்டானத்தில் இல்லை. எந்தப்பெண்சாதிககுப பிறநதவனாக இருந்தாலும எல்லாபபிள்ளைகளிலும எவன வயதில பெரியவனோ அவனே ஜேஷ்டகுமாரனாவான். ஜமீன் பட்டமும அபபட்டத்துககுரிய சொத்து சுதந்திரங்களும் சாதாரணமாய அவனுககே கிடைக்கும. 11 மு. இ. அ. 570; 8 இ. அ. 1; 2 மது. 236.

**565.** ஆனால் மூத்தபெண்சாதி உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவளாகவும் இளையபெண்சாதி தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவளாகவும் இருந்தால், மூத்த பெண்சாதியினுடைய பிள்ளை இளைய பெண்சாதியின் பிள்ளையைக்காட்டிலும் சிறியவனாக இருந்தபோதிலும் அவனே (மூத்தபெண்சாதியின் பிள்ளையே) பட்டத்தையடைவான். 17 மது. 422.

**566.** மேலும் மூத்தபெண்சாதியான பட்டஸ்திரீயினுடைய முதல் பிள்ளைக்கே ஜமீன் பட்டம் உரியது என்ற வழக்கம் ஒரு ஜமீனில் ஏற்பட்டிருந்தால், அச்சமீனில் அவ்வழக்கமே விதியாக அனுஷ்டிக்கப்படும். 22 மது. 515; 26 இ. அ. 55.

**567.** பாகாரகமில்லாத ஜமீனை ஒரு ஜமீன்தாரனுக்குப் பிறகு அவனுடைய மூத்த குமாரனையே அடைந்து வருவதற்கு ஜேஷ்டபாரம்பரிய பாத்தியம் என்று பெயர். ஆண் சந்ததியின்றி இறந்துபோன ஒரு ஜமீன்தாரனுக்கு மூத்த வம்சத்திலும் இளையவம்சத்திலும் தாயாதிகளிருந்தால், எந்தவம்சம் அவனுக்கு சமீபமானதாக இருக்கிறதோ அந்த வம்சத்திலுள்ள சமீப ஸ்தர்களில் மூத்தவனாக இருக்கிறவனுக்கே வாரசுபாத்தியம் ஏற்படும் என்று பிரிவி கௌன்ஸிலார் தீர்மானித்திருக்கிறார்கள். 12 மு. இ. அ. 523.

**568.** வாரசு பாத்தியமானது ஜேஷ்டவம்சத்திலேயே தொடர்ந்தும் வந்து கொண்டிருக்க வேண்டுமென்று மதுராஸ் ஹைகோர்ட்டார் முன் தீர்மானித்திருந்தார்கள். ஆனால் அவ்வித ஜேஷ்ட வம்ச பாரம்பரியவிதியானது மேற்சொன்ன பிரிவி கௌன்ஸிலில் தீர்ப்பில் மாறிப்போய் விட்டது. ஆகையால் இப்போது ஜேஷ்ட வம்ச பாரம்பரியமானது சாதாரண விதியல்ல. இறந்துபோன ஜமீன்தாரனுக்கு சமீப சொந்தக்காரர்கள் யாரோ அவர்களில் ஜேஷ்டனாக இருப்பவனுக்கே வாரசுபாத்தியம் ஏற்படும் என்பது தான் சாதாரணவிதியாக இருக்கிறது. அவன் கனிஷ்ட வம்சத்தைச் சேர்ந்தவனாகவும் இருக்கலாம். தொடுகிறும் ஜேஷ்ட வம்சத்திலேயே வாரசுபாத்தியம் ஏற்பட்டு வர

வேண்டுமென்பது அவசியமானதல்ல. அவ்விதமான வழக்கம் ஒரு ஜமீனில் ஏற்பட்டிருந்தால் மட்டும் அவ்வழக்கத்தை யனுச ரித்து அது அசசமீனுக்கு விதியாகும். அவ்வழக்கமில்லாத ஜமீன்களில் மேற்சொன்ன சாதாரணவிதியே அனுஷ்டிக்கப்படுமென்று பிரிவிகௌன்ஸில் கோர்ட்டார் பின்னிடும் தீர்மானித்திருக்கிறார்கள் 11 இ. அ. 51.

**569.** மேலும் வாரசு பாத்திய விஷயமாய் எந்த ஜமீனில் எந்தவழக்கம் தொன்றுதொட்டு ஏற்பட்டு வருகிறதோ அவ்வழக்கமே அசசமீனில் அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 11 இ. அ. 135.

**570.** ஒரு ஜமீனுக்கு வாரசு பாத்தியம் கொண்டாடும் வாதி, பிரதிவாதிகளாகிய இருவரும் சமமான விரிசையிலுள்ள சொந்தக்காரராக இருந்தால், எவன் பெரியவனுடைய வம்சத்தைச் சேர்ந்தவனோ அவனே ஜமீனுக்கு பாத்தியஸ்தனாவான் 20 இ. அ. 77; 20 கல. 649.

**571.** ஒரு ஜமீன் குடும்பமானது அவிபக்தமா யிருந்து ஜமீன் பட்டம் குடும்பஸ்தர்களுக்குள் சாவை வாஷிப்பு பாத்தியப்படி இறங்குவதா யிருந்தால், இரத்த சம்பந்தத்தில் சமீபமா யிருப்பவனுக்கே ஜமீன் சேரவேண்டுமென்ற விதி அனுசரிக்கப் படமாட்டாதென்றும், ஜேஷ்ட வம்சத்தைச் சேர்ந்தவர்களில் சமீபஸ்தன் யாரோ அவனுக்கே ஜமீன் பட்டம் சேருமென்றும், முன் செய்த ஒரு தீர்மானத்தை (2 மது. 250) அனுசரித்து, இப்பொழுதும் மதுராஸ் ஹைகோர்ட்டார் உடையார் பாளையம் ஜமீன் கேசில் தீர்மானித்திருக்கிறார்கள். 24 மது. 562.

**572.** ஒரு எஸ்டேட்டு பாகார்க மில்லாமலிருந்தலானது ஸ்திரீஜாதிகளை அதன் வாரசுபாத்தியத்தி னின்றும் விலக்கமாட்டாது. சாதாரணமாய் ஸ்திரீகளுக்கும் வாரசுபாத்தியம் உண்டு. ஸ்திரீகளுக்கு வாரசுபாத்திய மில்லையென்று சொல்லுகிறவன் அவ்விதமான வழக்கத்தை திருப்திகரமானசாக்ஷியத்தால் ருசுப

படுக்க வேண்டும். இல்லாவிடில் அவனுடைய வாதம் செல்ல மாட்டாது. 29 கல். 828 இது பிரிவி கௌன்ஸில் தீர்ப்பு.

**573.** ஆண்சந்ததியில்லாமல் இறந்து போகும் ஒரு ஜமீன்தாரனுக்கு பல பெண்சாதிகளாவது பலபெண்களாவது இருந்து அவர்களுக்குள் வாரசுபாத்தியம் ஏற்படுவதாயிருந்தால், ஜேஷ்ட பெண்சாதியும் ஜேஷ்ட பெண்ணுமே முதலில் ஜமீனை அடைவார்களென்றும், மூத்தவள் இறந்தபின் அதற்கடுத்தவள் ஜமீனை யடைவாள் என்றும், மதராஸ் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். 6 மது. ஹை. கோ. ரி. 310.

**574.** ஒரு ஜமீனுடைய வாரசுபாத்தியம் தௌகித்திரர்களுக்குள் இறங்குவதாயிருந்தால், அவர்களில் வயதில் பெரியவன் எவனோ அவனே பட்டத்துக்குரியவனாவான். அவன் ஜேஷ்ட புத்திரியினுடைய மகனாகவே யிருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. மேலும் கடைசியாக சொத்தை யனுபவித்த புத்திரியினுடைய ஜேஷ்ட குமாரனுக்கும் யாதொரு விசேஷ பாத்தியமும் ஏற்பட மாட்டாது. 6 மது. ஹை. கோ. ரி. 310; 8 இ. இ. 99; 3 மது. 290.

**575.** ஆண்சந்ததியில்லாமலிருந்த ஒரு ஜமீன்தாரனுக்கு ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டபிறகு சொந்தப்பிள்ளை பிறந்து விட்டால், சொந்த உதரத்தில் ஜனித்தவனான ஔரசபுத்திரனே மேலான அந்தஸ்தையும் பாத்தியத்தையுமுடையவனாக இருப்பதால் அவனே பட்டத்துக் குரியவனாவான். ஸ்வீகாரப்பிள்ளைக்கு ஜீவனாம்சம் தான் கிடைக்கும். 17 மது. 435.

**576.** ஒரு ஜமீன்தாரன் கடன்பட்டு இறந்துபோனால், அக்கடன்கள் துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளுக்காகவல்லாமல் மற்றெவ்வித நியாயமான காரணங்களால் ஏற்பட்டிருந்தாலும் அச்சமீன்தாரனுக்குப்பின் பட்டத்துக்கு வருகிற அவனுடையமகன் அக்கடன்களுக்குக் கட்டுப்பட்டவனாகவே இருக்கிறான் அதாவது ஒருவன் தகப்பனிடமிருந்து வாரசுபாத்தியப்படி அடைந்திருக்கும் ஜமீன் சொத்துக்கள் அவனிட தகப்பனு

டைய கடன்களுக்கு பாத்தியப்படமாட்டானென்று வாதாடுகிற
தாயிருந்தால் அக்கடன்கள் துன்மார்க்கமான செலவுகளுக்காக
தகப்பனால் வாங்கப்பட்டவை யென்று அவன் ருசுப்படுத்த வே
ண்டும். இல்லாவிடில் அவனுடைய வாதம் பிரயோஜனப்பட மா
ட்டாது. அவசியமான செலவுகளுக்காகவன்றி அனாவசியமான
செலவுகளுக்காகவே அக்கடன்கள் தகப்பனால் வாங்கப்பட்ட
வைகளாக இருந்தாலும் பின் ஜமீன்தாரனாகிய மகன் அவைக
ளுக்கும் கட்டுப்பட்டவனாகவே இருக்கிறான். 6 மத். 1; 9 மு.
இ. அ. 128 பிரிவிகௌன்ஸில் தீர்ப்பு.

## 41வது அத்தியாயம்

---

## கடன்கள்

**577.** கடன்களைப்பற்றி நம்முடைய தர்மசாஸ்திரங்களி
ல அடியில் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது. "ஒவ்வொரு
வரும் அவரவர் பட்ட கடன்களை முற்றிலும் தீர்க்கக்கடமைப்
பட்டிருக்கிறார்கள். ருணத்துரோகமானது மிகவும் பாவமுள்ள
து. வாங்கின கடனைத் தீர்க்காமல் இறந்து போகிறவன் அவ
ற்றின் கட்டுவழிக்காக கடன்கொடுத்தவனுடைய குடும்பத்தில
மறு ஜன்மத்தில மனுஷ்யரூபமாயாவது, மாடு, குதிரை, கழு
முதலிய ஜந்து ரூபமாயாவது பிறந்து வேலைசெய்து கடனை
கட்ட வேண்டியவனாகிறான். இருண பாதையினின்று தப்பித்து
க்கொள்ள யாவராலும் எவ்விதத்திலும் முடியாது. மேலும்
வாங்கினகடனைக் கொடுக்காமல இறந்துபோகிறவன் என்ன
புண்ணியம் செய்திருந்தாலும் அவைகளின் பலன்கள் யாவும்
கடன்கொடுத்தவனையே சேரும். ஆகையால வாங்கினகடன்க
ளைத் தீர்ப்பதே ஒவ்வொருவருக்கும் முதற்கடமையாக இருக்
கிறது."

**578.** கடன்கள் அவைகளேற்படுகிற காரணங்களைப்பற்றி
அடியிற்கண்டபடி பொதுவாய் மூவகையாகப் பிரிக்கப்படலாம்;
அதாவது:

(1) குடும்பசமரக்ஷணை, பெண்களின் விவாகம், பிள்ளைகளின் உபநயனம், இறந்தவர்களின் உத்தரக்கிரியை சிராத்தம் முதலான அவசியமாயும் நியாயமாயுமுள்ள குடும்பார்த்தமான செலவுகளின் பொருட்டு ஏற்படுகிற கடன்கள்.

(2) குடும்ப அவசியங்களின்பேரில் ஏற்படாமலிருந்த போதிலும் துன்மார்க்கசம்பந்தமாயும் அக்கிரமமாயும் இல்லாமலிருக்கிற கடன்கள்.

(3) துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளின் பொருட்டு ஏற்படும் கடன்கள்.

**579.** மேலும் கடன்கள் யாரால் வாங்கப்பட்டதென்பதை யனுசரித்து மற்றும் நான்கு வகைப்படும் —

(i) ஒருவன் தானே சொந்தத்தில் வாங்கின கடன்கள்.

(ii) தனக்காக தன் ஏஜண்டு அல்லது காரியஸ்தனால் வாங்கப்பட்ட கடன்கள்.

(iii) தகப்பன் பாட்டன் ஆகிய முன்னோர் பட்டகடன்கள்.

(iv) டி ஏஜண்டும் முன்னோருமல்லாத மற்றவர் பட்ட கடன்கள்.

இவ்வாறான பலவகைக் கடன்களைப் பற்றியும் அடியில் தனித்தனியாய் கவனிப்போமாக.

## I. ஒருவன் தானே சொந்தத்தில் பட்ட கடன்கள்.

**580.** ஒவ்வொருவரும் அவரவர்கள் சுதாவில் வாங்கின எல்லாக்கடன்களையும் முற்றிலும் தீர்க்கக்கடமைப் பட்டிருக்கிறார்கள். கடன் வாங்கினவனன்றி அவனுடைய சொத்துக்களும் அக்கடன்களுக்கு ஜவாப்தாரியாக இருக்கின்றன.

## II. ஏஜண்டுவாங்கின கடன்கள்.

**581.** தன நிமித்தம் தன்ஏஜண்டு அல்லது காரியஸ்தனால் வாங்கப்பட்ட கடன் களையும ஒருவன தீர்க்ககடமைப்படடவனாக இருககிறான. ஏஜண்டானவன் தன்னால் நியமிககபபடடவனாயாவது சட்டபபடி ஏறபடடவனாயாவது இருககலாம. மேலும ஏஜண்டுவாங்கின கடனகள் வெளிபபடையாக வாவது குறிப்பாகவாவது தன்னால அவனுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரத்தை யனுசரிதது வாங்கப்படடதாகவும இருக்கலாம.

**582.** குடுமபததலைவனா யிருககும் குடும்ப மானேஜரானவன் குடுமபகாரியங்களை நடத்துவதில குடுமபததிலுள்ள மறறெல்லாப்பங்காளிகளின ஏஜண்டாக பாவிக்கபபடுவான். குடுமபாாத்தமாயுள்ள செலவுகளுககாக அவசியமானால கடன்வாஙக மானேஜருககு சடடப்படி அதிகாரமுண்டு. அவ்வாறு குடுமபார்ததமான செலவுகளுககாக கடன்வாஙகும விஷயததில் அவன் மறறவாகளின காரியஸதனாக இருக்கிறான. ஆகையால அவனால் வாஙகப்படும குடுமப அவசியமாயுள்ள கடன்களுககு குடும்பத்திலுள்ள மறறவாகளெல்லோரும கட்டுபபடடவாகளாகிறாகள். மேலும் குடுமபாாத்தமான செலவுகளுக்காக கடன வாங்குமபடி நேரநதால் மானேஜரானவன் மறறபபஙகாளிகளுடைய சமமதியைப்பெற்றுககொண்டே கடனவாஙகவேணடுமென்ற அவசியமுமில்லை. குடுமப அவசியமாயுள்ள கடன்களுககு மற்றவர்கள் சம்மதிகொடுக்க மறுதளிததாலும மானேஜரானவன் தன்னதிகாரத்தை இழக்கவு மாட்டான். ஆகையால் குடும்ப மானேஜருடைய கடன்களுக்கு மறறவர்கள கட்டுபபடடவர்களா அலலவா என்பது தீாமானிக்கபபடுவதற்கு அக்கடன்கள் குடும்ப அவசியத்தின்பொருட்டு வாங்கப்பட்டனவா அலலவா வென்பது குறிப்பேயன்றி அக்கடன் களுககு அவாகள சம்மதி கொடுத்திருக்கிறார்களா இல்லையாவென்பதும அககடனின் வசூலுக்காக செய்யப்பட்ட தாவாவில் அவாகள் கக்ஷிக்காராகளா அல்லவா வென்பதும் காரணங்களாக மாடடாது. 20 கல் 453; 23 பம். 372.

**583.** குடும்பார்த்தமாய் ஏற்பட்ட ஒருகடனை காலாவதியாய்ப்போவதற்கு முந்தி ஒப்புக்கொண்டு அதன் காலாவதியை அதிகப்படுத்தவும் மானேஜருக்கதிகாரமுண்டு. ஆனால் காலாவதியாய்ப்போன ஒருகடனை குடும்பசொத்திலிருந்து தீர்க்க மானேஜருக்கு அதிகாரமில்லை. 5 மத 169; 17 பம் 512.

**584.** குடும்பார்த்தமான செலவுகளுக்காக குடும்பமானேஜரானவன் தன் சொந்த ஐவேசிலிருந்து செலவுசெய்திருந்தாலும் அல்லது தன் சொந்த ஜவாப்தாரித்தனத்தின்பேரில் கடன் வாங்கியிருந்தாலும் அவற்றைக் குடும்பப்பொதுவான சொத்திலிருந்து வாப்சுபெற்றுக்கொள்ள அவன் உரிமையுடையவனாக இருக்கிறான், 20 கல் 18.

**585.** அவிபக்தகுடும்பத்திலுள்ள ஒருபாகஸ்தனால் குடும்பார்த்தமான செலவுகளின்பொருட்டு வாங்கப்பட்டிருந்த கடனின் வசூலுக்காக கடன்கொடுத்தவன் வியாச்சியம்செய்வதாயிருந்தால், கடன்வாங்கின மானேஜரையன்றி மற்றபாகஸ்தர்களையும் பிரதிவாதிகளாகச்சேர்த்தி அவன் வழக்கிடலாம், அல்லது கடன்வாங்கின மானேஜரைக் குடும்பப்பிரதி நிதியாகவைத்தும் தாவாசெய்யலாம். அப்படிப்பட்ட தாவாவில் பெறும்தீர்ப்பும் கக்ஷிக்காரர்களாக சேர்க்கப்படாத மற்றபாகஸ்தாகளுடைய பங்குசொத்தையும் கட்டுப்படுத்தும் அதாவது, குடும்பமானேஜரால் குடும்பார்த்தமாய் வாங்கப்பட்ட கடன்களின்பேரில் பிறக்கும் டிக்ரிகளுக்கு எல்லாபாகஸ்தர்களும் கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள், அவ்வாறு கட்டுப்படுவதற்கு அவர்களும் வியாச்சியத்தில் கக்ஷிக்காரர்களாக இருந்து அவர்கள் பேரிலும் டிக்கிரிபிறந்திருக்கவேண்டுமென்ற அவசியமில்லை, அவர்களுடைய பொறுப்பானது கடனினுடைய சுபாவத்தைப்பற்றியதாக இருக்கிறதேயன்றி வழக்கில் அவர்கள் கக்ஷிக்காரர்களாக சேர்க்கப்பட்டிருக்கிறார்களா இல்லையா என்பதைப்பற்றியதாக இல்லை. 10 கல் 1; 14 பம் 597; 18 பம் 147; 21 பம் 616; 23 பம் 372.

**586.** குடும்ப அவசியமான செலவுகளுக்காக குடும்பமா னேஜரால் வாங்கப்பட்ட நியாயமான கடனகள்மட்டும் மற்றபா கஸ்தர்களையும் கட்டுப்படுத்துகின்றனவேயன்றி தன் அதிகார வரம்பைமீறி மானேஜர் வாங்கும் கடன்கள் மற்றபாகஸ்தாகளை க்கட்டுப்படுத்தமாட்டாது. 6 மூ. இ. அ. 393.

**587.** ஆகையால் அவிபக்த குடும்பத்தின் காரியங்களைநட த்தும மானேஜருக்குக் கடனகொடுக்கிறவாகள் மற்றபாகஸ்தா களையும கட்டுப்படுத்தவேணடுமென்று விரும்பினால், அக்கடன வாங்கப்படுகிற அவசியத்தையும நியாயததையுமபற்றி செவ்வை யாய் விசாரித்துத் தெரிநதுகொண்டும நல்ல எண்ணததோடும கடன்கொடுக்கவேண்டும. குடுமபமானேஜரால வாஙகபபட்ட கடனைப்பற்றி வழக்கு உண்டானால அக்கடன குடுமப அவசியத தின் பொருட்டு வாங்கப்பட்டதென்பதை ருசுப்படுததும பளு வும் கடன்கொடுததவன பேரிலேயே சுமநதிருக்கிறது. 6 மூ இ. அ. 393; 21 அல 83; 21 பம 808; 26 கல் 820.

**588.** குடும்பவிஷயமான காரியங்களை நடததுவதில பெ ண்சாதியானவள் சில சமயஙகளில புருஷனுடைய ஏஜண்டாக ஏற படுகிறாள். அவள தனனுடையவும தனகுடுமபததினுடையவும சம்ரக்ஷணைமுதலிய குடும்பாாத்தமான செலவுகளுககாக கடன வாங்கினால் அவைகளுக்கு புருஷன் கட்டுப்பட்டவனாக இருக கிறான். 1 அல் 122; 9 அல் 147.

ஆனால் புருஷனுடைய கட்டினின்றும் விலகி தனியே இரு [illegible]டைய கடன்களுக்கு புருஷன் கட்டுப்பட்டவனாக மாட் டான். 1 மது. ஹை. கோரி. 375.

**589.** புருஷனால் கொடுக்கப்பட்ட அதிகாரத்தின்பேரில் பெண்சாதியானவள் புருஷன்பொருட்டு ஒருகாரியம அல்லது அலுவலை நடத்தினால் அதுவிஷயமாக தன் அதிகாரவரம்புக்குட் பட்டு பெண்சாதிவாங்கும கடன்களுக்கு புருஷன் கட்டுப்பட்ட வனாகிறான்.

**590.** அவிபக்தகுடும்பஸ்தர்கள் ஒன்றுசேர்ந்து வியாபா ரமுதலிய காரியங்களைக் கூட்டாக நடத்தினால் அவைகளிலிரு

ந்து ஏற்படுகிற லாபநஷ்டங்கள் குடும்பத்தாரெல்லோருக்கும் பொதுவாய பாத்தியப்பட்டதாக இருக்கின்றன. ஆகையால் அக்காரியங்களை நடத்துகிற முக்கியஸதன் அல்லது முக்கியஸ தாகள் அவைகளின் பொருட்டு குடும்ப சொததின் நாணயத்தின் பேரிலும கடனவாங்க அதிகாரமுள்ளவாகளாக இருக்கிறாகள். நலல எண்ணத்தோடும யோக்கியமாயும் வாங்கப்படுகிற அப்ப டிபபட்ட கடன்களுக்கு மறறவாகளும கடடுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். 1 கல் 475; 14 இ. அ. 187-15 கல் 70; 20 கல் 453; 20 பம 767.

591. அவிபக்த குடுமபத்திலுள்ள ஒருபாகஸதன் தன சொநதசசெலவுகளுக்காக கடனவாஙகினால அதில மற்றபாகஸ தாகளுக்கு யாதொருசமபநதமும் இலலை. கடன்வாங்கினவனும் அவனுடைய பங்கு சொத்துமே அதற்குபாததியப்படவேண்டும 1 மது. 354; 10 கல். 316.

(ஆனால தகப்பன் பாட்டன் ஆகியமுன்னோர் பட்டகடன் கள இவ்விதிக்கு விலக்காயிருககினறன. இதைபபற்றி கீழ்வ ரும பிரிவுகளைபபாரககு.)

## III. தகப்பன் முதலிய முன்னோர் பட்ட கடன்கள்.

592. ருணத்திரோகத்தால் ஏற்படும் பாவமானது கடன் வாஙகினவனைக் கொடியநரகத்துக்கு ஆளாக்குகிறபடியால் வாங கினகடனைததீர்க்காமலே ஒருவன் இறநதுபோய்விடும் பக்ஷத் தில, அதைத்தீர்த்து அதற்குரியநரகத்தினின்றும் அவனைவிடுவி க்க வேண்டுவது அவருடைய பிள்ளை பேரன் ஆகியசநததியார்க ளுடைய முதறகடமையாக இருக்கிறதென்று ஹிநதுதர்மசாஸ் திரங்களில சொல்லப்பட்டிருககிறது. தகப்பன் பாட்டன்முதலா ன முன்னோர்களை நரகத்துக்குபபோகாமல் விடுவிபபது பிள்ளை பேரன் முதலான சந்ததியாருடைய பெருத்தகடமையாக இருக் கிறபடியால், அப்படிப்பட்ட கடமையைச்செய்ய அவாகள் அம் முனனோரிடமிருநது யாதொருசொத்தையாவது அடைந்திருக் கவேண்டுமென்ற அவசியமில்லையென்றும், யாதொருசொத்தை யும் அடையாமலிருக்கச்செயும் தகப்பன் பட்டகடனை பிள்ளை

யானவன் வட்டியுடனேயும் பாட்டன்பட்டகடனை பேரன் வட்டியன்னியிலும் சொந்த ஐவேசைக்கொண்டும் தீர்க்கக்கடமைப்பட்டிருக்கிறார்கள் என்றும் தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

593. ஆனாலும் இக்காலத்தில் தகப்பன் பாட்டன்களுடைய கடன்களை பிள்ளை பேரன் மேறசொல்லியவாறு தங்கள சொந்த ஐவேசைகொண்டும் தீர்க்கக்கடமைப்பட்டவர்களல்ல. தகப்பன் பாட்டன்களிடமிருந்தாவது அவர்கள் வழியாகவாவது ஏதேனும் சொத்தை அடைந்திருந்தால்மட்டும் அச்சொத்தினளவுக்கு அவர்களுடைய கடன்களை பிள்ளை பேரர்கள் தீர்க்கவேண்டியவர்களாக இருக்கிறார்களேயன்றி, யாதொருசொத்தையுமடையாமலிருந்தால் அமமுன்னோருடைய கடன்களை பிள்ளை பேரர்கள் சட்டப்படி தீர்க்கக்கடமைப்பட்டவர்களல்லவென்றும், பிள்ளை பேரர்களுடைய சரீரத்தின்பேரிலாவது சுயார்ஜித சொத்தின்பேரிலாவது அம்முன்னோருடைய கடன்காரர்கள் பிரவேசிக்கக்கூடாதென்றும பலஹைகோர்ட்டுகளாலும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 22 மத. 166; 27 மத. 243.

594. தகப்பன் பாட்டன்களிடமிருக்தாவது அவர்கள் வழியாகவாவது ஏதேனும் சொத்தையடைந்திருந்தால் என்று முன்பிரிவில் சொல்லப்பட்டதினால், பிள்ளை பேரர்கள் அடைந்திருக்கிற சொத்தானது அம்முன்னோருடைய சுயார்ஜிதமாகவே இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. அம்முன்னோருடைய பூர்வார்ஜித சொத்தாகவே யிருந்தாலும் அதைக்கொண்டும் பிள்ளை பேரர்கள் அம்முன்னோருடையகடன்களைத் தீர்க்கக்கடமைப்பட்டிருக்கிறார்கள், அதாவது, குடும்பப்பொதுவான சொத்தில் தகப்பனுடைய பங்கன்றி பிள்ளையினுடைய பங்கு சொத்தும் தகப்பனுடைய கடனுக்கு பாத்தியப்பட்டதாக இருக்கின்றது. மேலும் 592-வது பிரிவிற்சொல்லிய சாஸ்திர விதிகளையனுசரித்து தகப்பனுடைய கடன்களைப் பிள்ளையானவன் தீர்க்கவேண்டியதற்கு அவைகள் குடும்பார்த்தமான செலவுகளுக்காகவே யேற்பட்டிருக்கவேண்டுமென்ற அவசியமுமில்லை. குடும்பார்த்தமாயில்லாமல் தகப்பனுடைய சொந்த உபயோகத்துக்காகவே வாங்

கப்பட்டதாக இருந்தாலும் அப்படிப்பட்ட கடன்களையும் பிள்ளையானவன் குடும்பசொத்து முழுவதையுங்கொண்டு தீர்க்கக்கடமைபபட்டவனுக இருக்கிறன். 1 இ. அ. 321; 7 கல் 52; 6 இ. அ. 88; 4 மது. 1; 9 இ. அ. 128; 8 அல். 231; 16 மது. 99; 20 கல. 328; 27 மது. 326.

**595.** ஆனல தகப்பனுடைய சொந்தக்கடன்கள் துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளின்பொருட்டு அவனுல் வாங்கப்பட்டனவாக இருநதால், அபபடிப்பட்ட கடன்களுக்குப்பிள்ளைகள் கட்டுப்படவேண்டிய அவசியமில்லையென்று சாஸ்திரங்களில சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் 578-வது பிரிவில் சொல்லியிருக்கிற மூவகைக்கடனகளில, துன்மார்க்க சமபந்தமாயும் அக்கிரமமாயுமுள்ள மூன்றாவதுவகைக் கடன் நீங்கலாக தகப்பனுடைய மறற இருவகைப்பட்ட கடன்களுக்கு மாத்திரம் பிள்ளை கட்டுப்பட்டவனுக இருக்கிறன். அவ்விருவகைபபட்ட கடன்களுககு பூர்வார்ஜிதமான குடும்பப் பொது சொத்தில் தகப்பனுடைய பஙகையும் பிள்ளையினுடைய பங்கும பாத்தியப்பட்டதாக இருக்கின்றது. 1 இ அ. 321; 4 மது 1; 17 இ. அ. 11-17 கல். 584.

ஆனல் துன்மார்க்கமாயும அக்கிரமமாயுமுள்ள செலவுகளுக்காக தகப்பன் கடன்கள் வாஙகியிருநதால் அப்படிப்பட்ட கடன்களுக்கு தகப்பனுடைய பங்குமட்டும பாத்தியப்படுமேயன்றி பிள்ளையினுடைய பங்கு சொத்து எவ்வளவும் பாத்தியப்படமாட்டாது. 20 கல். 238; 11 மது. 64; 27 மது. 326; 6 அல். 234; 24 பம. 343.

**596.** தாசிவேசிகள் விஷயமாயும் கள் சாராயம் குடித்தல் சூதாடுதல் முதலான கெட்ட நடத்தை விஷயமாயும் செய்கிற செலவுகள் துன்மார்க்கமான செலவுகளெனப்படும். அயோக்கியமான செய்கைகளையும் சர்க்காரால் தண்டிக்கப்படத்தக்க குற்றங்களையும் செய்வதினுல் ஏற்படும் செலவுகளும் தண்டங்களும் அபராதங்களும் அக்கிரமமான செலவுகளாகும். இவ்வகைப்பட்ட காரணங்களால் தகப்பனுல் வாங்கப்படும் கடன்க

ளைத் தீர்க்கவேண்டிய கடமை பிள்ளைக்கு ஏற்படுகிறதில்லையென்று தர்மசாஸ்திரங்களில் கூறியிருக்கிறதை யனுசரித்து அப்படிப்பட்ட கடன்களுக்கு பிள்ளை எவ்வளவும் பாத்தியப்படவேண்டியதில்லையென்று எல்லா ஹைகோர்ட்டுகளாலும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

**597.** ஆனாலும் தகப்பன்பட்ட ஒரு கடனானது துன்மார்க்கமான அல்லது அக்கிரமமான செலவுகளுக்காக அவனால் வாங்கப்பட்டதென்றும் அது காரணம் பற்றி தான் அதற்குக் கட்டுப்பட்டவனல்லவென்றும் பிள்ளையானவன் வாதம் செய்தால் அப்படிப்பட்ட வாதத்தை திருப்தியாய் ருசுப்படுத்தும் பளுவு அப்பிள்ளையினுடையதாகவே இருக்கிறது. அதைத்திருப்தியான சாக்ஷியத்தால் ருசுப்படுத்தாத வரையில் பிள்ளையானவன் அக்கடனுக்கு பாத்தியப்பட்டே தீரவேண்டும். 15 இ. அ. 99. 12 அல். 99; 12 பம. 625; 14 பம. 320.

**598.** கடன்பட்ட தகப்பன் ஊதாரித்தனமாயும் விமரிசையில்லாமலும் தாறுமாறுக்கச் செலவுகள் செய்துவந்தான் என்பதினாலேயே அவனுடைய கடன்கள் துன்மார்க்க சம்பந்தமாய் அல்லது அக்கிரமமாய் ஏற்பட்டனவென்று எண்ணப்படமாட்டாது. இன்ன கடனானது இன்ன குறிப்பிட்ட துன்மார்க்கமான அல்லது அக்கிரமமான நடத்தையால் ஏற்பட்டது என்று பிரத்தியேகமான சாக்ஷியத்தால் ருசுப்படுத்தப்படவேண்டும். இல்லாவிடில் பிள்ளையினுடைய வாதம் பிரயோஜனப்படமாட்டாது.

**599.** தகப்பன் வேறு யாருக்காகிலும் ஜாமீனாக நின்று கடன் வாங்கிக்கொடுத்திருந்தால் அச்சாமீன கடனுக்கும் பிள்ளைகள் பாத்தியப்படவேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஜாமீன் போடுவதானது துன்மார்க்க சம்பந்தமானதுமல்ல, அக்கிரமமானதுமல்ல. ஆகையால் அதற்குப் பிள்ளைகளுடைய பங்கு சொத்தும் பாத்தியப்பட்டதாக இருக்கிறது. அதாவது கடன் கொடுத்தவன் ஜாமீன்தாரனுடைய பிள்ளைகளின் பங்கு சொத்தின்பேரிலும் தொடர்ந்து அக்கடனை வசூல் செய்துகொள்ளலாம். 11 மத. 373; 23 பம் 451.

**600.** ஆனபடியால் தகப்பனுடைய கடன்களுக்கு பிள்ளைகள் ஏற்பட்டு பாத்தியப்படிருக்கிறார்களென்பது கடனின் தன்மையை யனுசரித்ததாக இருக்கிறதேயன்றி தகப்பனிடமிருந்து அடைந்திருக்கிற சொத்தின் தன்மையைப் பொறுத்ததாக இல்லை. அதாவது, சொத்தானது தகப்பனுடைய சுயார்ஜிதமாக இல்லாமல் பூர்வார்ஜிதமானதாகவே யிருந்தாலும் துனமாக்கமயமாயும் அக்கிரமமாயுமுள்ள கடன்கள் நீங்கலாக மற்றெல்லாவகைப்பட்ட தகப்பனுடைய கடன்களுக்கும் பிள்ளையினுடைய பங்கு சொத்து பாத்தியப்பட்டதாக இருக்கின்றது. 6 மூ இ. அ. 421; 1 இ. அ. 321; 11 மது. 64; 12 மது 309; 27 மது. 326.

**601.** ஆனாலும் ஒருவனுடைய எல்லாக கடன்களுக்கும் அதாவது ஒருவனுடைய துனமாக்கமாயும் அக்கிரமமாயுமுள்ள கடன்களுக்குங்கூட அவனும் அவனுடைய தனியான சொந்த சொத்துக்களும் பாத்தியப்பட்டதாக இருக்கிறபடியால், தகப்பனிடமிருந்து பிள்ளை அடைந்திருக்கும் சொத்தானது அத்தகப்பனுடைய சுயார்ஜிதமானதாக இருந்தால் அப்போது அவனுடைய துனமாக்கமாயும் அக்கிரமமாயுமுள்ள கடன்களையும் பிள்ளையானவன் அச்சொத்தைக்கொண்டு தீர்க்கக் கடமைப்பட்டவனாகிறான். அதாவது அவிபக்த குடும்பத்துக்குரித்தான ஸர்வைவர்ஷிப் பாத்தியப்படிக்கல்லாமல் பிள்ளையானவன் தகப்பனிடமிருந்து வாரசு பாத்தியப்படி சொத்தை யடைந்திருந்தால் அப்போது அச்சொத்து முழுவதும் தகப்பனுடைய எவ்வகைப்பட்ட கடன்களுக்கும் பாத்தியப்பட்டதாக இருக்கின்றது. 6 இ. அ. 88; 17 மது. 144; 7 மது. 586.

**602.** தகப்பன் பட்ட கடன்களுக்கு அவனுடைய ஜீவதசைக்குப் பிறகுதான் பிள்ளைகள் பாத்தியப்பட்டவர்களாவார்கள் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் குடும்ப பொதுவான சொத்தில் பிள்ளைகளுடைய பங்கானது தகப்பன் உயிரோடிருக்கும்போதே அவனிட கடன்களுக்கு பாத்தியப்பட்டதாக இருக்கின்றது. 20 கல். 328; 11 மது. 64; 22 மது. 49; 27 மது. 326.

பெறுவதே உசிதமானதாகும். 12 அல். 99; 9 மது. 343; 11 மது 64.

**610.** தகப்பனுடைய கடன்களைத் தீர்க்கும் விஷயத்தில் பிள்ளைகள் எவ்வாறு பாத்தியப்பட்டவர்களாக இருக்கிறார்களோ அவ்வாறே பாட்டனுடைய கடன்களுக்கு பேரர்கள் பாத்தியப்பட்டவர்களாக இருக்கிறார்கள். 19 அல. 26.

## IV. ஏஜெண்டும் முன்னோருமல்லாத மற்றவர் பட்ட கடன்கள்.

**611.** ஏஜெண்டுகளும தகப்பன் முதலிய முன்னோர்களும் நீங்கலாகவுள்ள இதரர்கள் பட்ட கடன்களுக்கு ஒருவன் எவ்வளவும பாத்தியப்படவேண்டியதில்லை. (12 மது. 325) ஆனால் ஒருவன் எவரிடமிருந்தாவது வார்சு பாத்தியப்படி சொத்தை யடைந்திருந்தால் அச்சொத்தினளவுக்கு அவருடைய கடன்களைத் தீர்க்கவேண்டிய கடமை அவனுக்கு ஏற்படுகிறது. இறந்தவனுடைய சொத்தை யடைகிற காரணத்தால் அச்சொத்தினளவுக்கு அவனுடைய கடன்களைத் தீர்க்கவேண்டிய கடமையும் உண்டாகிறது. அதுபற்றி கடன் வாங்கினவனுடைய சொத்து எவனிடமிருந்தாலும் கடன் கொடுத்தவன் அதன்பேரில் தொடர பாத்தியமுள்ளவனாக இருக்கிறான். 3 மது. 359; 7 மது 580.

மேலும் இறந்தவனுடைய சொத்தை யடைந்த ஒருவன் அச்சொத்தைத்தன் சொந்த செலவுகளுக்காக விநியோகப்படுத்திவிட்டாலும் சொத்துதாரனுடைய கடனைத் தீர்க்கவேண்டிய கடமை அவனை விட்டு விலகிப்போகமாட்டாது. அச்சொத்தினளவுக்கு அவன் சுதாவிலும் பாத்தியப்பட்டவனாக இருக்கிறான். 8 பம். 220.

**612.** தாயாருடைய சொந்தக்கடனுக்கு மகனாவது மகனுடைய சொந்தக்கடனுக்கு தாய் தகப்பனாவது பாத்தியப்பட்டவர்களல்ல. அண்ணன் தம்பிகள் முதலிய தாயாதிகளில் ஒருவனுடைய கடனுக்கு மற்றவன பாத்தியப்படவேண்டியதில்லை. புருஷனுடைய சொந்தக்கடனுக்கு பெண்சாதியாவது பெண்சாதி

பினுலை ய சொந்தக்கடனுக்கு புருஷனுவது பாத்தியப்பட்டவர்களாக மாட்டார்கள். முன் பிரிவிற் கூறியபடி மேற்சொல்லிய வாகளில் ஒருவன மற்றொருவனுடைய சொத்தை வார்சுபாத்தியப்படி அடைந்திருந்தாலமட்டும அச்சொத்தினளவுக்குள்ள கடனகளுககு அவன பாத்தியப்பட்டவனுவான.

**613.** அவிபக்த குடும்பத்தில தகப்பன் முதலிய முன்ஞோ தவிர வேறு பாகஸ்தன் எவனுவது தன சொந்தத்தில் கடன் வாஙகினுல் அவன குடுமப சொத்தில தனககுள்ள பங்கைக்கொணடும தன சுயார்ஜிததத்தைக்கொண்டும அக்கடனைத் தீாததுககொள்ளவேணடுமேயனறி மற்ற பாகஸ்தாகளுடைய பஙகு சொத்து அககடனுககு எவவளவும பாததியபபடமாட்டாது.

**614.** அவிபக்த குடுமபத்திலுள்ள ஒரு பாகஸ்தனுடைய சொநதக கடனகளுககு அவனுடைய பஙகு சொத்து பாத்தியப்படவேணடியதாஞல் அது அக்கடனுக்காக அப்பாகஸ்தனுல பஙகுப்பிரிவினம செயயபபடடாவது அலலது அவன உயிரோடிருககும்போதே கோாட்டாரால ஜபதி செயயப்படடாவது இருககவேணடும. இலலாவிடில அப்பங்காானது அவன இறநதபிறகு அவனுடைய கடனுக்கு பாத்தியப்படமாட்டாது. அவன இறநதவுடன் அபபஙகு அவனுடன மறைந்துபோய மற்றவாஷிபாகனுடைய பாததியதைப்படி மறற பங்காளிகளை சேரநதுவிடுகிறபடியால அது கடனகாராகளுக்கு பாக்கியப்படததகாததாய்விடுகிறது உயிரோடிருக்கும பாகஸ்தாகள இறநதவனுடைய கடனைத்தீாககக் கடமைபபடாதவாகளாக இருக்கிறபடியால கடன் வாங்கினவனுக்கு தனியான சொத்து ஏதேனுமிருநதால் அதன பேரில மட்டும கடன் கொடுத்தவன தொடரலாமேயனறி குடும்பப்பொதுவான சொததினபேரில தொடர நியாயமில்லை. 6 இ. அ. 88-5 கல். 148; 4 மதா. 302; 5 மதா. 223; 17 மதா. 144; 23 அல. 126

**615.** கடன் கொடுத்தவன் இறந்துபோனபிறகு அக்கடனை அவனுடைய வாரசு அல்லது வாரசுகள் கோாட்டு மூலமாய்

வரும் செய்யவேண்டியதாயிருந்தால், அதற்காக அவ்வார்சு அல்லது வார்சுகள் ஜில்லா கோர்ட்டில் மனுசெய்துகொண்டு வாரசு பாத்திய சாடிபிகேட்டு வாங்கி ஒப்புவிக்கவேண்டும்.

இறந்துபோனவனுக்கு பல வார்சுகளிருந்தால் அவர்கள் ஒவ்வொருவரும் கடன் தொகையில் தன தன பங்குகளுள்ளது கிடைக்க வேண்டுமென்று தனித்தனியாய் பல தாவாக்களை கொண்டு வரக்கூடாது. ஒரு கடன விஷயமாய் எல்லோரும் சேர்ந்து ஒரே தாவாவைக் கொண்டு வரவேண்டும். அவர்களில் யாராவது வாதியாகச்சேர சம்மதிக்காமலிருந்தால் அவன் பிரதிவாதியாக சேர்க்கப்படவேண்டும். 7 அல. 313.

## 15-வது அத்தியாயம்.

### சொத்துக்களின் விநியோகங்கள்.

**616.** சொத்துக்களின் விநியோகங்கள் அடியிற்கண்டபடி பலவகைப்படும்.—

(1) சரியான பிரதிப் பிரயோஜனத்தின்பேரில் செய்யப்படும் அடமானம், போக்கியம், குத்தகை முதலிய பந்தகங்கள்.

(2) சரியான பிரதிப் பிரயோஜனத்தின்பேரில் செய்யப்படும் பரிதீனமாகிய கிரயம். இது சொத்துதாரனாலேயே செய்யப்படுகிற சாதாரண கிரயமென்றும் அவனுடைய கடன்காரர்களால் கோர்ட்டு மூலமாய் செய்விக்கப்படும் ஏலக்கிரயமென்றும் இருவகைப்படும்.

(3) யாதொரு பிரதிப் பிரயோஜனமுமின்றி இஷ்டத்தின் பேரில் இனமாகக் கொடுக்கப்படும் தானம்.

(4) பொதுஜன நன்மையின் பொருட்டும் பரலோகஸார்த்தகமாயும் மதவிஷயமாயும் செய்யப்படும் தர்மங்கள்.

(5) தன் ஜீவதசைக்குப் பிறகு தன் சொத்துக்களை இன்னின்னார் அடைந்துகொள்ளத்தக்கதென்று ஏற்படுத்திவைக்கும் உயில்.

**617.** பிரதிப் பிரயோஜனத்தின்பேரில் ஏற்படுகிற பந்தக பத்தினங்களைப்பற்றி இவ்வத்தியாயத்திலும், பிரதிப்பிரயோஜன மின்றி செய்யப்படும் தானதாமங்களைப்பற்றி அடுத்த அத்தியாயத்திலும், உயில்களைப்பற்றி கடைசி அத்தியாயத்திலும் கூறப் படும்.

**618.** சொத்துக்களை விநியோகம் செய்வதில் ஒருவனுக்கு ள்ள சுதந்திரமானது அச்சொத்துக்களின் பிதுரார்ஜிதம் சுயார்ஜிதமென்ற பிரிவுக்குத்தக்கபடி இருப்பதோடு, சொத்துதாரன் மற்ற பாகஸ்தர்களுடன் சேர்ந்து அவிபக்த குடும்பமாயிருக்கி ருன் அல்லது விபக்தனுயிருக்கிருன் என்றதையும் அனுசரித்த தாக இருக்கிறது. இவைகளைப்பற்றி அடியில் வருமாறு தனித் தனியாய் கவனிப்போமாக.

## I. பிதுரார்ஜித சொத்துக்களின் விநியோகங்கள்.

### (1) விபக்த நிலைமையிலிருப்பவனுடைய அதிகாரம்.

**619.** தகப்பன் முதலான முன்னோர்களிடமிருந்தும் சகோதரர் முதலான பக்க தாயாதிகளிடமிருந்தும் பாகம் பிரிந் திருக்கிற ஒருவன் பிள்ளை முதலிய ஆண் சந்ததியை இல்லாதவ னுகவாவது அல்லது அச்சந்ததியாரிடமிருந்தும் பாகம் பிரிந்த வனுகவாவது இருந்தால், அவன் தன சொத்துக்களை யாருடைய சம்மதியுமில்லாமலே தன் இஷ்டப்படி விநியோகம் செய்துவிட லாம். அவன் தன்னுடைய சொத்தில் பூர்ண சுதந்திரமுடைய வனுக இருக்கிருன். ஆனதுபற்றி எவ்வகைப்பட்ட விநியோக த்தையும் தன் இஷ்டப்படிசெய்ய அவனுக்குப்பூரண அதிகார முண்டு. 11 மது. 246.

### (2) அவிபக்த நிலைமையிலிருப்பவனுடைய அதிகாரம்.

**620.** ஒருவன் உடைத்தாயிருக்கும் சொத்து பிதுரார்ஜித மானதாக இருந்தால், அதில் அவனுடைய பிள்ளை, பேரன், கொள்ளுபேரன் ஆகிய முதல் மூன்று ஆண் சந்ததியார்களும்குடும் பத்தில் பிறந்த மாத்திரத்திலேயே தங்கள் தங்கள் தகப்பனு மார்களுக்குச் சமதையான பாத்தியஸ்தர்களாக ஏற்படுகிருர்கள்.

ஆனது பற்றி பூர்வார்ஜிதமாயுள்ள குடும்பப் பொதுவான சொத்தை ஒருவன் தன் மகன் பேரன் கொள்பேரன் ஆகிய இச் சந்ததியார்களுக்கு விரோதமாக தன்னிஷ்டம்போல் விநியோகம செய்ய சாதாரணமாய் அதிகாரமில்லாதவனாக இருக்கிறான். எந்த பாகஸ்தனுக்கும் குடும்பப் பொதுவான சொத்தில் தன பங்கு விதாசாரத்திற்கு மேற்பட்டதை விநியோகமசெய்ய சாதாரணமாய அதிகாரமில்லை. என்றாலும் தகப்பன் பாட்டன் வாங்கின கடன்களைப் பிள்ளைகளும் பேரர்களும திர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்களென்ற காரணத்தால், கடன்களின பொருட்டு தங்கள் பஙகு விதத்துக்கு மேறபட்ட சொததையுங்கூட விநியோகம் செய்துவிட தகபபனும் பாட்டனும அதிகாரமுடையவாகளாக இருககிறார்கள். மேலும் குடுமபார்ததமாயுளள செலவுகளுக்காகவும் கடன்களுககாகவும தக்க ஏற்பாடுகள செயய வேண்டிய அவசியஙகள் குடும்பததில் அப்போதப்போது நேரிடுமாகையால், குடுமப காரியங்களை நடத்துகிற எஜமானனாகிய குடும்ப மானேஜருக்கு அசசெலவுகளின பொருட்டும கடனகளின் பொருட்டும குடுமபப் பொதுவான சொததில் வேண்டிய அளவை பநதகபராதீனங்கள் செய்ய அதிகாரமுண்டு. ஆகையால் அவிபக்த குடுமபத்திலிருப்பவனுக்குள்ள விநியோக சுதநதரமானது, அவன் ஒரு சாதாரண பாகஸ்தனா, அலலது குடுமப மானேஜரா, அல்லது தகபபன்பாட்டன் முதலான முன்னோ என்ற பல அநதஸ்துகளுக்குத தக்கபடியாயிருககிறது. ஆகையால் இமமூவகை அநதஸதிலிருக்கப்பட்டவர்களுடைய சுதநதிரஙகளைப் பற்றியும் தனிததனியாய் அடியில் விவரிககப்படும.

### (i) சாதாரண பாகஸ்தனொருவனுக்குள்ள சுதந்திரம்.

**621.** பாகஸ்தர்கள் ஒன்றாயிருக்கும் வரையில் குடும்பப் பொதுவான சொத்து முழுவதும எல்லா பாகஸ்தர்களுக்கும பொதுவில் பாத்தியப்பட்டதாக இருப்பதாலும், எந்த பாகஸ்தனுக்கும் அப்பொதுசொத்தில் இன்ன பங்கு அல்லது இவ்வளவு பங்கு என்ற குறிப்பு ஏற்படாமலிருப்பதாலும் எந்த பாகஸ்தனும் தன் பங்கு விதத்துக்குள்பட்ட சொத்தையுங்கூட மற்ற பாகஸ்தர்களுடைய அனுமதியன்னியில் தன்னிஷ்டப்படி விநி

யோகம் செய்யக்கூடாதென்று ஆதியில் ஏற்பட்டிருந்தது. ஆனால் ஒரு பாகஸ்தன் சொந்தத்தில் கடன்பட்டால் அக்கடனுக்காக அவன்பங்கு வீதத்துக்குள்ள சொத்தை அவனுடைய கடன்காரன் கோர்ட்டு மூலமாய் ஜப்தி செய்வித்து ஏலத்துக்குக்கொண்டு வரலாமென்று பிற்காலத்தில் தீர்மானிக்கப்பட்டது. இப்போது அவ்வாறுகடன்காரர்களால் கோர்ட்டு மூலமாய் கிரயம் செய்விக்கப்படுவதோடு எந்த பாகஸ்தனும் தன் பங்கு வீதத்துக்குள்ள சொத்தை சரியான பிரதிப் பிரயோஜனத்தின்பேரில் தானே சுதாவிலும் பராதீனங்கள் செய்துவிடலாமென்றும் இப்பால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 1 மது. ஹை. கோ. ரி. 471; 2 மது. ஹை. கோ. ரி. 270; 10 பம். ஹை. கோ. ரி. 139; 11 மது. 406.

**622.** அவிபக்த குடும்பத்திலுள்ள ஒரு பாகஸ்தனுடைய பங்கு சொத்தைக் கிரயம்பெற்ற அன்னியன் மற்ற பாகஸ்தர்களுடன் சேர்ந்து பொதுவாய் அனுபவிக்கலாம். அவ்வாறு செய்ய சௌகரியப்படாவிட்டால் அப்பங்கைத் தனியாய்ப் பிரித்துக் கொடுக்கும்படி பாக வியாச்சியம் செய்யலாம். 10 பம். ஹை. கோ. ரி. 156.

**623.** ஆனால் எந்த பாகஸ்தனும் தன் பங்கு வீதத்திற்கு உட்பட்ட பாகத்தையுங்கூட யாதொரு பிரதி பிரயோஜனமுமில்லாததாயிருக்கிற தானமூலமாய்க் கொடுத்துவிட அதிகாரமில்லாதவனாக இருக்கிறான். 8 மது. ஹை. கோ. ரி. 6; 7 மது. 357, 9 மது. 273; 11 மது. 246; 16 மது. 84.

மேலும் ஆயிசு காலத்துக்குப் பிறகு ஊர்ஜிதத்துக்கு வரவேண்டியதாயிருக்கிற உயில் மூலமாயும் ஒரு பாகஸ்தன் தன் பங்கு சொத்தை விநியோகம் செய்யக்கூடாது. 8 மது. ஹை. கோ. ரி. 6; 6 இ. அ. 88; 5 பம். 62; 16 மது. 353.

**624.** ஆகிலும் பரலோக ஸார்த்தகமாயுள்ள தர்மங்களின் பொருட்டு ஒரு பாகஸ்தன் தன் பங்கு சொத்தில் சொல்ப பாகத்தை தானமாகக் கொடுக்கலாம். (இதைப்பற்றி அடுத்த அத்தியாயத்தைப் பார்க்க.)

## (ii) குடும்ப மானேஜருக்குள்ள சுதந்திரங்கள்

**625.** அவிபக்த குடும்பஸ்தர்களில் ஒருவன் சாதாரண பாகஸ்தனும்மட்டுமிராமல் குடும்ப காரியங்களை நடத்தும மானேஜர் என்ற அதிகாரத்தையு முடையவனாக இருந்தால், சாதாரண பாகஸ்தர்களான மற்றவர்களைவிட அவனுக்கு அதிகமான சுதந்திரமிருக்கிறது. குடும்பத்தில் அப்போதைக்கப்போது ஏற்படும குடும்பார்த்தமாயுள்ள செலவுகளுக்கும குடும்பப் பொதுவான கடன்களுக்கும குடும்ப சொத்தின வருமபடிகள் போதாமலிருந்து அவைகளுக்காக சொத்தின் ஒரு பாகத்தை விநியோகம செய்யும்படியான அவசியம நேரிட்டால், அப்போது அந்த அவசியத்தினளவுக்கு மானேஜரானவன குடும்பப்பொதுவான சொத்தை பந்தகபராதீனங்கள செய்ய அதிகாரமுள்ளவனாக இருக்கிறான். குடும்ப காரியங்களை நடத்துவதில் அவன மற்றெல்லோருடைய ஏஜண்டாக இருப்பதால குடும்பார்த்தமாயுள்ள அவனுடைய நடவடிக்கைகளுக்கு அவர்களெல்லோரும கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். ஆனபடியால் அப்படிப்பட்ட நடவடிக்கைகளை அவன மற்றபாகஸ்தர்களுடைய சம்மதி பெற்றுக்கொண்டே செய்யவேண்டுமென்ற அவசியமுமில்லை. குடும்ப அவசியத்தின பேரில் நியாயமாய் ஏற்படுகிற பந்தகபராதீனங்களுக்கு எந்த பாகஸ்தனாவது சம்மதம கொடுக்க மறுத்திருக்கிறதினாலேயே குடும்ப மானேஜரானவன் தனக்குள்ள அதிகாரத்தை இழக்கவுமாட்டான். 6 மூ. இ அ 393; 6 மது. ஹை. கோ. ரி. 371; 2 பம. 666; 9 மது. 266.

**626.** ஆகிலும் மேறசொல்லியவாறான குடும்பார்த்தமான அவசியம யாதொன்றுமில்லாமல் மானேஜரானவன் குடும்பப் பொதுவான சொத்தை விநியோகம் செய்யக்கூடாது. அப்படிச் செய்தால அவனுடைய பங்குமட்டுமே அவ்விநியோகத்துக்கு பாத்தியப்படும. மற்ற பாகஸ்தர்களுடைய பங்கு உட்படமாட்டாது. மானேஜருடைய விசேஷ அதிகாரமானது இவ்வாறு குடும்ப அவசியத்தைப் பொறுத்ததாக இருக்கிறபடியால், மற்ற பாகஸ்தர்களையும் கட்டுப்படுத்தவேணுமென்ற எண்ணத்துடன் அவனுக்குக்கடன் கொடுக்கிறவர்களும குடும்பப் பொதுவான

சொத்தை அவனிடமிருந்து விநியோகம் பெறுகிறவர்களும் அவைகளினுடைய அவசியத்தையும் நியாயத்தையும் செவ்வையாய் விசாரித்துத் தெரிந்துகொண்டும் நல்ல எண்ணத்துடனும் நடவடிக்கை நடத்தவேண்டும். 6 மூ. இ. அ. 393; 19 இ. அ. 33; 26 கல. 8-0; 21 அல. 83.

### (iii) தகப்பனுக்குள்ள அதிகாரம்.

**627.** தகப்பனும் பிள்ளைகளும் அடங்கிய அவிபக்த குடும்பத்தில் குடும்பத் தலைவனாயிருக்கும் தகப்பனே சக்தியுள்ளவரையில் குடும்பத்துக்கு மானேஜராகவும் இருக்க சுதந்திரமுடையவனாக இருக்கிறான். குடும்ப மானேஜர், தகப்பன் என்ற இருவித அந்தஸ்துகளை அவன் ஏககாலத்தில் உடையவனாக இருக்கிறபடியால் குடும்பப் பொதுவான சொத்தை விநியோகம் செய்வதில் அவனுக்குள்ள சுதந்திரமானது மிகவும் விசேஷமானதாக இருக்கிறது.

**628.** குடும்ப அவசியமாயுள்ள செலவுகளுக்காகவும் கடன்களுக்காகவும் குடும்ப மானேஜரான தகப்பனால் செய்யப்படுகிற குடும்ப சொத்தின் விநியோகங்களுக்கு 625-வது பிரிவிற் கூறியபடி பிள்ளைகள் கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். மேலும் குடும்ப அவசியமில்லாததாயிருக்கிற அவனுடைய சொந்தக்கடன்களின்பொருட்டு அவனால் செய்யப்படுகிற பராதீனங்களுக்கும் பிள்ளைகள் கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். ஏனெனில் முன் அத்தியாயத்தில் சொல்லியபடி தகப்பனானவன் கடன்பட்டு இறந்துபோனால் இரண பாதையினால் ஏற்படும் நரகத்துக்கு ஆளாக்காமல் அதினின்றும் அவனை விடுவிப்பது பிள்ளைகளுடைய முதற்கடமையாக இருக்கிறதென்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளுக்காக தகப்பன் கடன்பட்டிருந்தால் அக்கடன்களுக்குமட்டும் பிள்ளைகள் கட்டுப்பட்டவர்களல்லவேதவிர அது நீங்கலாக மற்றெவ்வகைப்பட்ட கடன்களையும் பிள்ளைகள் பித்ரார்ஜிதமாயாவது பூர்வார்ஜிதமாயாவது

உள்ள எல்லா சொத்தைக்கொண்டும் தீர்க்கக் கடமைப்பட்டி
ருக்கிறார்கள். பிள்ளைகள் தீர்க்கக் கடமைப்பட்டிருக்கிற கடனை
தகப்பனானவன் தானேயும் தீர்த்துக்கொள்ள அதிகாரமுடைய
வனாக இருக்கிறான். ஆகையால் அப்படிப்பட்ட கடன்களைத்
தீர்ப்பதற்காக தகப்பனால் செய்யப்படுகிற குடும்ப சொத்தின்
பந்தக பராதீனங்களை பிள்ளைகள் ஆக்ஷேபிக்கக்கூடாதவர்களாக
இருப்பதும் தவிர அவைகளுக்கு அவர்கள் முற்றிலும் கட்டுப்பட்
டவர்களாகவு மிருக்கிறார்கள். 1 இ. அ. 321; 11 பம். 64;
13 அல். 216; 12 பம். 509; 17 கல. 584; 13 இ. அ. 1
21 மதா. 222; 22 மது. 207; 28 கல 517; 27 மதா. 326

**629.** குடும்ப சொத்தில் தங்கள் பாகத்தையுஞ் சேர்த்து
தகப்பனால் செய்யப்பட்ட பந்தகபராதீனங்கள் தங்களைக் கட்டுப்
படுத்தமாட்டாதென்று ஆக்ஷேபிக்கிற பிள்ளைகள் அவ்விநியோ
கங்கள் தகப்பனுடைய அந்யாயமாயும் அக்கிரமமாயுமுள்ள
செலவுகள் அல்லது கடன்களின்பொருட்டு செய்யப்பட்டனவெ
ன்று ருசுப்படுத்தவேண்டும். அதைத் திருப்தியாய் ருசுப்படுத்
தும் பளுவும் பிள்ளைகள் பேரிலேயே இருக்கிறது. அவ்வாறு
அவர்கள் ருசுப்படுத்தாத வரையில் கடன்களின் பொருட்டுத் தகப்
பனால் செய்யப்பட்ட குடும்பப் பொதுவான எல்லா சொத்தின்
விநியோகங்களுக்கும் அவர்கள் கட்டுப்பட்டவர்களாகவே யிருக்கி
றார்கள். தகப்பனால் செய்யப்பட்ட குடும்ப சொத்தின் விநியோ
கங்கள் குடும்பார்த்தமாயுள்ள செலவுகளுக்காகவும் கடன்களுக்
காகவும் ஏற்படவில்லையென்றாவது அவ்விநியோகங்களுக்கு தாங்
கள் சம்மதம் கொடுக்கவில்லையென்றாவது பிள்ளைகள் செய்யும்
ஆக்ஷேபணைகள் எவ்வளவும் செல்லமாட்டாது. 1 இ. அ. 321
21 மது 222; 22 மது. 207; 28 கல. 517; 24 அல. 459; 27
பம். 326.

**630.** தகப்பனுடைய சொந்தக்கடனுக்காக அவனால் செய்
யப்படும் குடும்ப சொத்தின் பந்தகபராதீனங்கள் அவ்விநியோக
காலத்திற்குமுன் ஏற்பட்ட பழைய கடன்களின் பொருட்டு
செய்யப்பட்டிருக்கவேண்டுமென்று முன் தீர்மானிக்கப்பட்டிருந்

தரும் பிள்ளைகள் கட்டுப்பட்டவர்களாகவே யிருக்கிறார்கள். 11 மது. 373; 23 பம். 454.

**633.** தகப்பனுடைய துன்மார்க்கமாயும் அக்கிரமமாயுமுள்ள செலவுகளுக்காகவும் அதன் நிமித்தம் ஏற்பட்ட கடன்களுக்காகவும் குடும்பப் பொதுவான சொத்து விநியோகம் செய்யப்பட்டிருந்தால் அதுமட்டும் பிள்ளைகளைக் கட்டுப்படுத்தமாட்டாது. தகப்பனுடைய பங்கு வீதத்துக்குள்ள சொத்துமட்டும் அவ்விநியோகத்துக்கு உட்பட்டதாகும். 13 மது. 51. 20 கல். 238.

**634.** தகப்பனால் செய்யப்படும் குடும்ப சொத்தின் விநியோகமானது குடும்பார்த்தமான செலவுகளுக்கும் கடன்களுக்குமாகவாவது, அல்லது துன்மார்க்க சம்பந்தமில்லாத சொந்தக் கடன்களுக்காகவாவது ஏற்படாவிட்டால், தகப்பனானவன் தன் பங்கு வீதத்திற்கு மேற்பட்ட சொத்தை விநியோகம் செய்வதற்கு பிள்ளைகளுடைய அனுமதியைப் பெறவேண்டும். மேற்சொன்ன காரணங்களன்னியிலும் பிள்ளைகளுடைய அனுமதி பெறாமலும் தகப்பனானவன் தன் பங்கு வீதத்திற்கு மேற்பட்ட சொத்தை விநியோகம் செய்தால் அது பிள்ளைகளைக் கட்டுப்படுத்தமாட்டாது. 5 மது. 337; 8 மது. 75; 13 மது. 51; 16 மது. 76; 21 மது. 28.

**635.** தகப்பனால் செய்யப்படுகிற பாத்தியதைகளுக்குப் பிள்ளைகள் எவ்வாறு கட்டுப்பட்டிருக்கிறார்களோ அவ்வாறே பாட்டனுடைய விநியோகங்களுக்குப் பேரர்கள் கட்டுப்பட்டவர்களாக இருக்கிறார்கள். 19 அல். 26.

**636.** தகப்பனிடமிருக்கிற பூர்வீகமான சொத்தில் பிள்ளைகளுடைய பாத்தியம் அவர்கள் பிறக்கும்போதுதான் ஏற்படுகிறபடியால், அவர்கள் பிறப்பதற்கு முந்தியே தகப்பனால் செய்யப்பட்டுப்போன விநியோகங்களை ஆக்ஷேபிக்க பிள்ளைகளுக்கு அதிகாரமில்லை. 1 இ. அ. 321.

## II சப்பிரதிபந்த தாயத்தாலும் சுயார்ஜிதமாயும் பாத்தியப்பட்ட சொத்துக்களின் விநியோகங்கள்.

**637.** சந்ததியின்றி இறந்துபோன தாயாதிகளிடமிருந்தும் பந்துக்களிடமிருந்தும் சப்பிரதிபந்த தாயத்தால் ஒருவன் சொத்தை யடைந்திருந்தால், அதில் அவனுடைய பிள்ளை முதலானவர்களுக்குக் குடும்பத்தில் பிறந்த மாத்திரத்திலேயே யாதொருவித பாத்தியமும் ஏற்படுகிறதில்லையென்றும், சொத்துக்களை சப்பிரதிபந்த தாயப்படி எவரிடமிருந்தடைந்திருந்தாலும் அவை யாவும் அடைந்தவனுடைய சுயார்ஜிதமே யாகுமென்றும் அவைகளை அவன் தன்னிஷ்டப்படி விநியோகம் செய்யலாமென்றும், ஆதியில் தீர்மானிக்கப்பட்டிருந்தது. ஆகிலும் சப்பிரதிபந்த தாயத்தாலடைகிற சொத்துக்கள் அநேகமாய் சுயார்ஜிதம் போல பாவிக்கப்பட்டாலும், தாயின் தகப்பனை மாதாமகரானவர் தாய்வழியைச் சேர்ந்த முன்னோராக இருப்பதால் அவரிடமிருந்து தௌகித்திர பாத்தியப்படி அடையும் சொத்து அத்தௌகித்திரனுடைய ஏகதேசமான சுயார்ஜிதம் போலாகமாட்டாதென்றும், அதையவன் தன் பிள்ளைகளுக்கு விரோதமாய் தன்னிஷ்டப்படி விநியோகம் செய்துவிடக்கூடாதென்றும் பிற்காலத்தில் தீர்மானிக்கப்பட்டது. 3 மதா. 370; 9 மதா. 188.

**638.** தௌகித்திர பாத்தியப்படி அடையும் சொத்தைப் பற்றிய சட்டம் இப்பால் இன்னமும் அதிகமான மாறுதலை யடைந்திருக்கிறது. அதாவது, தௌகித்திர பாத்தியப்படி கிடைத்த சொத்தானது தாய்வழியைச் சேர்ந்த முன்னோரிடமிருந்து பெற்றதாக இருக்கிறபடியால் அதுவும் பூர்வார்ஜித சொத்தேயன்றி சுயார்ஜிதமல்லவென்றும், பூர்வார்ஜிதமாக இருப்பதால் அச்சொத்தை யடைந்திருக்கிற தௌகித்திரனுடைய பிள்ளைகளுக்கும் பிறந்த மாத்திரத்திலேயே அதில் பாத்தியம் ஏற்படுகிறதென்றும், அப்பிள்ளைகள் அதில் தங்களுக்கும் பாகம் பிரித்துக்கொடுக்கும்படி அத்தகப்பனைத் தொடரலாமென்றும் இப்பால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் தகப்பன், பாட்டன் முதலான முன்னோர்களிடமிருந்து அடைகிற சொத்

தில் ஒருவனுக்கு எவ்வளவு விநியோக சுதந்திரமிருக்கிறதோ அவ்வளவு சுதந்திரந்தான மாதா மகரிடத்திலிருந்து தௌகித்திர பாத்தியப்படி யடைகிற சொத்திலும இருக்கிறது. 25 மதா. 687 (பிரிவி கௌன்ஸில் தீரப்பு); 27 மதா. 300; 27 மதா. 382.

**639.** ஸதிரீகளிடமிருநதும முன்னோன் முறையில் இலலாதவாகளிடமிருநதும சபபிரதிபநத தாயத்தால அடையும சொததுக்கள் யாவும சுயாா்ஜித சொத்துக்களாகவே பாவிககப படும். ஆகையால அவறறை யடைந்திருபபனுக்கு அவைகளில பூாண சுதநதிரமுண்டு. அவைகளை அவன தனனிஷடபபடி விநியோகம செய்துகொள்ளலாம. 27 மதா. 300.

**940.** சுயார்ஜித சொத்துக்களைப் பற்றி —பிளளை ஏற்கலிய சநததியாரையுடைய ஒருவன தன்னுடைய சுயாாஜிதமான சொத்துக்களில ஜங்கமங்களைமட்டும் பூராவாக தனனிஷடபபடி விநியோகம செயதுகொளளலாமே யனறி ஸதாவர சொததுவிஷயத்தில் அவனுககுப பூாண அதிகாரமில்லை யெனறும, பிளளைகளுககு ஒன்றும வைககாமல எலலா ஸதாவர சொததையும அவன தனனிஷடபபடி விநியோகம செய்துவிடககூடாதெனறும மதராஸ் ஹைகோாடடாரால முன தீாமானிககபபட்டிருநதது. (3 மதா. ஹை. கோ. ரி. 50.) ஆனால அததீாபபு இப்போது மாறிபபோய்விட்டது. மறற ஹைகோாட்டுகளால தீாமானிககபபட்டிருபபதுபோலவே நமது மதராஸ ஹைகோாடடாரும அடியிற கண்டபடி இப்பால தீாமானிததிருககிறாகள. அதாவது: ஒரு சொததானது ஒருவனுடைய சுயாாஜிதமானதாக இருநதால அது ஜங்கமமாயிருநதாலும அல்லது ஸதாவரமாகவே இருநதாலும் அதில அவனுக்கு பூாண சுதநதிரமிருககிறது. அதை அவன தன பிளளைகளுககு விரோதமாயும தனனிஷடம போலும பநதகபபறறீனம செய்யவும தானம அல்லது உயில மூலமாய் அனனியருக்குக் கொடுததுவிடவும முழு சுதநதிரமுடையவனாக இருககிறான. 10 மதா. 251; 20 அல. 267; 24 மதா. 429.

**641.** ஆகையால ஒருவன் விபக்த நிலைமையிலிருநதாலும் அல்லது அவிபக்த குடும்பததைச சோநதவனாகவேயிருநதாலும

அவன் தன்னுடைய சுயார்ஜிதமாயிருக்கிற ஸ்தாவர ஜங்கம சொத்துக்களெல்லாவற்றையும் தன்னிஷ்டம்போல விநியோகம் செய்ய பூர்ண அதிகாரமுடையவனாக இருக்கிறான்.

**642.** பிதுரார்ஜித வகையிலாவது சுயார்ஜித வகையிலாவது பாத்தியப்பட்டிருக்கிற சொத்தில் பூர்ண சுதந்திரவாளியாக இருப்பவன் அச்சொத்து முழுவதையும் தன்னிஷ்டம்போல விநியோகம் செய்துவிடலாமென்று மேலே சொல்லப்பட்டபோதிலும், அவனால் எவர்கள் கட்டாயமாய் சம்ரக்ஷிக்கப்பட வேண்டுமோ அவர்களுடைய ஜீவனாம்சத்துக்காக யாதொன்றும் வைக்காமல் சொத்து முழுவதையும் அவன் தன்னிஷ்டம்போல விநியோகம் செய்துவிடக்கூடாது. ஒரு சமயம் எல்லாவற்றையும் தன்னிஷ்டப்படி கிரயம், தானம், உயில் முதலியனவற்றால் அன்னியர்களுக்கு விநியோகப்படுத்திவிட்டாலும் ஜீவனாம்சக்காரர்களுடைய பாத்தியம் சம்பந்தப்பட்ட மட்டில் அவ்விநியோகங்கள் செல்லுபடியுள்ளதாகமாட்டாது. 12 மத். 267; 2 அல. 315; 23 அல 86; 10 கல. 638; 5 பம. 99; 18 பம. 452; 22 கல. 410; 23 பம. 342.

**643.** மைனர்களுக்கு அவர்களுடைய சொத்துக்களிலுள்ள விநியோக சுதந்திரங்களைப்பற்றி 12-வது அத்தியாயத்திலும் பாகிக்கத்தகாத சொத்துக்களையுடைய ஜமீன்தார் முதலியவர்களுக்கு அவர்களுடைய சொத்துக்களிலுள்ள விநியோக சுதந்திரங்களைப்பற்றி 13-வது அத்தியாயத்திலும் சொல்லப்பட்டிருப்பதைப்பார்க்க.

**644** சொத்துக்களை உடையவர்களும் பத்திரக் கிரயம் பெறுகிறவர்களும் அச்சொத்துக்களுக்கு தாங்கள் உடையாளிகளென்பதை உலகத்துக்குக் காட்டிக்கொள்ள சில சமயங்களில் பிரியப்படாமல், நம்பிக்கையும் விசுவாசமுமுள்ள தங்கள் உறவினர் சிநேகிதர் முதலியோர் பேரில் அவற்றை பேத்துக்கு எழுதிவைக்கிறார்கள். இவ்வழக்கம் நம் நாட்டில் வெகு காலமாக நடந்துவருகிறது. யாதொரு பிரதிப் பிரயோஜனமுமில்லாமல் இவ்வாறு நம்பிக்கையின்பேரில் சொத்தைப் பிறர் பேரு

க்கு ஷிபமாக எழுதி வைப்பதற்கு பினாமி என்றும் யார் பேருக்கு அவ்வாறு சாஸனம் எழுதிவைக்கப்படுகிறதோ அவன் பினாமிதார் என்றும் இங்கிலீஷில் சொல்லப்படும்.

இப்படிப்பட்ட நடவடிக்கை கூடாதென்று ஒரு [illegible]ட்ட சட்ட விதியால் தடுக்கப்பட்டிருக்கிற சந்தர்ப்பமும் கடன்காரர் முதலிய பிறரை மோசம் பண்ணவேணுமென்ற கெட்ட எண்ணங்கொண்டு செய்யப்படுகிற சந்தர்ப்பமும் நீங்கலாக மற்ற சமயங்களில் இவ்விதமான பினாமி நடவடிக்கை சரியென்றும் அது சட்டப்படி செல்லத்தக்கதுதான் என்றும் மேலான நியாய ஸ்தலத்தாரால் ப்ரமாணிக்கப்பட்டிருக்கிறது. 5 பம. 154; 14 மூ. இ. அ. 12; 2 இ. அ 154.

**645.** ஒரு சொத்தின் நிஜமான சொந்தக்காரனுக்கும் போலிச் சொந்தக்காரனாகிய பினாமிதாரனுக்கும் அச்சொத்தைக் குறித்து வழக்கு உண்டானால், தஸ்தாவேஜு எவன் பேருக்கு ஏற்பட்டிருக்கிறதென்பதே முடிவாக எண்ணப்படமாட்டாது. அச்சொத்து யாரால் அதாவது யாருடைய பணத்தைக்கொண்டு வாங்கப்பட்டதோ அவனே அச்சொத்தின் சொந்தக்காரனென்று ப்ரமாணிக்கப்படுவான். 6 மூ. இ. அ. 53, 6 இ. அ. 23; 9 பம. 115; 10 கல. 686.

ஆனால் தஸ்தாவேஜில் கண்டிருப்பதற்கு மாறாக ஒருவன் தன்னை நிஜமான சொந்தக்காரனென்று சொல்லிக்கொள்ளுகிறானோ அதாவது எவனொருவன் யாதொரு நடவடிக்கையை பினாமியென்றும் தானே நிஜமான சொந்தக்காரனென்றும் சொல்லுகிறானோ அவனே அச்சங்கதியை திருப்தியான சாக்ஷியத்தால் முதலில் ருசுப்படுத்தவேண்டியவனாக இருக்கிறான். 11 மூ. இ. அ. 28; 11 மூ. இ. அ. 234.

---

# 16-வது அத்தியாயம்.

---

## தான தர்மங்கள்.

**646.** ஹிந்து தர்ம சாஸ்திரங்களின்படி சொத்தானது உடையாளியினுடைய குடும்ப சம்ரக்ஷணைக்கன்றி பரோபகாரம

முதலான பலவித நற்காரியங்களின் பொருட்டு செலவிடுவதற்கும், பரலோக ஸாதகமான தானதர்மங்களைச் செய்வதற்கும் ஏற்பட்டிருக்கிறது. சொத்தை இஷ்டத்தின்பேரில் தனக்கு வேண்டியவர்களுக்குக் கொடுப்பது தானமென்றும், மதவிஷயமாயும் பொதுஜனங்களுடைய நன்மையின் பொருட்டும் சொத்தைச் செலவிடுவது தர்மமென்றும் சாதாரணமாய்ச் சொல்லப்படும்.

## தானம்.

**647.** பூரண சுதந்திரத்தோடு தனக்கு பாத்தியப்பட்டிருக்கும் சொத்தை ஒருவன் மனப்பூர்த்தியான சம்மதத்தோடும் இஷ்டத்தோடும் யாதொரு பிரதி பிரயோஜனமுமில்லாமல் பிறனொருவனுக்குக் கொடுத்துவிடுவது தானமாகும்.

**648.** ஒருவன் அவிபக்த நிலைமையிலிருந்தாலும் விபக்த நிலைமையிலிருந்தாலும் தன்னுடைய சுயார்ஜிதமான சொத்துக்களில் அவன் பூரண சுதந்திரமுடையவனாக இருக்கிறபடியால், அவற்றை அவன் தன்னிஷ்டமானவர்களுக்கு தானமாகக் கொடுத்துவிட அதிகாரமுடையவனாக இருக்கிறான்.

**649.** அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பாகஸ்தன் நியமப் பொதுசொத்தில் தனக்குள்ள பங்கை தானமாகக் கொடுக்கக்கூடாது. (652-வது பிரிவின் (2) வது உட்பிரிவைப் பார்க்க.) கொடுத்தாலும் அது செல்லமாட்டாது. 7 மது. 357; 9 மது. 273; 11 மது. 246; 16 மது. 84; 19 பம். 803; 27 மது. 162.

**650.** ஸ்தாவர சொத்தானது தானம் செய்யப்படவேண்டுமானால் அதற்கு எழுத்து மூலமான தஸ்தாவேஜு ஏற்படவேண்டும். மேலும் அத்தஸ்தாவேஜு குறைந்தது இரண்டு சாக்ஷிகளால் கையெழுத்து செய்யப்படவும் ரிஜிஸ்தர் செய்யப்படவும் வேண்டும். ஜங்கம சொத்தானது மேற்சொன்னபடியான ரிஜிஸ்டர் தஸ்தாவேஜு மூலமாயாவது தானம் வாங்குகிறவனிடம் ஒப்புவிக்கப்படுவதினாலாவது தானம் செய்யப்படலாம். (1832-ம் வருஷத்திய 4-வது ஆக்ட் 123-வது பிரிவைப் பார்க்க.)

**651.** தானம் பூர்த்தியாவதற்கு சொத்தானது தானம் வாங்குகிறவனிடம் சுவாதீனம் பண்ணப்பட வேண்டுமென்று ஹிந்து தர்மசாஸ்திரங்கள் சொல்லியிருக்கிறது. ஆனாலும் அவ்வாறு சுவாதீனம் செய்யப்பட வேண்டுமென்பது இப்போது அவசியமில்லை என்று 1882-ம் வருஷத்திய 4-வது ஆக்டின்படி ஏற்படுகிறது 14 கல. 416; 23 பம். 234; 16 அல். 185; 11 இ. அ. 218; 24 கல. 441; 27 கல. 243.

**652.** தானம் செல்லுபடியுள்ளதாவதற்கு அடியிற்கண்ட விதிகள் அவசியமாய் அனுசரிக்கப்பட்டிருக்கவேண்டும்:—

(1) தானம் செய்யப்படும் சொத்தானது இன்னதென்று குறிப்பானதாக இருக்கவேண்டும். அதாவது தானகாலத்தில் இல்லாமல் பிறபாடு உண்டாகக்கூடும் சொத்துக்கள் தானத்துக் குத்தகுதியுள்ளதாகமாட்டாது.

(2) தானம் செய்கிறவனுக்கு தான சொத்தானது பூர்ண சுதந்திரத்தோடு பாத்தியப்பட்ட தனியான சொத்தாக இருக்க வேண்டும். ஆகையால் அவிபாகத குடும்ப பாகஸ்தனொருவன் தன் பங்குக்குள்ள சொத்தை தானம் மூலமாய் விநியோகம் செய்யக்கூடாது. 16 மத. 81; 8 மத. 357.

(3) தானம் செய்கிறவன் யுக்தாயுக்தமறிந்த பக்குவத்தையுடையவனாகவும் மனப்பூர்த்தியான சம்மதமுள்ளவனாகவுமிருக்க வேண்டும். அதாவது யுக்த வயதை யடையாத மைனர்களும் சித்த சுவாதீனமில்லாத பைத்தியகாரர் முதலியோரும் தானம் கொடுக்கக்கூடாது.

(4) தானம் யாருக்குக் கொடுக்கப்படுகிறதோ அவன் தான காலத்தில் ஜீவித்திருப்பவனாக இருக்கவேண்டும். 2 கல. 265; 4 கல. 455; 15 பம். 443; 30 கல. 521.

[illegible] தான காலத்தில் தாயின் கர்ப்பத்திலிருப்பவனும், கிரமப் படிபெற்ற அனுமதியின்பேரில் தான காலத்திற்குப் பிறகு ஒரு விதவையால் ஸ்வீகார மெடுத்துக்கொள்ளப்படுகிறவனும் தான காலத்தில் ஜீவித்திருப்பவர்கள் போலவே பாவிக்கப்படுவார்கள்.

ளையும் தானம் வாங்குகிறவன் தானம் பெறுகிறவன் பேரில் சுமத்தக்கூடாது. உதாரணம்.—தானம் பெற்றவன் தானசொத்தைப் பந்தகப்படுத்தினவைகளுக்குட்படுத்தாமல் அனுபவித்து வரவேணுமென்றும், தானம் பெற்றவன் இறந்தபிறகு தானசொத்தானது சட்டப்படியுள்ள அவனுடைய கிரமமான வாரசுகளுக்குப் போகாமல் வேறு பேர்களைச் சேரவேண்டுமென்றும் உள்ள இவ்வாறான நிபந்தனைகள் செல்லமாட்டாது. 4 மது. ஹை. கோ. ரி. 345; 4 மது. 200; 6 மது. ஹை. கோ. ரி. 356; 7 மது. 31; 4 அல. 518; 14 கல 222; (1882-ம் வருஷத்திய 4-வது ஆக்ட் 10, 12-வது பிரிவுகளையும் பார்க்க.)

**656.** சட்ட விரோதமாகவும் துன்மார்க்கமாகவுமுள்ள காரியங்களை உத்தேசித்து செய்யப்படுகிற தானமும், கடன்காரர்களை மோசஞ்செய்யவேணுமென்ற கெட்ட எண்ணத்தின் பேரில் செய்யப்படுகிற தானமும் செல்லமாட்டாது. 4 மது. ஹை. கோ. ரி. 81.

**657.** ஜீவனும்சக்காரர்களுடைய பாத்தியங்களுக்கு விரோதமாக ஒரு சொத்தானது தானம் கொடுக்கப்பட்டாலும் ஜீவனும்ச பாத்தியத்தின்னளவுக்கு அத்தானம் செல்லமாட்டாது. அதாவது தானம் பெற்றவன் அச்சொத்திலிருந்து ஜீவனும்சம் பெறவேண்டிய பேருடைய ஜீவனும்சத்தைக் கொடுத்துவரக்கடமைப்பட்டவனாகிறான். 12 மது. 267; 23 அல. 86; 23 பம. 342

**658.** யாதொரு மோசடியுமில்லாமல் நல்ல எண்ணத்தின் பேரில் கிரமமாய் செய்யப்பட்ட தானம் ரத்தாகமாட்டாது, தானம் கொடுத்தவனையன்றி அவனுடைய பிரதிநிதிகளையும் கடன்காரர்களையுங்கூட அது கட்டுப்படுத்தும் 4 மது. ஹை. கோ. ரி. 84; 2 அல். 891; 11 இ. அ. 164; 22 இ. அ. 153; 23 பம. 131.

**659.** சொத்துக்களில் ஸ்திரீகளுக்கு சாதாரணமாய் முழு சுதந்திரம் கிடையாதென்றிருந்தாலும், தானமாகப் பெறும் சொத்துக்களிலும் அவர்களுக்கு முழு சுதந்திரம் இல்லையென்று சொல்ல சாஸ்திரங்களில் ஆதாரமில்லை. ஆதலால் ஒரு சொத

தானது ஒரு ஸ்திரீக்கு முழு சுதந்திரத்தோடும் தானமாகக் கொடுக்கப்படலாம். 23 இ. அ. 37; 23 கல. 670.

**660.** முழு சுதந்திரத்தோடல்லாமல் ஸ்திரீயானவள் தன் ஆயிசுகாலம் வரையில் மட்டுமே தான சொத்தை அனுபவித்துக் கொள்ளக்கூடுமென்றும் பிறகு அச்சொத்து வேறொருவனைச் சேரத்தக்கதென்றும் கண்டு ஸ்திரீக்கு ஒரு சொத்து தானம் செய்யப்படலாம். அப்போது அதில் அவளுக்கு பூரண சுதந்திரம் ஏற்படமாட்டாது. ஆயிசுகாலம் வரையில் அதை அனுபவிக்க மட்டுமே அவளுக்கு சுதந்திரமுண்டு.

**661.** மேலும் ஒரு சொத்தானது சர்வ சுதந்திரத்தோடு ஸ்திரீக்கு தானம் செய்யப்பட்டதென்று வியக்தமாய்க்காணப்படாமலிருந்தால், அதில் அவளுக்கு ஆயிசுகாலம் வரையில் அனுபவிக்கும் பாத்தியம் மட்டுமே இருக்கிறதாக எண்ணப்படும். 2 இ. அ. 7; 17 பம். 503; 21 பம். 376; 22 மது. 357.

**662.** புருஷனால் பெண்சாதிக்குக் கொடுக்கப்பட்ட தானமானது சர்வ சுதந்திரத்தோடு கொடுக்கப்பட்டதாக விருந்தாலொழிய அத்தான சொத்தைத் தனவிஷ்டப்படி விநியோகம் செய்ய அவளுக்கு அதிகாரம் இல்லை, 5 கல. 684; 7 மது. 387; 17 பம். 503.

**663.** ஒரு சொத்தானது ஒரு வகுப்பு அல்லது கூட்டத்தாருக்கு தானம் செய்யப்பட அதில் சிலர் மட்டும் தானம்பெறக் கூடியவர்களாகவும் மற்றுஞ்சிலர் தானகாலத்தில் பிறக்காமலிருந்ததினாலே தானம் பெறக்கூடாதவர்களாகவுமாக இருந்தால், அந்த தானம் எவ்வளவும் செல்லத்தக்கதல்லவென்று முன் தீர்மானிக்கப்பட்டிருந்தது. ஆனால் அத்தீர்ப்பு இப்போது மாறிப் போய்விட்டது. எவர்கள் தானம் பெறக்கூடியவர்களாக இருக்கிறார்களோ அவர்கள் எல்லோருமே அத்தானத்தின் பயனையடையத்தக்கவர்களாவார்கள் என்று இப்பால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 6 அல். 560; 11 இ. அ. 164; 13 மது. 393; 12 கல. 685; 24 கல. 646; 15 பம். 652; 21 பம். 71; 22 பம். 533; 26 பம். 449.

## தர்மத்தைப்பற்றிய விஷயங்கள்.

**664.** பொதுஜனங்களுடைய நன்மையின் பொருட்டும் ஏழைகளுடைய உபகாரத்தின் பொருட்டும் தேவாலயங்கள் முதலிய மதசம்பந்தமான நற்காரியங்களின் பொருட்டும் செய்யப்படும் விநியோகத்துக்கு தர்மம் என்று பெயர். இவ்வகைக் காரியங்களின் பொருட்டு சொத்தானது தான மூலமாயாவது உயில் மூலமாயாவது கொடுக்கப்படலாம். சொத்தையுடைய ஒவ்வொருவரும் அவரவருடைய சக்திக்குத்தக்கபடி தர்மங்களைச் செய்ய வேண்டுமென்று ஹிந்து தர்ம சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**665.** அவிபக்த குடும்பத்திலுள்ள ஒருவன் குடும்பப் பொதுவான சொத்தில் தனக்குள்ள பங்கை தானமாக விநியோகம் செய்யக்கூடாதென்று 623, 649-வது பிரிவுகளில் சொல்லப்பட்டது. ஆனாலும் தருமத்தின் பொருட்டு நல்ல எண்ணத்தின் பேரில் குடும்பப் பொதுவான சொத்தில் தனக்குள்ள பங்கிலிருந்து கொஞ்ச பாகத்தை ஒருவன் விநியோகம் செய்யலாம். குல தேவதையின் பூஜைக்காக குடும்பப் பொதுவான சொத்திலிருந்து கொஞ்ச பாகத்தை விநியோகம் செய்ய தகப்பனுக்கு சுதந்திரமுண்டென்றும், நல்ல எண்ணத்தோடு செய்யப்படுகிற அப்படிப்பட்ட தர்மத்தை பிள்ளைகள் ஆக்ஷேபிக்கக்கூடாதென்றும் அலஹாபாத் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். 8 அல. 76.

**666.** மேலும் குலதேவதையின் பூஜையின் பொருட்டு செய்யப்படுகிற தருமத்துக்கும் பொதுஜனங்களுடைய நன்மையின் பொருட்டு செய்யப்படுகிற தருமத்துக்கும் வித்தியாசமில்லையென்று பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். 9 பம. 169.

**667.** தர்மங்கள் அடியிற் கண்டபடி மூவகைப்படும் :—

(1) ஒரு குறிப்பிட்ட சொத்தில் தனக்குள்ள சகல சுதந்திரங்களையும் கைவிட்டுவிட்டு அதைத் தருமத்துக்கென்றே சாசுவதமாய் முற்றிலும் கொடுத்துவிடுவது.

(2) ஒரு குறிப்பிட்ட சொத்தை மேற்சொல்லியவாறு சாசுவதமாய்க் கொடுத்துவிடாமல் அதன் வரும்படியின் ஒரு பாகத்தை மட்டும் கொண்டு தர்மத்தை சாசுவதமாய் நடத்தி வருவதென்று ஏற்படுத்திவைப்பது.

(3) ஒரு குறிப்பிட்ட சொத்தையாவது அதன் வரும்படியின் ஒரு பாகத்தையாவது தர்மத்துக்காக சாசுவதமாய்க் கொடுத்துவிடாமல், தர்மத்தைத் தன் சொந்தத்திலேயே நடத்திவருவது.

**668.** மேற்சொன்ன மூவகை தர்மங்களில் முதலாவது இரண்டாவது வகுப்புகளைச் சேர்ந்த தர்மங்களே சாசுவதமானதாக இருக்கின்றன. மூன்றாவது வகுப்பைச் சேர்ந்த தருமத்தை நடத்திவருவதானது அதைச் செய்பவனுடைய இஷ்டத்தைப் பொறுத்ததாக இருக்கிறது. அதைக் கொஞ்ச காலம் வரையில் அவன் நடத்திவந்து பிறகு நிறுத்திவிட்டாலும் நெடுகிலும் தொடர்ச்சியாய் அதை நடத்திக்கொண்டு வரவேண்டுமென்று தானம் செய்தவனையாவது அவனுடைய வாரசுகளையாவது பிறர் கட்டாயப்படுத்த இடமில்லை. 18 கல். 10-17 இ. அ. 110.

**669.** முதலாவது இரண்டாவது வகுப்பு தர்மங்கள் ஏற்படுத்தப்பட்ட பின்பு ரத்தாகமாட்டாது. அவ்வித தருமத்தை ஏற்படுத்தினவனுக்காவது அவனுடைய வாரசுகளுக்காவது அதை நிறுத்திவிட அதிகாரமில்லை.

**670.** ஆதியில் ஏற்படுத்தப்பட்ட ஒரு தர்மம் நெடுகிலும் நடந்துவர முடியாமல் தர்ம காரியமானது தவறியாவது அழிந்தாவது போய்விட்டாலும் அந்த தர்மத்துக்காக விடப்பட்ட சொத்து உடையாளியையாவது அவனுடைய வாரசுகளையாவது திரும்பவும் சேரமாட்டாது. அத்தர்மம் போலொத்த வேறு தர்மத்தின் பொருட்டு அச்சொத்து உபயோகப்படுத்தப்படவேண்டும். 4 மூ இ. அ. 190; 3 இ. அ. 32.

**671.*** இரண்டாவது வகுப்பு தர்மமானது ஒரு சொத்தின் வரும்படியின் ஒரு பாகத்தைக் கொண்டு நடத்தப்படுவதால் உடையாளியும் அவனுடைய வார்சுகளும் அச்சொத்தை இதர

குடும்ப சொத்துக்களோபபந்தம பநதகபருநினை செய்ய அதி காரமுள்ளவாகளாக இருக்கிறார்கள். ஆனால் அசசொதது அவ வாறு விநியோகப்படுததப்பட்டுப் போனால தாமததைத நடத்தி வரும கடமையானது விநியோகம பெறறவனைச சோநததாய விடுகிறது. 15 பஙகாள லா ரிபோாட்டு 178.

672. மேலும இவ்வகுபபு தாய சொததை உடையாளியி னுடைய வாாசுகள இதர குடுமப சொததுககளொபபநதம பாகி ததுக்கொளளவும உரிமையுள்ளவாகளாக இருககிறார்கள். அப போது அவாகள தஙகள் பங்கு வீததததுககுத தககபடி தாம ததைத நடததிவரவேணடும. 4 கல. 56.

673. முதலாவது வகுப்பு தாமததுககாக விடப்பட்ட சொததில் உடையாளி உடைததாயிருநத எலலா பாததியஙகளு ம அவனைவிட்டு முறறிலும விலகிப்போய விடுகிறபடியால அவ னாவது அவனுடைய வாாசுகளாவது பிறகு அசசொததை எவ வளவும சொநததததுக்கு உபயோகபபடுததிககொள்ளககூடாது. அசசொததானது தாமததை நடததுவதறகாக நியமிககபபட்ட வாகளைச சோநததாய விடுகிறது. தாமததுககாக விடபபட்ட சொத்தைககொணடு தாமததை நடததிவருமபடி நியமிககப்பட டவாகள் இஙகிலீஷில் டிரஸ்டிகளென்று சொலலப்படுவாாகள.

674. தாமததை ஏறபடுத்துகிறவன் தன்னையும் தன வாா சுகளையுமே டிரஸடியாகவாவது அலலது டிரஸடிகளிலொருவ ராகவாவது ஏறபடுததி வைததுக்கொளளலாம.

675. டிரஸ்டிகளுக்கு தர்ம சொத்தில் தர்ம விசாரணை பாததியததைத தவிர வேறு எவ்வித சுதநதிரமும் இல்லை. அவா கள் தங்களுடைய சொந்த விஷயத்துககாகவாவது குறிபபிட்ட தாமததைத்தவிர வேறு தாமததுககாகவாவது தாம சொத்தை எவ்வளவும் உபயோகப்படுத்தக்கூடாது. (1882-ம் வருஷத்திய 2-வது ஆகட்டின் 51-வது பிரிவையும் பார்க்க.)

676. ஒரு சொத்தானது எந்த தர்மத்துக்காக விடப்பட் டதோ அந்த தர்மத்தை டிரஸ்டிகள் அச்சொத்தைக்கொண்டு

சரியாய் நடத்திவரவேண்டும. தாயபரிபாலனத்தின்பொருட்டு தாம சொத்தைச் செலவிடுவதிலும பந்தகபறறீனங்கள் செயவதிலும டிரஸடிக்குள்ள அதிகாரமானது ஒரு மைனருடைய காரடியனுக்குள்ள அதிகாரத்தைப் போன்றதாயிருக்கிறது. 2 கல. 341; 2 இ. அ. 43; 21 அல. 145; 25 அல. 296; 24 கல. 77.

**677.** அனறியும தாமசொத்தின வருமபடிகளை மட்டும டிரஸடிகள் செலவு செயயலாமே தவிர மூல சொத்தையே விநியோகபபடுத்த அவாகளுக்கு எவவளவும அதிகாரமிலலையென்று பமபாய ஹைகோட்டார் தீமானித்திருக்கிறாகள். 5 பம. 393. 15 பம. 625

**978.** டிரஸடியானவன தாமவிசாரணையை தானே நேரில நடத்திவரவேண்டுமே யனறி அவவதிகாரத்தை வேறொருவனிடம ஒபபுவிக்கவாவது பிறனொருவனுக்கு விறகவாவதுகூடாது. 5 மத. 89; 4 அல 81; 23 பம. 131. (1882-ஞூத்திய 2-வது ஆகடின 47-வது பிரிவையும பாாகக )

**679.** ஒரு தேவாலயத்தின் ஊழியனும தன் ஊழிய பாத்தியத்தை அனனியனுக்கு பறறீனம செயயககூடாது. (6 மத. 76.) ஆகிலும தன குடுமபத்திலுள்ள தாயாதிகளிலொருவனுக்கு அசசுவதந்திரத்தை விநியோகபபடுத்தலாம. 15 மத. 183.

**680.** ஒரு தேவாலயத்தின் பூஜையாவது அல்லது வேறெநதபொது தாமமாவது தாமகாத்தாககள் அலலது ஊழியாகளால சரியாய் நடத்தப் படாமலிருநதால அந்த தருமத்தில அக்கறையுள்ள இரண்டு அலலது மேறபட்ட அபிமானிகள் அதைப்பற்றி அடவகேட் ஜெனரல அலலது ஜிலலா கலெக்டருடைய முனனுடி அனுமதி பெறறுககொண்டு அத்தாமம சரியாய நடத்தபபட்டு வரவேணடுமெனறு ஜிலலா கோாட்டில வழக்கிடலாம. 6 பம. 202; 21 பம. 556. (சிவில புரோஸிடியா கோடு 539-வது பிரிவையும பாாக்க.)

**681.** ஒரு டிரஸ்டி இறந்துபோனால் அடுத்துவரவேணடிய டிரஸடியின நியமனமானது தாமத்தைப்பறறிய சாசனத்தில சொலலபபட்டிருக்கும ஏற்பாட்டின்படி செய்யப்படவேண்டும.

தர்மசாசனத்தில் அப்படிப்பட்ட ஏற்பாடு யாதொன்றுமில்லாமலிருந்தால் அத்தர்மபரிபாலன விஷயமாய் நடந்துவரும் வழக்கத்தை யனுசரித்து புது டிரஸ்டி நியமிக்கப்படவேண்டும். (10 இ. அ. 32; 9 கல். 766.) யாதொரு வழக்கமுமில்லாமலிருந்தால் இறந்துபோன டிரஸ்டியினுடைய அதிகாரம் அவனுடைய வார்சைசசேரும். 7 மது. 499; 17 கல. 3-16 இ. அ. 137; 23 மது. 271; 27 இ. அ. 69; 25 கல. 112.

**682.** தாமபரிபாலனத்துக்காக நியமிக்கப்பட்ட ஒரு டிரஸடி அல்லது தர்மகாதகா இறநதாவது வேலையிலிருநது நீக்கப்பட்டாவது போனதினபேரில் புது டிரஸடி அலலது தாமகாததா ஏறபடாமல் அவ்வுததியோகமானது காலியாயிருநதால அத்தருமததில் அககறையுள்ள இரணடு அலலது மேறபட்ட அபிமானிகள் ஜிலலா கலெக்டா அல்லது அடவகேட் ஜெனரலுடைய முன்னுடி அனுமதி பெற்றுககொணடு தகுநத ஒரு டிரஸடி அலலது தாமகாத்தா நியமனமாகவேணடுமெனறு ஜிலலா கோர்ட்டில் வழககிடலாம. 14 மது. 57.

**683.** ஒரு டிரஸடி அல்லது தாமகாததா தாமவிசாரணையை சரியாய் நடததி வராவிட்டாலும் அல்லது அயோககியமாய நடநதுகொண்டாலும் அவன் தன உத்தியோகத்தினினறும நீககப்படுவான், 6 கல். 11; 20 கல 397; 24 கல. 418; 21 அல். 200; 22 மது. 481.

**684.** ஒரு மடத்துக்குச சம்பந்தப்பட்ட சொததுககள மடாதிபதியைச சேர்நததாயிருககிறது. அசசொததுககளில மடாதிபதிக்குள்ள அதிகாரமானது அவிபக்த குடும்ப மானேஜருடைய அதிகாரததை ஒததிருககிறது. மடத்தின பொருட்டாயுள்ள சகல வரவு செலவு விஷயங்களிலும் மடாதிபதியானவர் பூரண அதிகாரமுள்ளவராக இருக்கிறார். மேலும மடத்துக் குரிய சொத்தின் வருமபடிகள் முழுவதிலும அவருக்குப பூர்ண அதிகாரமிருககிறது. 2 மது. 175; 16 மது. 490; 20 இ. அ. 150; 18 மது. 359; 27 மது. 435.

**685.** ஒரு மடாதிபதியானவர் காலஞ்சென்றுபோனால் அவருக்குப்பின் வரவேண்டிய புதுமடாதிபதியின் நியமனத்தைப் பற்றி அந்தந்த மடங்களில் ஏற்பட்டுவரும் வழக்கங்களே அந்தந்த மடங்களின் விதியாகும். மடாதிபதிகள் தங்களுக்கடுத்தாற்போல வரவேண்டிய மடாதிபதியைத் தாங்கள் காலஞ்செல்லுவதற்கு முந்தியே நியமித்து வைத்துக்கொள்ளுவது அநேக மடங்களின் வழக்கமாக இருக்கிறது. 11 பம். 514; 16 மது. 490; 20 இ. அ. 150.

**686.** சொத்துக்களில் பூரண சுதந்திரமில்லாத விதவைகளுங்கூட புருஷனிடமிருந்து வாரசு பாத்தியப்படி யடைந்த சொத்தில் சொற்ப பாகத்தைத் தர்மங்களின் பொருட்டு செலவிடலாமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

பூரண சுதந்திரத்தோடு பாத்தியப்பட்டதாயிருக்கிற ஒரு சொத்தை ஸ்திரீயானவள் தனிஷ்டப்படி தர்ம விஷயத்துக்காகவும் விநியோகம் செய்துவிட அதிகாரமுள்ளவளாக இருக்கிறாள். 2 மது. 333.

**687.** இந்துலாப்படிக்கு தர்ம விசாரணை செய்யும் அதிகாரத்தை ஸ்திரீகள் சாதாரணமாய் பெறத்தக்கவர்களல்ல. ஆகிலும் அவ்வதிகாரத்தை ஸ்திரீகளும் அடையும் வழக்கமுண்டென்று எந்த கேஸிலாவது ரூபிக்கப்பட்டால் அப்போது அந்த கேஸில் ஸ்திரீகளுக்கும் அப்பாத்தியம் ஏற்படும். 9 மூ. இ. அ. 446; 9 கல. 796.

**688.** தேவாலயத்தின் பொருட்டு ஒரு சொத்தை தானம் செய்வதாயிருந்தால் அத்தேவாலயத்துக்குரிய சிலை அல்லது விக்கிரகம் தான காலத்திலாவது அதற்கு முந்தியாவது பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கவேண்டும். பிற்பாடு பிரதிஷ்டை செய்யப்படப்போகிற ஒரு தேவாலயத்தின் பொருட்டு செய்யப்படும் தானம் செல்லமாட்டாது. உயில் மூலமாக சொத்து கொடுக்கப்பட்டாலும் உயில் செய்தவனுடைய மரணகாலத்தில் அத்தேவாலயத்துக்குரிய விக்கிரகம் பிரதிஷ்டையாயிருக்கவேண்டும். 25 கல. 405; 30 கல. 521. (652-வது பிரிவின் 4-வது உட்பிரிவையும் பார்க்க.)

# 17-வது அத்தியாயம்.

## உயில்கள்.

**689.** முழு சுதந்திரத்தோடு பாத்தியப்பட்டிருக்கும் தனியான சொத்தையுடையவன் தனக்குப்பின் அச்சொத்துக்களை இன்னின்னார் இன்னின்ன விதமாக அடைந்தனுபவித்துக்கொள்ளத்தக்கதென்று ஏற்படுத்தி வைக்கும் விநியோகத்துக்கு உயில் என்று பெயர். உயில் என்ற இங்கிலீஷ் பதத்திற்கு இஷ்டமென்பது பொருள். இங்கு அது இஷ்டப்படி செய்யப்படும் விநியோகத்தைக் குறிக்கிறது. உயிலைப்பற்றி ஏற்படும் சாசனத்தை நம்மவர்கள் சாதாரணமாய் மரணசாசனம் என்றும் சொல்லுவார்கள்.

**690.** ஒருவன் தன்னுடைய தனியான சொத்தைத் தன் ஆயிசு காலத்திலேயே தனக்கு வேண்டியவர்களுக்குக் கொடுத்துக்கொள்ளவும் பலவிதமான தானதாயங்களைச் செய்துகொள்ளவும் தக்க அதிகாரத்தையும் அவகாசத்தையும் உடையவனாக இருப்பதோடு இறந்தபின் அவனிடம் சொத்தை யடைந்துகொள்ளுவதற்கு ஹிந்துலாப்படிக்கு அவனுக்கு அநேகமான வாரசுகளுமிருக்கிறார்கள். ஆனதுபற்றி சொத்துதாரனுடைய ஜீவகாலத்துக்குப்பின் ஏற்படவேண்டிய விநியோகமாகிய உயிலைப்பற்றி ஹிந்துதர்ம சாஸ்திரங்களில் விரிவாய் சொல்லப்படவில்லை.

**691.** ஆங்கிலேயர் முதலிய ஐரோப்பிய ஜாதியாருக்குள் சாதாரணமாய் வழங்கிவரும் உயிலானது ஆங்கிலேய அரசாட்சி ஏற்பட்ட பின்பு நம்ம இந்துதேசத்திலும் விசேஷமாய்ப் பரவ ஆரம்பிக்க அது இப்போது இவ்விந்தியாவின் பல இடங்களிலும் சர்வ சாதாரணமாய் வழங்கிவருகிறது. உயில் மூலமாய் சொத்தை விநியோகம் செய்யுமதிகாரம் ஹிந்துக்களுக்கும் உண்டென்று இந்தியா கவர்னமெண்டாராலும் மேலான நியாயஸ்தலத்தாராகிய பிரிவி கௌன்ஸில் அவர்களாலும் இந்தியன் ஹைகோர்ட்டுகளாலும் உறுதி செய்யப்பட்டிருக்கிறது. 6 மூ. இ.

அ 309; 1 மத. ஹை. கோ. ரி. 326; 3 பம். ஹை. கோ. ரி. 8: (1870-ம் ஹ்ஹதிய 21-வது சட்டமாகிய ஹிந்து உயில் ஆக்ட்டையும் பார்க்க.)

**692.** உயில் மூலமாய் விநியோகிக்கப்படும் சொத்தானது உயில் செய்பவனுக்கு சர்வ சுதந்திரமாய் பாத்தியப்பட்ட அவனுடைய தனியான சொத்தாக இருக்கவேண்டும். சொத்தில் முழு சுதந்திரமில்லாதவன் அதை உயில் செய்யக்கூடாது, 12 மூ. இ. அ. 88; 12 மது. 126; 22 மது, 9.

**693.** மிதாக்ஷரை லாவுக்குட்பட்ட அவிபக்த குடும்ப பாகஸ்தர்களுடைய சொத்தானது பாகிக்கப்படும் வரையில் எல்லோருக்கும் பொதுவாய் பாத்தியப்பட்டதாக இருக்கிறது. அவிபக்த குடும்பத்திலுள்ள ஒருவனுக்கு அக்குடும்ப சொத்தில் இவ்வளவு பங்கு அல்லது இன்ன குறிப்பிட்ட பங்கு இருக்கிறதென்று பாகமாகும் வரையில் நிஷ்கரிஷையாய்ச் சொல்ல முடியாது. ஆண் சந்ததியின்றி ஒரு பாகஸ்தன் இறந்துபோனால் அவனுடைய பங்கு பாத்தியமானது ஸர்வைவர்ஷிப்பு பாத்தியப்படி மற்ற பாகஸ்தர்களை உடனே சேர்ந்துவிடுகிறது. உயிலினுடைய பாத்தியத்தைக் காட்டிலும் ஸர்வைவர்ஷிப்பு பாத்தியமே முந்தினதாகவும் மேலானதாகவுமிருக்கிறபடியால் உயில் பிரயோஜனமற்றதாய் விடுகிறது. ஆகையால் அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்த பாகஸ்தனொருவனுக்கு தன் பங்குக்குள்ள சொத்தை உயில் மூலமாய் விநியோகம் செய்ய அதிகாரமில்லை. 8 மது. ஹை. கோ. ரி. 6; 7 இ. அ. 181; 5 பம். 48; 12 பம். 105; 7 மது. 357; 14 மது. 459; 16 மது. 353; 19 பம். 803; (1881-ம் ஹ்ஹதிய 5-வது சட்டம் 4-வது பிரிவையும் பார்க்க.)

**694.** ஆண்துபறறி பிள்ளை முதலிய சந்ததியாரோடு அவிபக்தமாயிருக்கும் தகப்பனும் குடும்பச் சொத்தில் எந்த பாகத்தையாவது உயில் மூலமாய் விநியோகம் செய்ய அதிகாரமில்லாதவனாக இருக்கிறான். 5 பம். 48; 7 இ. அ. 181; 8 மது. 89; 16 மது. 84; 16 மது. 353.

695. உயில் செய்யப்படுகிற சொத்தில் உயில் செய்பவனு க்கு பூர்ண சுதந்திரமிருக்கவேண்டி யிருக்கிறபடியால், அவிபக்த குடும்ப நிலைமையிலிருந்தும் விலகி யாதொரு பங்காளியுடனுஞ் சேர்ந்திராமல் தனித்திருப்பவனும், சுயார்ஜித சொத்தையுடைய வனுந்தான் உயில் மூலமாய் சொத்தை விநியோகம் செய்யலாம. 2 மூ. இ. அ. 54; 6 மூ. இ. அ. 309; 10 மது. 251; 24 மது. 429.

696. சொத்தை உயில் செய்ய அதிகாரமுள்ளவன் தன் னால் சமரக்ஷிக்கப்படவேண்டிய பெண்சாதி பிள்ளை முதலானவர் களுடைய ஜீவனும்சத்துக்கு வேண்டிய அளவு சொத்தை நிறுத் தி வைத்துவிட்டு பாக்கியை தன்னிஷ்டப்படி விநியோகப்படுத்திக் கொள்ளலாம். ஜீவனுமசம் பெறவேண்டியவர்களுக்கு ஒன்றும் வைக்காமல் எல்லா சொத்தையும உயில் செய்துவிட்டால் அச ஜீவனும்ச பாத்தியம் சம்பந்தப்பட்ட மட்டில் உயில் செல்லமாட் டாது, உயிலின்படி சொத்தை யடைந்தவன் ஜீவனும்சம் பெற வேண்டியவர்களின் ஜீவனுமசததையாவது ஜீவனும்சத்துக்கு வேண்டிய சொத்தையாவது கொடுக்கவேண்டும். 3 மது. ஹை. கோ. ரி. 8; 2 மூ, இ. அ. 54; 10 கல். 638; 12 மது. 267.

697. தங்களுக்கு பூர்ண சுதந்திரத்தோடு பாத்தியப்பட டுள்ள ஸ்திரீதன சொததுக்களை ஸதிரீகள் உயில் மூலமாய் விநி யோகம் செய்யலாம். (1 மது. 166; 2 மது. 333.)

வார்சு பாத்தியத்தாலடைந்திருக்கிற தாயசொத்துக்களில் ஸதிரீகளுககு பூரண சுதந்திரமில்லை யாகையால் அவைகள் விஷ யமாய் அவர்கள் உயில்செய்யக்கூடாது. 10 பம். 372; 17 பம். 690; 21பம்.190; 7 மது. 93.

698. பாகிக்கத்தகாத ஜமீன் சொத்துக்களில் ஜமீன்தா ர்களுக்கு முழுசுதந்திரம் இருப்பதாக இப்பால் தீர்மானிக்கப்ப ட்டிருக்கிறபடியால், அவற்றை அவர்கள் தஙகளிஷ்டப்படி உயில செய்யலாம். 15 இ. அ. 51; 22 மது 383 26 இ. அ 83.(பிட்டா பூர் ஜமீன் கேசு.)

699. உயில் மூலமாய் சொத்தை விநியோகிக்கிறவன் மன ப்பூர்வமான சமமதமுள்ளவனுகவும யுக்தா யுக்தெரிந்த பகுத் தறிவுடையவனுகவுமிருக்கவேண்டும். ஆகையால் யுக்தவயதை அடையாதவர்களான மைனர்களும் சித்தசுவாதீனமில்லாத பை த்தியகாரர் முதலியோர்களும் உயில் செய்யக்கூடாது. 25 இ. அ. 109; 25 கல். 824; 22 இ. அ. 171; 23 கல. 1.

700. உயிலானது எழுத்து மூலமாகவே ஏற்படவேண்டு மென்ற கட்டாயமில்லை. வாய்மொழியாகவும் ஏறபடலாம். 2 மது. ஹை. கோ. ரி. 37; 1 பம. 641; 12 மூ. இ. அ. 2.

701. ஆனலும் உயில் செய்பவன் அதை எழுத்து மூல மாய் ஏறபடுத்தி வைப்பதே உசிதமானதாகும். அப்படிப்பட்ட தஸதாவேசு ஒனறு இருந்தால் உயிலை ருசுபடுத்துவது மிக்க சுலபமாயிருக்கும. மேலும வீண் விவகாரங்களுக்கும தொல்லை களுக்கும இடமிராது.

702. எழுத்து மூலமாக ஏற்படும் உயிலானது இன்ன மாதிரியாகத் தான் எழுதப்படவேண்டுமென்ற அவசியமில்லை. அது எழுதிவைக்கிறவனால் கையெழுதது செய்யப்பட்டிருக்க வேண்டுமெனற அவசியமுமில்லை (3 பம. 7.) உயில் செய்கிறவ னுடைய எணணம இன்னதென்று சநதேகமனனியிலும் தெளி வாயும் தெரியக்கூடியதாக இருந்தாலே போதுமானதாகும். 2 இ. அ. 7; 17 இ. அ. 82; 18 கல். 1; 26 இ. அ. 194.

703. உயில் தஸ்தாவேஜில் கண்டிருககும வாசகங்கள் தெளிவாயிராமல சநதேகமாயும் சங்கதி அலலது உயில செய்த வனுடைய எண்ணம இன்னதென்று வியக்தமாய் அறிய முடி யாததாயுமிருநதால் அப்படிபபட்ட உயில் செலலமாட்டாது. 14 பம். 482; 17 பம். 351; 18 பம. 136; 21 பம். 646; 22 பம். 774; 14 கல். 222; 23 பம், 725.

704. உயில் தஸதாவேசுக்கு ஸ்டாம்பு வேண்டியதில்லை. மேலும் உயில் தஸ்தாவேஜானது கட்டாயமாய் ரிஜிஸ்டர் செய் யபபடவேண்டுமென்ற அவசியமுமில்லை. ஆனலும் உயில் தஸ

தாவேஜானது கெட்டுப்போகாமலும் பிறரால் அபகரிக்கப்பட்டுப்போகாமலும் இருக்கும்பொருட்டு அதை ரிஜிஸ்டர் செய்வித்துக்கொள்ளுவதே நலமாகும். மேலும் உயில் தஸ்தாவேஜானது எழுதிவைத்தவனால் டிஸ்திரிக்ட் ரிஜிஸ்திரார் ஆபீஸில் பந்தோபஸ்துக்காக வைத்துவைக்கவும்படலாம்.

**705.** உயிலானது செய்கிறவனுடைய மரணத்துக்குப் பிறகே ஊர்ஜிதத்துக்கு வரவேண்டியதாக இருக்கிறபடியால் ஒரு தரம் செய்த உயிலை பிற்பாடு இஷ்டப்படி ரத்து செய்யவும் வேறு உயிலை எழுதி வைக்கவும் ஒருவனுக்கு அதிகாரமுண்டு. ஒருவனால் பல உயில்கள் எழுதிவைக்கப்பட்டிருந்தால் கடைசியாய் எழுதிவைக்கப்பட்ட உயிலே ஸ்திரமானதாகும்.

**706.** எழுத்து மூலமாய் ஏற்பட்ட உயிலானது மற்றொரு எழுத்து மூலமான தஸ்தாவேஜினாலேயே ரத்து செய்யப்பட வேண்டுமென்ற அவசியமில்லை. வாய்மொழியாகவும் ரத்து செய்யப்படலாம். 4 இ. அ. 228; 3 கல். 426.

**707.** உயில் மூலமாய் சொத்தைப் பிறனுக்குக் கொடுக்கும் விஷயத்தில் அவன் அதை இன்ன விதமாகத்தான் அடைந்தனுபவிக்கவேண்டுமென்றும் அவனுக்குப்பின் அச்சொத்து அவனுடைய கிரமமான வாரசுகளுக்குப் போகாமல் இன்னாருக்குத்தான் சேரவேண்டுமென்றும் உள்ள சட்ட விரோதமான நிபந்தனைகளை உயிலில் ஏற்படுத்தக்கூடாது. மேலும் சொத்தை யடைகிறவர்கள் அதை விநியோகிக்காமல் அனுபவித்து வரவேணுமென்றும், அவர்கள் அதைத்தங்களுக்குள் பாகம்செய்து கொள்ளக்கூடாதென்றும், சொத்தின் வருமபடியை செலவழிக்காமல் சேர்த்திவைத்து வரவேண்டுமென்றும் உள்ள இவ்வாறான நிபந்தனைகளும் சட்டவிரோதமானதாக இருக்கிறபடியால் இப்படிப்பட்ட நிபந்தனைகளை உயிலில் ஏற்படுத்தியிருந்தால் அவ்வித ஷரத்துக்கள் இல்லாததுபோலவே உயில் பாவிக்கப்படும். அதாவது உயிலின்படி சொத்தை யடைகிறவன் அவ்வித நிபந்தனைகளுக்குக் கட்டுப்படாமலே சொத்தை யடைந்து அனுபவிக்

ம். 492; 19 பம். 647; 15 இ. அ. 149; 25 கல். 405; 30 கல். 21.

**712** உயிலின்படி சொத்து கிடைக்கவேண்டுமென்று தாவா செய்கிறவன் உயிலின்படி சொத்து கிடைக்கவேண்டிய காலம் முதல் பன்னிரண்டு வருஷங்களுக்குள்ளாக தாவா செய்யவேண்டும். (லிமிடேஷன் ஆக்டு 2-வது ஷெடியூல் 123-வது

---